# கோயம்புத்தூர் மாவட்டத் தொல்லியல் கையேடு



பதிப்பாசிரியர்

**தி.ஸ்ரீ. ஸ்ரீதர்,** இ.ஆ.ப.

*சிறப்பு ஆணையர்*

உதவி பதிப்பாசிரியர்கள்

முனைவர் ர. பூங்குன்றன்

பெ. கௌதமபுத்திரன்

வெளியீடு

தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை

**2005**

# BIBLIOGRAPHICAL DATA

| | |
|---|---|
| Title | : **Coimbatore Mavattat Tholliyal Kaiyedu** |
| Editor | : Spl. Commissinor |
| Copy Right | : T.N. State Dept. of Archaeology |
| Subject | : **History** |
| Language | : Tamil |
| Edition | : First |
| Publication No. | : 159 |
| Year | : 2005 |
| Type Point | : 11 |
| No. of Pages | : viii + 170 |
| Paper Used | : 80 Gsm Maplitho |
| Type Setter | : Dev Designing & Printing |
| Printer | : Pavai Printers<br>No.17, Jani Jan Khan Road<br>Rayapettah, Chennai - 14 |
| Publisher | : **State Dept. of Archaeology**<br>Tamizh Valakam, Halls Road<br>Egmore - 600 008 |
| Price | : Rs.41/- |

# பதிப்புரை

தமிழகத்தில் ஒவ்வொரு ஊரிலும் தொல்லியல் வரலாற்றுச் சான்றுகளான கல்வெட்டுகள், சிற்பங்கள், சுவடிகள், காசுகள், பண்டையப் பானை ஓடுகள், புதைமேடுகள், ஈமச்சின்னங்கள், கோட்டைகள், கோயில்கள், பாலங்கள், மண்டபங்கள், மசூதிகள், தேவாலயங்கள் எனவுள்ள பல்வகைச் சான்றுகளில் குறைந்தது ஒன்றாவது இருக்கின்றன. இச்சான்றுகள் குறித்த ஆய்வுகள் தமிழகம் என்று பொதுப்படையாக நிகழும்போது ஆய்வின் கால எல்லை, நூலின் அமைவு ஆகியவை காரணமாக தேவைப்படுபவை மட்டுமே கருத்தில் கொள்ளப்பட்டு ஏனையன விடுபட்டுப் போகின்றன. இதனால் ஒவ்வொரு ஊரிலும் உள்ள தொல்பொருட்களின் சிறப்பு அறியப்படாமலும் பொதுமக்களிடையே விழிப்புணர்வு ஏற்படாமலும் அவை அழிந்து போகின்றன. எனவே ஆய்வுகள் மாநில அளவில் இல்லாது வட்டார அளவில் தொடங்குவது அவசியமாகிறது

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை ஊர்தோறும் பொதுமக்களிடையே தொல்லியல் விழிப்புணர்வு ஏற்படுவதற்காக மாவட்ட அளவிலான தொல்லியல் அலுவலகங்கள், அகழ்வைப்பகங்கள் ஆகியவற்றை ஏற்படுத்தியுள்ளதோடு மாவட்ட அளவிலான தொல்லியல் கையேடுகளையும் வெளியிட்டு வருகிறது. இதுவரை விழுப்புரம், திருநெல்வேலி, திருவாரூர், விருதுநகர் ஆகிய மாவட்டங்களுக்கான தொல்லியல் கையேடுகள் இத்துறையால் வெளியிடப்பட்டுள்ளன. இவ்வரிசையில் இப்பொழுது கோயம்புத்தூர் மாவட்டத் தொல்லியல் கையேடு வெளிவருகிறது.

பண்டைய நாட்டுப் பிரிவான கொங்கு நாட்டில் அமைந்துள்ள கோயம்புத்தூர் மாவட்டம், வளமான தொல்லியல் சான்றுகளை உடையது. இம்மாவட்டத்தில் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையின் பதிவு அலுவலர் அலுவலகம், தொல்லியல் அலுவலர் அலுவலகம், அகழ்வைப்பகம் ஆகியவை அமைக்கப்பட்டதின் பிறகும், பேரூர், ஆனைமலை, போளுவாம்பட்டி ஆகிய இடங்களில் அகழாய்வுகள் இத்துறையால் மேற்கொள்ளப்பட்டதின் பிறகும் ஏராளமான கல்வெட்டுகள், தொல்பொருட்கள், வரலாற்றச் சின்னங்கள் ஆகியவை ஆய்வுலகிற்கு அறியத் தரப்பட்டுள்ளன.

தொல்பழங்காலப் பாறை ஓவியங்கள், கற்காலக் கருவிகள், பெருங்கற்சின்னங்கள் எனத் தொடங்கி ரோமானியக் காசுகள், பானை ஓடுகள், சூது பவள மணிகள், சுடுமண் பொம்மைகள், நடுகற்கள், வணிகர்குழுக் கல்வெட்டுகள், நல்ல செப்புத் திருமேனிகள், தமிழ் மன்னர் காசுகள் எனப் பல்வேறு தொல்பொருள்கள் இம்மாவட்டத்தில் கிடைத்துள்ளன. இங்கு கொங்குச் சோழர, கொங்குப் பாண்டியர், கங்கர், போசளர் எனப் பல்வேறு அரச மரபினரும் ஆட்சி செய்துள்ளனர்.

இக்கையேடு கோயம்புத்தூர் மாவட்டத்தின் புவியியல், தொல்பழங்காலம், வணிகச்சிறப்பு, அரசியல் பின்னணி, நாட்டுப் பிரிவுகள், நீர்ப் பாசன வசதிகள், தொழில் குழுக்கள், சமயங்கள் ஆகியவை குறித்த செய்திகளைத் தொகுத்துக் கூறி மாவட்டத்தில் உள்ள ஊர்களின சிறப்புக்களை எடுத்துக் கூறுகிறது. பிற்சேர்க்கையில் தொல்சிறப்புக்கள் வாரியாக ஊர்களின் பட்டியல்களும் இன்னும் பிறவும் தரப்பட்டுள்ளன.

இக்கையேட்டினை உருவாக்கியதில் முனைவர் ர. பூங்குன்றன், பதிவு அலுவலர் (ஓய்வு) மற்றும் திரு பெ. கௌதமபுத்திரன், தொல்லியல் அலுவலர், கோவை ஆகியோர் பணி பாராட்டுதலுக்குரியதாகும்.

தொல்லியல் ஆய்வாளர்களுக்கும், ஆர்வலர்களுக்கும், மாணவர்களுக்கும், பொது மக்களுக்கும் இக்கையேடு நன்கு பயன்படும் என்று உறுதியாக நம்புகின்றேன்.

இத்துறையின் வெளியீடுகளுக்கு நிதியுதவி நல்கி பணிகளை ஊக்குவித்து வரும் தமிழ்நாடு அரசிற்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

23-2-2005
சென்னை - 113

சிறப்பு ஆணையர்

# உள்ளடக்கம்

# புவியியல், சுற்றுச்சூழல்

கோவை மாவட்டம் குறிஞ்சி நிலமும் முல்லை நிலமும் நிறைந்த பகுதியாக விளங்கியது. இம்மாவட்டத்தின் மேற்கெல்லையாக விளங்குவது மேற்குத் தொடர்ச்சி மலையே ஆகும். இம்மலையின் தெற்குப்புறத்தில் கொடைக்கானல் மலை உள்ளது. இம்மலையில் ஏழு ஆண்டுகளுக்கு ஒரு முறை பூக்கும் குறிஞ்சிமலர் நிறைய கிடைக்கும். மேலும் இங்கு விளையும் தேக்கு, சந்தனம் ஆகிய மரவகைகள் சங்ககாலந் தொட்டு அந்நியச் செலவானியை அளித்து வருகின்றன. சென்ற ஆண்டு கொடைக்கானல் மலையில் தாண்டிக்குடி என்ற ஊர் அருகில் நடைபெற்ற அகழாய்வில் கார்னீலியன் மணிகள், பளிங்கு கல் மணிகள் ஆகியவை கிடைத்துள்ளன. பெருங்கற்சின்னத்திற்குரிய தாழிகள், கருப்பு சிவப்பு பானைகள் கிடைத்துள்ளன. இந்த உயரத்தில் (சுமார் 3000 அடி) மிளகு விளையும் சுற்றுச்சூழல் (Ecology) இருந்த நிலையில் மிளகு விளைச்சலும், வியாபாரமும் நடந்தன. அதனால் இந்த உயரத்தில் மக்கள் குடியிருப்பும் கொங்குச்சமவெளி மக்களுடன் அவர்கள் பொருளியல் தொடர்பும் குறிப்பிடத்தக்கன.

கொடைக்கானலை அடுத்துள்ள மூணாறு பகுதியில் பல்வேறு தொல்லியல் சான்றுகள் கிடைத்தவண்ணம் உள்ளன. பெருங் கற்சின்னங்கள், தொல் பழங்கால ஓவியங்கள் அவற்றில் குறிப்பிடத்தக்கவை. உடுமலை மூணாறு பெருவழியில் மறையூர் என்ற ஊர் அருகில் உள்சாய்ந்து நிற்கும் இருபது அடி உயரப் பாறையில் பதினைந்தடி உயர கொற்றவையின் ஓவியம் செவ்வண்ணத்தில் வரையப்பெற்றுள்ளது. கொற்றவையைச் சுற்றி நூற்றுக்கணக்கான மான்கள் வரையப்பெற்றுள்ளன. மான்களும் செவ்வண்ணத்தில் வரையப்பெற்றுள்ளன. இந்தத் தொல்பழங்கால ஓவியங்கள் 7000 ஆண்டுகளுக்கு முன்வரையப்பெற்றவை. அதனால் பண்டைய மலை வாழ்மக்கள் (வேட்டுவர்கள்?) கொற்றவையை வழிபட்டுள்ளனர்.

கொற்றவை வேட்டுவர் வாழ்வில் பெற்றிருந்த செல்வாக்கினை சிலப்பதிகார வேட்டுவ வரியில் காணலாம்.

மூணாறு பகுதியை அடுத்து ஆனைமலைப்பகுதி அமைந்துள்ளது. இம்மலையிலும் இயற்கை வளம் பண்டை மக்களின் செல்வச் செழிப்பிற்குக்காரணமாயிருந்தது. இப்பகுதியிலும் தேக்கு, சந்தனம், அகில் முதலியன பணம் காய்க்கும் மரங்களாக விளங்கின. 'கடற்றாரமும் மலைத்தாரமும்' சேரனுக்கு வருவாய்களாக விளங்கின(பதிற்றுப்பத்து-59). கடல் தாரம் என்பது கடல் மூலம் வந்த வருவாயினையும், மலைத்தாரம் என்பது மலை மூலம் வந்த வருவாயினையும் குறிக்கும். மலைபடுபொருள் மூலம் கிடைத்த வருவாயில் மிளகு மூலம் கிடைத்த வருவாய் தலையாயது. 'குடமலை பிறந்த கறியும் ஆரமும்' என்று பட்டினப்பாலை ஆசிரியர் குறிப்பிடுவது மிளகையும் சந்தனத்தையும் ஆகும்.

ஆனைமலையை உம்பற்காடு என்று பதிற்றுப்பத்து கூறும். யானைகள் நிறைந்த காடு என்ற பொருளில் இப்பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும் என்று தமிழ் நாட்டு வரலாற்றாய்வாளர்கள் கருதுகின்றனர். யானையைப்பழக்கி விற்பதும், யானைத் தந்தங்களை விற்பதும் பண்டைக்காலத்தில் வழக்கத்திலிருந்தது. யானை வாணிகப்பண்டமாக விளங்கியது என்பது இன்னும் பழங்குடிகளிடையில் நிலவிவரும் வழக்குச் சொல்லால் உறுதிப்படுகின்றது. கோவை மாவட்ட மலை வாழ்மக்கள் யானையைப் 'பண்டம்' (Commodity) என்றே இன்றும் கூறுவது எடுத்துக்காட்டத்தக்கது. (கொங்குச் சமவெளி மக்கள் மாட்டினைப் 'பண்டம்' என்று கூறுவதையும் இந்தப் பின்னணியில் வைத்துப் பார்க்க வேண்டும். யானையை வசப்படுத்தும் முறையும் வெள்ளருகம்பாளையம் தொல்பழங்கால ஓவியத்தில் வரையப்பெற்றுள்ளது. மந்திர நடனம் (Magical Dance) மூலம் யானை, மான் ஆகிய விலங்குகளை தன் வசப்படுத்த முடியும் என்று தொல் பழங்கால மக்கள் நம்பினர் என்பதற்கு இந்த ஓவியங்களே சான்று. மேற்கில் கன்னுவன்காட்டுப்பகுதிகளில் வாழும் பழங்குடியினர் 'மான் பாட்டு' என்ற நடனமாடுகின்றனர். இது தொல் பழங்கால எச்சமாக இருக்கலாம்.

ஆனைமலைக்கும் வெள்ளியங்கிரி மலைக்குமிடையில் பாலக்காட்டுக்கணவாய் அமைந்துள்ளது. இக்கணவாய் பண்டைய கொங்கு வரலாறு, பண்பாடு, பொருளியல் ஆகியவை உருவாவதற்குப் பெரும் பங்குவகித்தது. இக்கணவாய் சேரநாட்டிற்கும், கொங்கு நாட்டிற்குமிடையில் பண்டைக்காலந்தொட்டு இன்று வரை நெடிய தொடர்பு உருவாவதற்குக் காரணமாய் இருந்தது.

வெள்ளியங்கிரி மலைப்பகுதி; தொல் பழங்கால ஓவியங்கள், சோழர்காலப் பெருவழி, பெருங்கற்சின்னங்கள் தொல்லியல் சின்னங்கள் நிறைந்தபகுதி. இந்த மலையின் அடிவாரத்தில் உள்ள 'சாடிவயல்' என்ற இடப்பெயர் இடைக்காலக்கல்வெட்டுகளில் குறிக்கப்பெறுகின்றது. இது பெரும்பாலும் முதுமக்கள் தாழியின் அடிப்படையில் உருவான பெயராக இருக்கலாம்.

வெள்ளியங்கிரி மலைஉச்சியில் உள்ள வெள்ளியங்கிரி ஆண்டவர் கோயில் ஒரு குகையில் அமைந்துள்ளது. இக்குகைத் தெய்வம் அம்மலையில் வாழும் இருளர்களின் தெய்வமாக இருந்து கொங்கு மக்களின் தெய்வமாக மாற்றம் பெற்றுள்ளது. வெள்ளியங்கிரி ஆண்டவரும், தொல் பழங்கால ஓவியமும் இப்பகுதி மக்களால் வழிபடப் பெறுகின்ற தெய்வங்கள். இக்கோயில்களுக்கு பெண்கள் செல்லக்கூடாது. மலைகளில் உள்ள ஆண் தெய்வங்கள் வேட்டுவர்சமூகத்திலிருந்து உருவானதால் வழிபாட்டில் பெண் விலக்கு ஏற்பட்டது. நீலகிரி தொதவர்களிடையிலும் இப்பழக்கம் ஏற்பட்டது. கால்நடை வளர்ப்பு சமூகத்தில் பெண் இரண்டாம் நிலையிலேயே வைத்தெண்ணப்பெற்றாள்.

கோவை மாவட்டத்தில் உள்ள மலைகளில் சமவெளி மக்களின் மாடுகள் மேய்க்கப்பெறுகின்றன. மலைகளிலேயே பட்டிபோட்டு தங்க வைக்கின்றனர். அந்த மாட்டு மந்தைகளைப் பாதுகாக்கும் பொறுப்பு மலையில் வாழும் புலையர்கள் என்ற பழங்குடியினரிடம் ஒப்படைக்கப்பெற்றுள்ளது. அவர்கள் மாட்டுடன் இரவில் தங்கியிருக்கும் இடத்திற்குப் 'பட்டி' என்றும், மாடுகள் தண்ணீர் அருந்தும் இடத்திற்கு 'மடை' என்றும் இடப்பெயர் கூறப்பெறுகின்றது. கோவை மாவட்டத்து

மலைப்பகுதிகளில் நூற்றுக்கு அதிகமான மாட்டுப்பட்டிகளும், நூற்றுக்கணக்கான மடைகளும் உள்ளன.

கொங்கு மலைகள் மட்டுமின்றிக் கொங்குச் சமவெளியிலும் கால்நடை வளர்ப்பே மேலோங்கி நின்றது. கோவை மாவட்டத்தின் வடபுறத்தில் நீலகிரி மலையில் உள்ள வெள்ளரிக்கோம்பையில் உள்ள எழுத்துக் கல்பாறையில் உள்ள தொல்பழங்கால ஓவியத்தில் காங்கேயம் காளையை நினைவுபடுத்தும் காளை உருவம் வரையப்பெற்றுள்ளது. கோவை மாவட்டத்துச் சுற்றுச்சூழல் கால்நடை வளர்ப்பிற்கு உகந்ததாக உள்ளது. இப்பகுதியின் தரைப்பகுதி சிறு சிறு ஓடைக்கல் கலந்த பூமியாக இருப்பதால் ஈரப்பசையைப் பாதுகாத்து வைத்திருக்கின்றது. முற்காலத்தில் கால்நடைக்குரிய தீவனமான புல் நன்கு வளர்ந்தது. அதனால் கால்நடை வளர்ப்பு இங்கு சிறப்புற்றிருக்க வேண்டும். அண்மையில் கோவை மாவட்டம் அவினாசி வட்டம் காமநாய்க்கன்பாளையத்தில் கால்நடைகளின் கல்மாறி(Fossil) புதைந்து கிடப்பது கண்டுபிடிக்கப் பெற்றது. இதன் வயது 20,000 ஆண்டுகளாகலாம் என்று கல்மாறி நிபுணர்கள் குறிப்பிடுகின்றனர். அதனால் இப்பகுதியில் கால்நடை வளர்ப்பு சில ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக நிகழ்ந்து வந்திருக்கவேண்டும் எனலாம்.

பல்லாயிரம் ஆண்டுகளாகக் கால்நடை வளர்ப்பில் ஈடுபட்ட மக்கள் எருது வழிபாட்டில் ஈடுபட்டிருந்தனர் என்பதற்கு நரசிபுரம் பெருங்கற்சின்னத்தில் கிடைத்த காளை களிமண் பொம்மையும், போளுவாம்பட்டியில் கிடைத்த மாட்டின் செப்பு உருவமும் சான்றாகும். கால்நடை வளர்ப்பு இன்று வரை கோவை மாவட்டத்து ஊரக மக்கள் வாழ்வில் பொருள் ஈட்டும் பொருளியல் நடவடிக்கையாக விளங்குகின்றது. கால்நடை வளர்ப்பிலும் மாட்டின் மீதும் இம்மக்கள் வைத்திருக்கும் ஈடுபாடு பட்டிப்பொங்கல் (மாட்டுப்பொங்கல்) சடங்கில் தெளிவாகப் புலப்படும். தொடர்ந்து கால்நடை வளர்ப்பில் ஈடுபட்ட மக்கள் பெருங்கற்சின்னங்களை உருவாக்கும்போது கால்நடையோடு தொடர்புடைய சடங்குகளைச் செய்தனர். கால்நடை வளர்ப்புடன் புஞ்சை வேளாண்மையும் செய்தனர். கோயில்பாளையம், கொடுமணல் ஆகிய ஊர் அகழாய்வுகளில் சோளமும், கேழ்வரகும் (சங்ககாலம்)

கிடைத்தன. 2002ஆம் ஆண்டில் பேரூரில் நம் துறை நடத்திய அகழாய்வில் சேகரித்த மகரந்தத் தூளினை ஆய்வு செய்தபோது அங்கே சாமை, தினை வரகு ஆகிய புஞ்சைப் பயிர்களைப் பயிர் செய்தனர், என்று தெரிய வருகின்றது.

'மங்கலம்' (அவினாசி வட்டம்)) என்ற ஊருக்கருகில் ஒரு பெருங்கற்சின்ன பானை ஓட்டில் ஒட்டியிருந்த மகரந்தத்தூளை ஆய்வு செய்தபோது அது தென்னை அல்லது கமுகு ஆக இருக்கவேண்டும் என்று கருதுகின்றனர். பெரும்பாலும் கமுகு (பாக்கு)ன் மகரந்தமாக இருக்கலாம். சங்க இலக்கியத்தில் முல்லைத்திணையின் உணவினைக் குறிப்பிடும்போது கொள்ளு, வரகு, அவரை, துவரை ஆகிய தானியங்கள் குறிக்கப்பெறுகின்றன. கோவை மாவட்டத்தில் 'கடல் நீலப்பச்சைக் கல்' மிகுதியாகக் கிடைத்தது. மேலும் பளிங்குக்கல் கிடைத்தமைபற்றி பதிற்றுப்பத்து கூறுகிறது. டாலமி கூறும் 'பௌனாட' என்பது கடல் நீல பச்சைக்கல் கிடைக்கும் பகுதியாகும். இது கோவை மாவட்டத்து பொங்கலூர் (பொன் கல்லூர்) ஆகலாம் என்பர். கோவை மாவட்டத்துத் திருமுருகன்பூண்டியில் உள்ள ஒரு கல்வெட்டு மீன் படுசுனையும் தேன்படு வரையும் மான்படு காடும் பொன்படு குட்டமும் என்று கூறுகின்றது. இக்கல்வெட்டில் பயின்று வரும் *பொன்படுகுட்டமும்* என்ற வாசகம் கோவை மாவட்டத்தில் மட்டும் குறிக்கப்பெறுவது. அதனால் கனிம வளம் வருவாய் அளிக்கும் நிலையில் தொடர்ந்து சோழர் காலத்திலும் நிலை பெற்றிருந்தது என்பது உறுதிப்படுகின்றது. இந்தப் பொன்வளம் பிரித்தானியர் காலம் வரை தொடர்ந்து நிலை பெற்றிருந்தது.

கனிமங்களில் இரும்பு தலைமை சான்ற கனிமமாக விளங்கியது. கோவை மாவட்டத்து ஆறுகளிலும், மலைகளிலும் கிடைத்த இரும்புத்தாதுவினை உருக்கிப்பிரித்தெடுத்து இரும்புக் கருவிகளைச் செய்து ரோமானியவணிகர்களுக்கு விலைக்கு விற்றனர். அண்மைக்காலம்வரை ரோமானியர்கள் சீனத்து இரும்பினை தமிழ்நாட்டு வழியாக வாங்கிச் சென்றார்கள் என்று கருதினர். ஆனால் அண்மைக்காலக் கண்டுபிடிப்புகளால் இரும்புப்பொருட்களை ரோமானியர்கள் தென்னிந்தியாவிலிருந்து நேரடியாக வாங்கிச்சென்றனர்

என்பது உறுதிப்படுகின்றது. இரும்பு உருக்கும் தொழில் பெருங்கற்காலத்திலிருந்து நடைபெற்று வருகின்றது. பெருங்கற்சின்னம் உருவாக்கும் வழக்கமும், இரும்பு உருக்கும் தொழிலும் ஒன்றுடன் ஒன்று பின்னிப்பிணைந்து எழுச்சிபெற்றன. கொடுமணலில் 2300 ஆண்டுகட்கு முன் உருவாக்கப்பெற்ற இரும்பு ஊதுலை கண்டுபிடிக்கப் பெற்றது. அது கொண்டு கோவை மாவட்டத்திலும் இத்தகைய ஊதுலை உருவாக்கப்பெற்றிருக்க வேண்டும் எனலாம். இரும்புத்தொழில் பிரித்தானியர்காலம் தொடங்கும் வரை பண்டைய முறையிலேயே நடைபெற்றுவந்தது. இப்பகுதியில் பெருங்கற்சின்னங்களில் நூற்றுக்கணக்கான இரும்புக்கருவிகள் கண்டுபிடிக்கப்பெற்றன. அவற்றில் 90% போர்க்கருவிகள் என்பது குறிப்பிடத்தக்கது.

கோவை மாவட்டத்து ஆறுகள் காட்டாறுகள். அவற்றில் அடிக்கடி திடீர் வெள்ளம் வருவதும் பொருள் சேதம் உயிர்ச்சேதம் ஆகியவற்றை ஏற்படுத்துவதும் வாடிக்கையானது. இவ்வாறுகளின் நீரை வேளாண்மைக்குப் பயன்படுத்தும் முயற்சி கடந்த 1000 ஆண்டுகளாகத் தொடர்ந்து நடைபெற்று வருகின்றது. சோழர் காலத்தில் அந்நாளைய நீரியல் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி நீரை வேளாண்மைக்குப் பயன்படுத்தினர். தொடர்ந்து நடைபெற்ற நீர்ப்பாசன முயற்சிகள் குறிப்பிடத்தக்கது. சென்ற நூற்றாண்டில் பல அணைகள் கட்டப்பெற்றன. அதன் விளைவாக கோவை மாவட்டத்தின் தென்மேற்குப்பகுதி நீர் வளமிக்க பகுதியாக மாற்றமடைந்தது.

கோவை மாவட்டத்து மனிதன் சிந்திக்கத் தொடங்கிய காலம் முதல் இயற்கையையும், சுற்றுச்சூழலையும் மாற்றியமைக்க முயற்சி செய்தான். அந்த முயற்சியின் வீச்சு சோழர் காலத்தில் மிகுதியாயிற்று. அதனால் பழங்குடிகள் காடழிப்பிற்கு எதிர்ப்பு தெரிவித்துள்ளனர். அந்த எதிர்ப்பு 'சோழன் பூர்வ பட்டயத்தில்' விவரிக்கப்பெற்றுள்ளது. கோவை மாவட்டத்துத் தற்கால மனிதன்; இயற்கையை அழிப்பதன் மூலம் விலங்குகளின் கோபத்திற்கு ஆளாகிக்கொல்லப்படுவது அன்றாட நிகழ்ச்சியாக விட்டது. யானைகள் செல்லும் வழியில் பயிர் செய்யத் தொடங்கியதன் விளைவு தான் இது.

## துணை நூல்கள்

1. *சோழன் பூர்வபட்டயம்*
2. கா. இராஜன். *தொல்லியல் நோக்கில் சங்ககாலம்*
3. Madava Gadgil and Ramachandra Guha, This fissured Land: *Ecological History of India*
4. K. Rajan. *Archaeology of Tamil Nadu.* (Kongu country)
5. F.R. Alchin *Nelithic Cattle Keepers of Southern India.*

# தொல்பழங்காலம்

பண்டைய தமிழ் நாட்டில் பல தொல்குடிகள் (Lineage) நிலை பெற்றிருந்தன என்பதற்குப் பல சான்றுகள் கிடைத்துள்ளன. அச்சான்றுகளில் குறிப்பிடத்தக்கவை பெருங்கற் சின்னங்கள். விந்திய மலைக்குத் தெற்கில் உள்ள பகுதியில் தென்னிந்தியா முழுவதும் பெருங்கற் சின்னங்கள் பரவியுள்ளன. தொல்லியலாளர்கள் மகாராட்டிரம், விதர்ப்பா பகுதியில் காலத்தால் முற்பட்ட பெருங்கற்சின்னங்கள் கிடைத்துள்ளன என்றும் தெற்கில் தக்கணம், தமிழகம் ஆகிய பகுதிகளில் உள்ள பெருங்கற்சின்னங்கள் விதர்ப்பா பகுதி பெருங்கற் சின்னங்களைக் காட்டிலும் பிற்பட்ட காலங்களைச் சேர்ந்தவை என்றும் சுட்டிக் காட்டியுள்ளனர். விதர்ப்பாவில் கி.மு. 700 என்று முற்கால வரையறை செய்த தொல்லியலாளர்கள் தமிழகத்தில் கி.மு.300 என்று பெருங்கற்சின்னத்தின் தொடக்க வரலாற்றினைக் குறிப்பிட்டுள்ளனர்.

பெருங்கற்சின்னப் பண்பாட்டினர் இரும்பின் பயன்பாட்டினை நன்கு அறிந்தவர்கள் என்பது அவர்கள் ஈமச்சின்னங்களில் கிடைக்கும் தொல்பொருட்களில் இரும்பு 80 சதவீதம் அளவில் கிடைக்கின்றன என்பதால் விளங்கும். அதனால் இரும்புக் காலம் தமிழ்நாட்டில் பெருங்கற்சின்னப் பண்பாட்டினருடன் தொடங்குவதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இரும்புக் கருவிகளில் போர் தொடர்பான கருவிகளே மிகுதியும் கிடைக்கின்றன. வேளாண்மை தொடர்பான கருவிகள் மிகவும் குறைவாகவே கிடைக்கின்றன. மேலும் குதிரை, மாடு, எருமை, சேவல், நாய் போன்ற விலங்குகளில் எலும்புக் கூடுகள் கிடைக்கின்றன. கல்லரண், கல்பதுக்கை, குத்துக்கல், தாழி ஆகிய ஈமச் சின்னங்களில் இறந்தோருடைய எலும்புகளை வைத்துப் புதைத்துள்ளனர்.

பெருங்கற் சின்னங்களின் வகை மாதிரியைக் கொண்டு ஒவ்வொருவகை மாதிரியும் ஓர் இனத்திற்குரியது என்று கொள்ளப்

பெறுகின்றது. பெருங்கற்சின்னத்தில் கிடைக்கும் ஓடுகளைக் கொண்டு இனங்களைப் பகுக்கின்றனர். கருப்பு சிவப்பு பானை ஓட்டிற்கு ஓர் இனம் என்று கொண்டுள்ளனர். இந்த வகையான இனப்பகுப்பு முறையை ஏற்றுக் கொள்ளாதவர்கள் கூட பொதுவாக பெருங்கற் சின்னங்களுக்குரிய கருப்பு சிவப்புப் பானை ஓடு, வேளிர் மரப்பிற்குரியது என்று கருதுகின்றனர். எது எப்படி இருந்த போதிலும் பெருங்கற்சின்ன பண்பாடு தென்னிந்தியாவில் ஏற்பட்ட சமூகமாற்றத்தைச் சுட்டி நிற்கின்றது. இம்மக்கள் வேட்டையாடுதல், கால்நடை வளர்ப்பு, புஞ்சை வேளாண்மை, மீன் பிடித்தல் ஆகிய தொழில்களில் ஈடுபட்டனர் எனலாம். அல்லது தென்னிந்தியா முழுவதும் பல்வேறு தொழில்களில் ஈடுபட்ட மக்களிடையில் பெருங்கற்சின்னங்கள் பயன்படுத்தப்பட்ட நிலையும் ஏற்பட்டிருக்கலாம். ஒருசாரார் மேலை நாடுகளிலிருந்து இந்தப் பண்பாடு கடற்கரை ஓரமாக தென்னிந்தியாவிற்குள் பரவியிருக்க வேண்டும் என்பர்.

பெருங்கற்சின்னங்கள் தோற்றம் பரவல், தோற்றத்தோடு இரும்பு உற்பத்திற்கும் அதற்கும் உள்ள தொடர்பு, பயன்படுத்திய இனக்குழுக்கள் வாழ்க்கை முறை, சமயம் ஆகியவை பற்றிய ஆய்வுகள் ஒருமித்த கருத்துக்களை உருவாக்கவில்லை என்பது உண்மையே. ஆனால் பெருங்கற் சின்னங்கள் குடி வாழ்க்கையிலிருந்து குடித்தலைவர் ஆட்சி உருவான தன்மையை அறிய உதவும் கூறுகளைப் பெற்றுள்ளன என்பதை மறுக்க முடியாது. இரத்த உறவு கொண்ட சிறு சிறு குடிகளாக ஓரிடத்தில் தங்காமல் சுற்றி அலைந்த நாடோடிக் கூட்டத்தினருக்கு ஓரிடத்தில் தங்கித் தொழில் செய்யும் வாழ்க்கையை மேற்கொள்ளும் நிலை ஏற்பட்டதும் பெருங்கற்சின்னம் உருவான காலத்தில் தான்.

பெருங்கற்கால மக்கள் ஏற்கனவே குறிப்பிட்டதைப் போல உணவு உற்பத்தி செய்யும் தொழிலில் ஈடுபடத் தொடங்கிய நிலையில் இருந்தனர். அது புஞ்சை வேளாண்மை, கால்நடை வளர்ப்பு, மீன் பிடித்தல் ஆகிய பல வகைப்பட்ட தொழில்கள் ஆகலாம். இருப்பினும் இத்தொழில்களில் ஈடுபட்டவர்கள் தொடக்க நிலைத்தொழில் நுட்பத்தையே பயன்படுத்தினர். தொடக்கக் காலப் பெருங்கற் பண்பாட்டினர் இரும்பை உருக்கிக் கருவிகளைச் செய்து

பிறகுடியினருக்கும் பண்ட மாற்றில் விற்றனர். இவ்வாறு இரும்பை உருக்கிக் கருவிகள் செய்தவர்கள் குறிப்பிட்ட பகுதிகளில் பொருளியல் நிலையிலும், அதிகாரம் செலுத்தும் நிலையிலும் மேலோங்கி நின்றிருந்தனர். இவர்களே பண்டம் மாற்று தொடர்பு ஏற்படக்காரணம். பல்வேறு குடிகளிடையில் பண்ட மாற்று நடைபெறுவதற்கு வலைப்பின்னல் போன்ற இணைப்பு பெருங்கற் கால உருவாக்கம் காரணமாயிருந்தது. இருப்பினும் அது தொடக்க நிலையிலேயே இருந்தது. பிற நாட்டினர் தொடர்பு, மகதப் பேரரசு எழுச்சி ஆகியவை பெருங்கற் சமூக மக்களிடையில் பாராதூரமான வளர்ச்சியைக் கொண்டு வந்தன. அந்த வளர்ச்சி ஒரு வகையான சமூக மாற்றத்தைக் கொண்டு வந்தது. இந்த வளர்ச்சியையும், மாற்றத்தையும் படிப்படியாகக் கால அடைவில் வைத்துப் பார்க்கும் வகையில் தொல்லியல் சான்றுகள் கிடைக்கவில்லை. ஆனால் தீர்மானமான மாற்றங்கள் நிகழ்ந்ததை ஓரளவுக்கு உறுதிப்படுத்திக் கூற முடியும்.

பெருங்கற் சின்னங்களுக்குரியோர் ஆரம்ப நாட்களில் (கி.மு.1000) சிறுசிறு குடிகளாக அந்தந்தத் திணைகளில் தங்கள் வாழ்க்கையை நடத்தினர். கி.மு.500க்கு முன் பின் காலங்களில் சமவெளியில் தங்கும் வாழ்க்கையை மேற்கொண்டனர். வாணிகநகர வளர்ச்சியும் அரசு ஆக்கமும் தென்னிந்திய சமூகங்களுக்கிடையில் பெரும் மாற்றத்தைக் கொண்டு வந்தன. அதுவரையில் அன்றாடங் காய்ச்சிகளாக வாழ்ந்த பழங்குடிகள் பொருள் சேகரிக்கும் வாழ்க்கைக்கு மாறினர். இப்பொருட்கள் அந்நாளில் அக்கெமாணியர் அரசின் கிழக்கெல்லையிலிருந்த தட்சசீலத்திற்கு அனுப்பப் பெற்றன. தட்சசீல அகழ்வாய்வில் கி.மு.நான்காம் நூற்றாண்டையொட்டிய பாளநிலையில் கொங்குநாட்டுக் கடல் நீலப்பச்சைக் கற்கள் கிடைத்துள்ளன. இது கி.மு.5ம் நூற்றாண்டு முதல் கனிம வளக் கண்டுபிடிப்பு மூலம் பொருள் வளத்தை அளித்தது என்பதை உறுதிப்படுத்துகின்றது.

தென்னிந்தியாவில் பெருங்கற்சின்னங்கள் பரவலாகக் காணப்படுவது கனிமவளமும், பெருவழி வளமும் நிறைந்த பகுதிகளிலேயே ஆகும். மருதவளம் நிறைந்த பகுதிகளில் பெருங்கற்சின்னங்கள் குறைந்தே காணப்பெறுகின்றன. அதற்குரிய

காரணம் புலப்படவில்லை. கி.மு.5ம் நூற்றாண்டிலிருந்த தென்னிந்தியாவின் சில பகுதிகளில் மனித வளமும் பொருள் வளமும் கொழிக்கக் காரணம் வடநாட்டுப் பெருவழித் தொடர்பும், வாணிகத் தொடர்பும் ஆகும்.

பெருங்கற் பண்பாடு புதிய தொழில் நுட்பங்கள் அறிமுகமாக வழி செய்தது. இரும்பின் பயன்பாடு மிகுதியானதால் வேட்டை, போர் ஆகிய தொழில்களுடன் வேளாண்மை வளர வழி கோலிற்று. களைகொட்டு வேளாண்மை கலப்பை வேளாண்மைக்கு மாறுவதற்கு இரும்பு வழி வகுத்தது. காடு அழித்து நிலத்தைப் பயன்படுத்துவதில் இரும்பின் பயன்பாடு எந்த அளவுக்கு இருந்தது என்பது பற்றிக் கருத்து வேறுபாடுகள் உள்ளன. ஆனால் கலப்பை வேளாண்மை பெருங்கற்சின்ன காலத்தில் மக்கள் வாழ்க்கையில் ஊடுருவத்தொடங்கியது எனலாம். நீர்ப்பாசன வேளாண்மை பெருங்கற் சின்னக் காலத்தில் பெருமை பெற்றிருந்தது என்ற கருத்து ஆய்வுக்குரியது. பெருகற் சின்னங்களின் அருகில் அச் சின்னங்களை உள்ளடக்கி இன்று நிலைபெற்றுள்ள ஏரியும், குளமும் பெருங்கற்சின்ன மக்களால் உருவாக்கப் பெற்றிருப்பினும் அவை கால்நடை வளர்ப்பிற்குரிய கூவல்களே அன்றி வேளாண் நிலப்பாசனத்திற்கான நீர்நிலைகள் என்று கொள்வது கடினமே. பின்னாளில் வந்த மக்கள் வேளாண்மையைப் பெருக்கியபோது அந்த நீர் நிலைகளைச் செம்மைப்படுத்திப் பெரிதாக்கியிருக்கவேண்டும்.

தொடர்ந்து செய்த மனிதமுயற்சிகள் கனிம வளத்தில் கோவை மாவட்டம் மேலோங்க வழி வகுத்தது. தென்னிந்தியா முழுவதும் பரவியுள்ள பெருங்கற் சின்னங்களில் இருப்பிடங் களுக்கு அருகிலேயே கனிம சுரங்கங்கள் இருப்பது கண்டறியப் பெற்றன. கௌடில்யரின் அர்த்த சாஸ்திரத்தில் தென்னிந்தியா வழியாகச்செல்லும் தட்சினபதம் என்ற பெருவழி அருகில் பல கனிம சுரங்கங்கள் நிலை பெற்றிருந்தமை பற்றிக் குறிப்பிடப் பட்டுள்ளது. இந்தக் கனிம சுரங்கங்களில் வைடூரியம், பொன், கடல்நீலப் பச்சைகல், பளிங்குகல், பூனைக்கண்கல், சந்திரகாந்தக்கல், அகேட், ஜேஸ்பர் போன்ற கனிமங்கள் வெட்டி எடுக்கப்பெற்றன, இவை இப்பகுதி மக்களிடையே

பொருளியல் வளத்தைப் பெருக்கின. கனிமவளம், காட்டுவளம் ஆகியவை குறிப்பிட்ட பகுதியில் மட்டும் கிடைத்தன. அந்தப் பகுதி மக்கள் குடியாட்சி நிலையிலிருந்த குடித்தலைவரின் ஆட்சி நிலைக்கு மாறி வருவதைக் காணமுடியும்.

சங்க இலக்கியத்தில் ஆயர்கள் கல்மணிகளைத் தொகுப்பதும், வேட்டுவர்கள் மலைப் பகுதியில் பொன் மணி ஆகியவற்றைத் தொகுப்பதும் குறிக்கப்பெறுகின்றது. இது பெரும்பாலும் பெருங்கற் சின்னங்களில் முடிவுக் காலமாகலாம்.

## குறியீடு

கோவை மாவட்டத்தில் அகழ்வில் கிடைக்கும் ஓடுகளில் குறியீடுகள் கிடைப்பது பற்றிய குறிப்புகள் நமக்கு கிடைத்துள்ளன. இப்பகுதியில் கிடைக்கும் கருப்பு சிவப்புப் பானை ஓடுகளில் பல குறியீடுகள் பொறிக்கப்பெற்றுள்ளன. ஆனைமலையில் கிடைத்த ஒரு குறியீடு தாழியின் வாய்ப்புறத்தில் பொறிக்கப்பெற்றிருக்கின்றது. பேரூர் காளப்பட்டி, வீரபாண்டிபுதூர் வெள்ளலூர், கணியம்பூண்டி, ஆனைமலை ஆகிய இடங்களில் வெவ்வேறு குறியீடுகள் கிடைக்கின்றன.

இதுபோன்ற குறியீடுகள் தமிழகத்தில் பிறபகுதிகளிலும் கிடைத்துள்ளன. இந்தக் குறியீடுகளின் பொருள்பற்றி உறுதியாகக் கூறமுடியவில்லை. ஆனால் ஈமச் சின்னத்தில் வரையப்பெறும் குறியீடுகள் குறிப்பிட்ட குலத்தினைக் குறிக்கும் என்பது பின்வரும் செய்திகளால் உறுதிப் பெறும்.

இக்குறியீடுகளின் தனித்தன்மையும், அவை வெளிப்படுத்தும் பண்பாட்டுக் கூறுகளையும் கூர்ந்து உணர்ந்த தமிழ்ப் பல்கலைக்கழக கல்வெட்டியல் துறையினர் மேற்கொண்ட வல்லம், கொடுமணல் அகழாய்வுகளில் கிடைத்த குறியீடுகளைப் பதிவு செய்துள்ளனர். இக்குறியீடுகளை ஆய்வுக்குட்படுத்தியவர்கள் அத்தரவுகளின் அடிப்படையில் முடிவுகளைத் தந்துள்ளனர்.

கொடுமணல் அகழாய்வில் அகழ்ந்த குழிகளில் குறியீடுகள் பொறித்த பானை ஓடுகள் கீழ் அடுக்குகளிலும், தமிழ்ப் பிராமி எழுத்துப்

பொறித்தவை மேல் அடுக்குகளிலும் கிடைத்தன. தமிழ்ப் பிராமி எழுத்துப் பொறித்த பானை ஓடுகள் கிடைக்கத் தொடங்கியவுடன் குறியீடுகள் பொறித்த பானை ஓடுகளின் எண்ணிக்கை குறையத் தொடங்கியது என்பது இவ்அகழாய்வில் காணப்படும் ஓர் சிறப்பம்சமாகும். இந்நிகழ்வு தமிழ்ப் பிராமி எழுத்துக்குறியீடினின்று வளர்ச்சியுற்றதா அல்லது செய்திப் பரிமாற்றத்திற்குக் குறியீட்டினை விடச் சிறந்த கருவியாகத் திகழ்ந்த தமிழ்ப் பிராமி வரி வடிவம் உருவானதால் இவை வழக்கில் இருந்து மங்கிவிட்டனவா என்ற கேள்விகளை எழுப்பியுள்ளது. தமிழ்ப் பிராமி தோன்றியவுடன் இவற்றின் பயன்பாடு மங்கத் தொடங்கிவிட்டதால் இவை மக்களின் எண்ணத்தை வெளிப்படுத்தும் கருவிகளாகத் தமிழ்ப் பிராமி வடிவத்திற்கு முன் விளங்கியிருக்க வேண்டும் என்பதை இவ்வகழாய்வு நமக்கு உணர்த்துகிறது.

''அண்மைக்காலம் வரை இக்குறியீடு தொடர்பாக ஆய்வு செய்த ஆய்வாளர்கள் பானை செய்வோரின் குறியீடு, பானை உரியையாளரின் குறியீடு, குலக்குறியீடு, பண்டைத் தமிழ் வரி வடிவங்களே என்ற கருதுகோள்களை முன்வைத்துள்ளனர்.

இவற்றைக் குலக்குறியீடுகள் என்று எடுத்துக் கொண்டால் சிலவற்றை ஏற்கவும், சிலவற்றை மறுக்கவும் வேண்டியதாக உள்ளது. குலக்குறியீடு என எடுத்துக் கொண்டால் இக்குறியீடுகளை இரு நிலைகளில் வைத்துப் பார்க்க வேண்டியுள்ளது. அதாவது ஊர் இருக்கைப் பகுதிகளில் கிடைப்பவற்றை ஒருபுறமும் பெருங்கற்படைச் சின்னங்களில் கிடைப்பவற்றை மறு புறமும் வைத்து ஆய்வினை மேற்கொள்ள வேண்டியுள்ளது. காரணம் இவ்விரண்டு நிலைகளுக்கும் இடையே காணப்படுகின்ற ஒற்றுமை வேற்றுமைகளே ஆகும்.

ஈமச் சின்னங்களில் காணப்படும் குறியீடுகளை ஒரு குடும்பத்தின் குறியீடுகளாக வேண்டுமானால் எடுத்துக் கொள்ளலாம். ஆயினும் ஒரு குடும்பம் என்பதைவிட ஒரு கூட்டத்தின் குறியீடாக எடுத்துக் கொண்டால் மிகவும் ஏற்புடையதாக இருக்கும். ஏனெனில் ஒரே வகையான குறியீடு குறுகிய காலகட்டத்தில் பல

ஈமச்சின்னங்களில் கிடைத்துள்ளது. எடுத்துக்காட்டாகக் கொடுமணலில் இரு குறியீடுகள் மட்டுமே ஆறு ஈமச் சின்னங்களில் வருவதைப் பார்க்கலாம்.

ஊர் இருக்கைப்பகுதியில் கிடைக்கும் எண்ணற்ற குறியீடுகளைச் சித்திரக் குறியீடுகளாகவே கொள்வதா கருத்துக் குறியீடுகளாக கொள்வதா குலக் குறியீடுகளாக கொள்வதா அல்லது வரி வடிவங்களாகவே எடுத்துக் கொள்வதா என்பதில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் உள்ளன.

''கொடுமணல் அகழ்வுச் சான்றுகளின் அடிப்படையில் உருவான கருத்துக்களின் அடிப்படையிலும் குறியீடுகள் தன்மை, அளவு, வடிவம் ஆகியவற்றின் அடிப்படையிலும் இக்குறியீடுகள் தென்னகம் முழுவதும் பரவி இருப்பதாலும், குறிப்பாகத் தமிழகத்தில் அகழாய்வு செய்யப்பட்ட அனைத்து இடங்களிலும் இவை கிடைப்பதாலும், தமிழ்ப் பிராமி வரி வடிவங்களைப் போன்றே இவையும் இடமிருந்துவலமாக எழுதப்பட்டுள்ளதாலும், தமிழ்ப் பிராமி வரி வடிவத்திற்குரிய முக்கியத்துவத்தை இக்குறியீடுகளும் பெற்றுத் திகழ்வதாலும், குறிப்பிட்ட சில குறியீடுகள் மட்டும் ஈமச்சின்னங்களில் கிடைப்பதாலும், அத்தகைய சமயச் சின்னங்களில் எண்ணற்ற மதிப்புமிக்க தொல்பொருட்கள் கிடைப்பதாலும், தமிழ் பிராமி வரி வடிவம் வழக்கில் வந்தவுடன் இக்குறியீடுகளில் பயன்பாடு குறைந்துவிடுவதாலும், பானை ஓடுகள், நாணயங்கள், கல்வெட்டுக்கள் மற்றும் மோதிரங்கள் என எண்ணற்ற ஊடகங்களின் வாயிலாக இவை வெளிப்படுவதாலும் சங்க காலத்திற்கு முன்பிருந்தே அதாவது சிந்து சமவெளிப் பண்பாடு தொட்டு சில வடிவ மாற்றங்களுடன் தொடர்ந்து இவை இருந்துவந்துள்ள தாலும் இக்குறியீடுகளைச் சாதாரணக் கீறல்கள் என எந்தவொரு ஆய்வாளராலும் ஒதுக்கிவிட இயலாது. எனவே தமிழ்ப் பிராமி வரிவடிவம் தமிழகத்தில் பயன்பாட்டிற்கு வருவதற்கு முன்பாகவே இக்குறியீடுகள் சமகால மக்களின் எண்ணம் அல்லது கருத்துப் பரிமாற்றத்திற்குப் பயன்படுத்தப்பட்ட ஒருவகை வரிவடிவமே என இதை எடுத்துக்கொள்ள வேண்டியுள்ளது. தமிழகத்தில் இக்குறியீடுகள்

பரவலாகக் கிடைப்பதால் இத்தகைய நிலைமை இவை அடையப் பல்லாண்டு காலம் ஆகியிருக்கவேண்டும் என்பதும் புலனாகிறது. இவற்றைப் படித்து அதன் மூலம் தமிழக வரலாற்றை வளப்படுத்த இயலும் என்பதால் இனிவரும் காலங்களில் ஆய்வாளர்கள் இக்குறியீடுகளுக்கு முக்கியத்துவம் அளித்து முறைப்படி பதிவு செய்து வந்தால் இக்குறியீடு தொடர்பான செய்திகள் மேலும் வலுப்பெறும்.''

## ஆண்டனே கத்திகள்

இரண்டாண்டுகளுக்கு முன் ஆனைமலைக்கு அருகில் பெருமாள்கரடு என்ற மலை அடிவாரத்தில் ஆண்டனே கத்தி என்ற அழைக்கப்பெறும் வெண்கலக்கத்திகள் பத்திற்கு மேல் கண்டுபிடிக்கப்பெற்றன. இவ்வகைக் கத்திகள் இந்தியாவில் உத்திரபிரதேசம், ஆந்திரம் ஆகிய மாநிலங்களில் கிடைத்துள்ளன. தமிழ்நாட்டில், இராமநாதபுரம், செங்கல்பட்டு, வேலூர் ஆகிய மாவட்டங்களில் கண்டறியப் பெற்றுள்ளன. அண்மையில் ஆனைமலை அருகில் கிடைத்தவை அந்த வகையைச் சேர்ந்தவை ஆகும்.

இந்தக் கத்திகளின் அடிப்பகுதி ஆண்டனே என்ற பூச்சியின் மீசையைப் போல அமைந்திருப்பதால் இந்தப் பெயர் பெற்றது. இவை கி.மு.2000 ஆண்டிற்கு முற்பட்டவை என்றும் ஈரான் நாட்டிலிருந்து கொண்டுவரப்பெற்றன என்றும் கருதப் பெறுகின்றது.

## துணை நூல்கள்

1. தமிழக வரலாற்றுக்குழு, *தமிழ் நாட்டு வரலாறு*, தொல்பழங்காலம்.
2. சு. இராஜவேலு, கோ. திருமூர்த்தி, தமிழ் நாட்டு அகழாய்வுகள்.
3. K. Rajan, Archaeology of Tamilnadu (Kongu Country)
4. K. Rajan, Archaeological Gagettier.

# யவன வாணிகமும் பண்டைய பெருவழிகளும்

கோவை மாவட்டம்; பாலக்காட்டுக் கணவாயினை ஒட்டி அமைந்துள்ளதால் பண்டைநாள் யவன வாணிகர்கள் குமரி முனையைச் சுற்றிவந்து பின் கிழக்குக்கடற்கரையினை அடைவதற்குப் பதிலாக, விரைவில் அடைவதற்குப் பாலக்காட்டுக் கணவாயினைத் தேர்ந்தெடுத்தனர். மேலும் கொங்குநாடு கனிம வளம் மிக்க பகுதியாக விளங்கியமையால் இங்கு உற்பத்தி செய்யப்பெற்ற அழகு மணிகளையும், இரும்புக் கருவிகளையும் வாங்குவதற்காகவும் யவனர்கள் கொங்குநாட்டிற்கு வந்தனர். அவர்கள் இங்கு வாங்கிய பொருட்களுக்குப் பொற்காசுகளையும், வெள்ளிக்காசுகளையும் ஏராளமாகக்கொடுத்துவிட்டுச் சென்றனர். *இந்தியா முழுவதும் கிடைக்கும் ரோமானியக் காசுகளில் 70% கோவை மாவட்டத்தில் மட்டுமே கிடைத்துள்ளன.* பாலக்காட்டுக் கணவாய் அருகிலேயே ரோமானியக்காசுகள் கிடைக்கும் ஊர்கள் அமைந்துள்ளன. மேலும் இவ்வூர்கள் பாலக்காட்டுக் கணவாயிலிருந்து பிரிந்து சென்ற மூன்று பண்டைய பெருவழிகளில் அமைந்துள்ள தன்மையும் குறிப்பிடத்தக்கது. இந்தப் பெருவழிகள்; கி.மு.நான்காம் நூற்றாண்டிலிருந்து வழக்கத்திலிருக்க வேண்டும் என்பது கௌடில்யரின் அர்த்தசாத்திரத்தாலும், தட்சசீல அகழாய்வாலும் உறுதிப்படுகின்றது.

உரோமானியக் காசுகள் மட்டுமின்றிப் பண்டைக்காலத்தில் ªõO JìŠªðŸø °^F¬ó, è£²èÀ < (Punch marked coin) கிடைத்துள்ளன. ஆனால் அவை எண்ணிக்கையில் குறைவு. போளுவாம்பட்டி அகழ்வில் கி.பி.4ஆம் நூற்றாண்டு பாளநிலையில் முத்திரைக் காசுகள் கிடைத்துள்ளன. மேலும் சங்ககாலச் சேரர் காசுகள், இடைக்காலச் சேரர் காசுகள், இராஜராஜசோழன் காசுகள்,

போசளர்காசுகள் விஜயநகரக் காசுகள் மைசூர் உடையார் காசுகள், மதுரை நாயக்கர் காசுகள் எனப் பலமரபினர் காசுகள் கோவை மாவட்டத்தில் கிடைத்துள்ளன.

## தாவளம்

பெருவழிகளில் வணிகர்கள் தங்கிச் செல்வதற்கும் அங்கேயே வாணிகம் செய்வதற்கும் தங்குமிடங்கள்(தாவளங்கள்) உருவாக்கப்பெற்றன.

பாலக்காட்டுக் கணவாயிலிருந்து மூன்று பண்டைய பெருவழிகள் கிழக்கு நோக்கிச் சென்றன. அவற்றில் ஒன்று ஆனைமலை வடபூதி நத்தம், சி.கலையமுத்தூர், பழனி, திண்டுக்கல், மதுரை, திருத்தங்கல் வழியாக அழகன்குளம் சென்றடைந்தது. இரண்டாவது பெருவழி பேரூர், வெள்ளலூர், சூலூர், பல்லடம், காங்கயம், கரூர், உறையூர் வழியாகப் பூம்புகார் வரை சென்றது. மூன்றாவது பெருவழி; கோவை, அவினாசி, விசயமங்கலம், ஈரோடு, சேலம், ஏத்தாப்பூர், கள்ளகுறிச்சி, விழுப்புரம், திண்டிவனம் (ஓய்மாநாட்டுக்கிடங்கில்) வழியாக மாமல்லபுரம் சென்றடைந்தது. மூன்று பெருவழிகளிலும் குறிக்கப்பெற்ற கோவை மாவட்டத்து ஊர்களில் யவனக்காசுகள், கைவினைப்பொருட்கள் மிகுதியாகக் கிடைத்துள்ளன.

இடைக்காலக் கல்வெட்டுகளில் பல பெருவழிகள் வழக்கத்திலிருந்தமை பற்றிய குறிப்புகள் மிகுதியும் கிடைக்கின்றன. இராசகேசரிப் பெருவழி (இது மேலே குறிக்கப்பெற்ற பெருவழிகளில் இரண்டாவது), வீரநாராயணப் பெருவழி (இது முதலாவது பெருவழி) சோழமாதேவிப் பெருவழி சேரனை மேற்கொண்ட சோழப் பெருவழி, கொழுமம்பெருவழி, கொங்குகுலவல்லிவழி எனப் பல பெருவழிகள் இடைக்காலக் கல்வெட்டுகளில் குறிக்கப்பெறுகின்றன. ‘பர்டன் ஸ்டீன்’ அவர்கள் கொங்குநாட்டை; ‘பெருவழி நாடு’ என்று பொருத்தமாகவே குறிப்பிடுகின்றார்.

## யவன வாணிகம்

பாலக்காட்டுக் கணவாயில் மேற்குக் கரையிலிறங்கும் யவன வணிகர்கள் தமிழ்நாட்டு உள்பகுதி வாணிக நகரங்களுக்கும் கிழக்குக்

கடற்கரைப் பட்டினங்களுக்கும் செல்வதற்கு குமுரிமுனையைச் சுற்றிக் காலத்தை வீணாக்காமல் தமிழ்நாட்டு ஊர்களுக்கு விரைவில் சென்றடையமுடியும். அதனால் யவனர்கள் உள்நாட்டுப் பயணத்திற்குப் பாலக்காட்டுக் கணவாயினைப் பயன்படுத்தியிருக்கவேண்டும். அதன் விளைவாக மீகொங்கில் வெள்ளலூர், சூலூர், பொள்ளாச்சி, ஆனைமலை, வடபூதிநத்தம், சி.கலையமுத்தூர் ஆகிய ஊர்களில் யவனக்காசுகளும், அணிகலங்களும் மிகுதியாகக் கிடைத்துள்ளன. இவ்வூர்களில் உரோமப் பேரரசின் ஆரம்பகாலமன்னர்களின் காசுகள் மிகுதியாக கிடைக்கின்றன. ஆனைமலையில் கி.பி.முதல் நூற்றாண்டில் ஆட்சி செய்த டைபிரீயஸ் என்ற மன்னனின் வெள்ளிநாணயங்கள் நாற்பது கிடைத்துள்ளன. வடபூதி நத்தத்தில் 1500 வெள்ளி நாணயங்கள் கிடைத்துள்ளன. சி.கலையமுத்தூரில் 400 உரோமானிய வெள்ளிநாணயங்கள் கண்டெடுக்கப்பெற்றன. வெள்ளலூரில் 500க்கும் மேற்பட்ட உரோம நாணயங்கள் கண்டெடுக்கப்பெற்றன. இந்தியாவிலேயே 70% உரோமானியக் காசுகள் கோவை மாவட்டத்தில் மட்டும் கிடைத்துள்ளன. அதனால் உரோம வாணிகத்தில் பாலக்காட்டுக் கணவாய் பெற்றிருந்த சிறப்பிடத்தை அறியமுடியும். ஆனைமலை இக்கணவாயிலிருந்து பிரிந்து சென்ற பெருவழியில் அமைந்திருந்தமையால் வணிகவளம் கொழிக்கும் ஊராக எழுச்சி பெற்றது.

## தொல்குடியும் வாணிகமும்

குடிகள் வாணிகத்தினால் பொருள்வளம் மிக்க குடிகளாக உயர்ந்தன. அக்குடிகளில் தலைமைசான்ற குடும்பத்தினர் வாணிகத்தில் ஈடுபட்டு வருவாய் ஈட்டினர். வருவாயில் ஒரு பகுதியைக் குடியைச் சேர்ந்தவர்களுக்கும் ஒரு பகுதியைத் தங்கள் குடும்பத்திற்கும் வைத்துக் கொண்டனர். உம்பற்காடு, வெள்ளலூர் அவிநாசி, வடபூதநத்தம், பொள்ளாச்சி, அகிலாண்டபுரம் ஆகிய ஊர்களில் தொல்குடிகள் யவனருடன் வாணிகத் தொடர்பு வைத்திருந்தனர்.

## கிழார்

தொல்குடி வாழ்க்கையில் ஒவ்வொரு குடிக்கும் ஒரு தலைவன் இருந்திருக்க வேண்டும். அவன் அவைக்கூட்டங்களில் தலைமை

தாங்கித் திறம்பட நடத்துபவனாகவும், பூசல் காலங்களில் தலைமை ஏற்றுத்திறம்பட படை நடத்தி வெற்றி கொள்பவனாகவும் இருக்கவேண்டும். அத்தலைவன் ஆரம்பத்தில் தேர்ந்தெடுக்கப் பெற்றான். பின்னாளில் நியமிக்கப்பெற்றான். அவ்வாறு நியமிக்கப் பெற்றவன் குடும்பமே வழிவழியாகக் குடியின் தலைமைப் பொறுப்பில் நின்றது. அத்தலைவன் கிழான் எனப் பெயர் பெற்றான்.

பண்டைய தமிழகத்தில் நிலைபெற்றிருந்த கிழார் ஆட்சி முறை வடநாட்டில் உருவாகி நிலை பெற்றிருந்த காபதி ஆட்சி முறையுடன் ஒப்பிடத்தக்கதாய் உள்ளது. ‘காபதி’ என்பது தமிழில் ‘காவிதி’ என்று திரிந்து வழங்கியது. காபதி என்பவன் குடும்புத் தலைவன். காபதி ஆட்சி, கிழார் ஆட்சி அமைப்புடன் பல கூறுகளில் ஒத்துள்ளது. வடநாட்டுச் சமூக அரசியல் வளர்ச்சியைப் பற்றி நடைபெறும் ஆய்வு முடிவுகளைக்கொண்டு; சங்க காலக் கொங்கு அரசியல் வளர்ச்சியை விளங்கிக் கொள்ள முடியும். ஒப்பாய்வு மூலமும் ஆய்வு செய்து முடிவுகளை அறிய முடியும்.

தமிழ்நாட்டில் அரசியல் வரலாறு கிழார் எழுச்சியுடன் தொடங்குகின்றது. அந்நாளில் தமிழ்நாட்டில் நூற்றுக்கணக்கான கிழார்கள் சிறுசிறு பகுதிகளில் குடித்தலைவர்களாக ஆட்சி செய்தனர். மன்னன், வேள், வேந்தன் ஆகிய அதிகாரப்படி நிலைகள் மூலம் அரசியல் உருவாவதற்குமுன் கிழார் என்பவர் அரசியல் தலைவராக விளங்கினார். இந்தக்குடித் தலைவர்கள் கூறாக்கக்குடிகளின் தலைவர்கள்ஆவர், அவர்கள் ‘மூத்தோர்’ என்று அழைக்கப்பெற்றனர். இந்த மூத்தோர் குழுவினர் குடியின் உற்பத்தியையும், உற்பத்திப் பொருட்களின் பங்கீட்டையும் தங்கள் அதிகாரத்தின் கீழ் வைத்திருப்பார்கள். கிழார்கள் கூறாக்க குடித்தலைவர்கள். இவர்கள் ஆட்சி தமிழகம் முழுவதும் பரவலாக நடைபெற்றது.

இந்த அரசியல் எழுச்சி தமிழகத்தின் வளமான பகுதிகளில் வேகம் பெற்றது. வேளாண் வளமும், கணிம வளமும் மிகுந்திருந்த பகுதிகளில் அவற்றைப் பயன்படுத்தி வளம்பெற்ற குடிகள்; வேளாட்சி முறையிலிருந்து குறுநில மன்னராட்சி என்ற நிலைக்கு மாறியது. சில வளமற்ற பகுதிகளில் குடிநிலை மாறாமலே இருந்தது.

உலகின் பிறபகுதிகளிலிருந்ததைப் போலவே தமிழ்நாட்டிலும் 'வீரயுகக்காலம்' குறிப்பிடத்தக்க எழுச்சி மிக்கதாக விளங்கியது. மறத் தன்மை மிக்க மறவர்கள் ஆட்சியுரிமை பற்றியும், அரியாசன உரிமை பற்றியும் நடந்த ரத்தம் தோய்ந்த பூசலில் பழங்குடிக் கோட்பாடுகள் நொறுங்கி விழுந்தன. வீறார்ந்த தலைவனே குடிக்கு உயிர் என்ற கருத்து உருவாயிற்று.

சங்க இலக்கியத் தொகுப்பு முழுவதும் பழங்குடிகளின் அழிவும், வேளிர், வேந்தர் எழுச்சியும் கண்ணுக்குத் தெரியும் காட்சிகளாக அன்றைய அரசியல் மாற்றங்களைக் காட்டும் கண்ணாடியாக அமைந்துள்ளது. மாறிக் கொண்டிருக்கும் இந்தக் கால கட்டத்தில்; புலவர்கள் எழுச்சி பெற்றுவரும் அரசியல் தலைவர்களைப் புகழ்ந்தனர்.

குடித்தலைவர்களைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு வேள் மான்கள் எழுச்சி பெற்றனர். வேளிர் பற்றிய தமிழ்ப் பிராமிப் பொறிப்புகள் கொங்கில் பரவலாகக் கிடைக்கின்றன. *வேளிச்சம்பன், வேளாதன், சாத்தன், சாத்துவேள்* ஆகியவை கல்வெட்டுகளிலும், ஓடுகளிலும் கணையாழிகளிலும் பொறிக்கப்பெற்றிருப்பதைக் காணலாம்.

கிழார் என்ற பட்டம் தமிழகத்தில் செல்வாக்கு பெற்றிருந்தமையாலும், காவிதி, குடும்பி போன்ற பட்டங்கள் தமிழகத்திற்கு வெளியிலிருந்து வந்தவர்கள் கொண்டு வந்தமையாலும் அப்பட்டங்கள் தமிழ்க் குடித்தலைவர்களிடம் செல்வாக்குப் பெற்றிருக்கவில்லை. ஆனால் நகரங்களிலும், வாணிகர்களிடையிலும் அப்பட்டங்கள் செல்வாக்குப் பெற்றிருந்தமைக்குப் பிற்காலக் காவியங்கள் சான்றுகளைத் தருகின்றன. 'காவிதி' பட்டம் பெற்ற மகளிர் பற்றிப் பெருங்கதையில் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. நச்சினார்க்கினியர் காவிதிமாக்கள் என்பதற்குப் பொருள் எழுதும்பொழுது பாண்டிய நாட்டில் பாண்டியனால் அளிக்கப்பெற்ற பட்டத்தினைப் பெற்ற வேளாளர்கள் காவிதிகள் என்று எழுதியுள்ளார். சங்க காலத்தில் கிழார், காவிதி, குடும்பி ஆகிய சொற்கள் குடும்பத் தலைவனைக் குறித்த போதிலும் 'கிழார்' என்ற சொல் தமிழில் பரவலாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளது. மற்ற இரு சொற்கள் மொழி

பெயர் தேயத்து வாணிகர்கள் கலந்தமையால் நகரத்தில் பயன்படுத்தப்பெற்றன. பின்னாளில் காவிதி என்ற சொல் பெருவழக்காக வழங்கியது.

உம்பற்காடு, வேளிலூர், அவினாசி, வடபூதநத்தம் ஆகிய ஊர்களில் கிழார்கள் எழுச்சி பெற்றனர். குடித்தலைவர்களாகிய கிழார்கள் தாங்கள் வாழ்ந்த பகுதிகளில் புதைந்து கிடக்கும் வளங்களைக் கண்டறிந்து அவற்றை வாணிகப்பண்டமாக்கினர். இரும்பு, செம்பு, ஈயம், பித்தளை, பொன் போன்றவற்றை உருக்கியெடுத்தனர். அவ்வாறு உருக்கியெடுத்த உலோகங்களைக் கொண்டு பல்வேறு கருவிகளையும், கலைப்பொருட்களையும் செய்து விற்றனர். சில பகுதிகளில் வாழ்ந்த கிழார்கள் அழகு மணிக்கற்களை வெட்டியெடுத்தனர்.

ஆகோள்பூசல், பூசல் தலைவர்கள் உருவாவதற்குக் காரணமாயிற்று. அப்பூசலின் தலைவர்களாக வேளிர் இருந்துள்ளனர். அவர்கள் போர்க்காலங்களில் தலைவர்களாக உருவாகிப் பின்னாளில் அமைதி நேரங்களில் தலைவர்களாக விளங்கினார்கள். அவர்கள் கால்நடைச் செல்வத்தினை மட்டுமின்றி வேளாண்மை உற்பத்திப்பொருள், விலைமிக்க கற்கள் கிடைக்கும் பகுதி போன்றவற்றையும் தங்கள் ஆதிக்கத்தில் கொண்டு வந்தனர். பெருவழிகளிலிருந்த வேளிர் 'உல்கு' (சுங்கம்) மூலம் வரும் காணிக்கைப்பொருளால் வளம் பெற்றனர்.

## வேளிரும் வாணிகப் பெருவழிகளும்

வாணிகப் பெருவழிகளில் அமைந்த ஊர்களில் வேளிர் அரசியல் அதிகாரம் செலுத்தியுள்ளனர். 'பொதினி' என்ற ஊர் பாலக்காட்டுக் கணவாயிலிருந்து மதுரை செல்லும் பெருவழியில் அமைந்திருந்தது. அப்பெருவழி பொன்வளம் கொழிக்கும் பெருவழியாக விளங்கியது. அப்பெருவழியில் நிலைபெற்றிருந்த ஆனைமலை, வடபூதிநத்தம், சி.கலையமுத்தூர் ஆகிய ஊர்களில் உரோமானியக்காசுகள் கிடைத்துள்ளன. ஆவியர் நாட்டை அடுத்து 'அண்டர்''' என்ற பழங்குடி இனத்தினர் வாழ்ந்தனர். அவர்களுடைய

தலைவன் 'குறுவழுதி' என்றும் 'அண்டர்மகன்' என்றும் கூறப்பட்டிருக்கிறான். அண்டர்கள் தேர்களைப் போரில் ஈடுபடுத்தினார்கள் என்று பதிற்றுப்பத்து கூறுகின்றது. அத்தொல்குடி வாணிகத்தினால் பொருள்வளம் பெற்ற குடியாக நிலை பெற்றிருந்தது என்று கூற முடிகின்றது.

சமணப் பள்ளிகள் 'அணங்குடை நெடுமுடி'களில் உருவான போது பழங்குடிகள் பலியிட்டு வழிபடும் வழக்கத்தினைப் பின் பற்றினர். அப்பழக்கத்தைக் கைவிட சமணர்கள் அரும்பாடு பட்டனர். இருப்பினும் பழங்குடிகள் தங்கள் அணங்கிற்குப் பலியிடும் வழக்கம் தொடர்ந்தது. சமணம் செல்வாக்கு இழந்த பின்னும் பலியிடும் வழக்கம் தொடர்ந்தது. இந்த வழக்கம் வடமேற்குத் தக்கணத்தில் கார்லே பௌத்த விகாரத்தில் கந்திற் பாவையாக நிற்கும் யமி என்ற தெய்வத்திற்கு அளிக்கும் பலியுடன் ஒப்பிடத்தக்கது. அங்கே மும்பை மீனவர்கள் அத்தேவதைக்குப் பலியிடும் வழக்கத்தை இன்றுவரை கடைப் பிடிக்கின்றார்கள்.

சமணப் பள்ளி, பௌத்தப்பள்ளிகள் ஆகியவற்றின் முன் பலியிடும் வழக்கம் பள்ளி உருவாவதற்கு முன்பே பழங்கால மக்கள் உருவாக்கிய வழக்கம். அவ்வழக்கம் பழங்குடி மரபில் தொடர்ச்சியாக இன்று வரை நிலை பெற்றுள்ளது.

## பெருவழிகளும் சமணப் பள்ளிகளும்

கொங்குநாடு பெருவழிகள் பெற்றநாடு. சமணப்பள்ளிகளும், வாழ்விடங்களும் பெருவழிகளுக்கு அருகிலேயே உருவாக்கப்பட்டன. இன்று தேசியப் பெருவழியாக விளங்கும் 7ம் எண் பெருவழி அசோகர் காலத்திற்கு முன்பிருந்தே வழக்கத்தில் உள்ள பெருவழி. கௌடில்யரின் அர்த்த சாஸ்திரத்தில் இப்பெருவழி பற்றிக் குறிக்கப்பெறுகின்றது. அப்பெருவழிக்கு தட்சினபதம் என்று பெயர். கங்கை நதிப் புறத்திலிருந்து சாதவாகனர் தலைநகரான பைதான், யவனர் வாழ்ந்த பிம்மகிரி, அதியமான்தகடூர், சேரர் கருவூர் மதுரை வழியாக கன்னியா குமரி சென்றடைந்தது. ஈழம், கொங்கு நாட்டு படியூர், ஆகிய ஊர்களில்

கிடைத்த வைடூரியம் இப்பெருவழியில் கொண்டு வரப்பெற்றதாகக் கௌடில்யர் அர்த்தசாஸ்திரத்தில் எழுதியுள்ளார்.

பாலக்காட்டுக் கணவாயிலிருந்து பிரிந்து செல்லும் மூன்று பெருவழிகள் தமிழகத்தில் கிழக்குக் கடற்கரையைச் சென்றடைந்தன. ஆனைமலை, திருமூர்த்திமலை, ஐவர்மலை ஆகிய மலைகளின் அருகிலேயே இன்று ஒரு பெருவழி செல்கின்றது. இப்பெருவழி அருகிலேயே உரோமானியர்களின் காசுகள் கிடைத்துள்ளன. வடபூதிநத்தம், ஆனைமலை சி. கலையமுத்தூர் ஆகிய ஊர்களில் இரண்டாயிரம் உரோமானியக் காசுகள் கண்டெடுத்துள்ளனர். அதனால் இப்பெருவழி சங்க காலத்திற்கு முன்பிருந்தே வழக்கத்தில் இருந்திருக்க வேண்டும். இடைக்காலக் கல்வெட்டில் இப்பெருவழிக்கு வீரநாராயணப் பெருவழி என்று பெயரிட்டு வழங்கினர். இப்பெயர் கொழுமம் வரையிலான பெருவழிக்கு வழங்கப்பெற்றது. அதற்கும் அப்பால் பழனி வழியாக இப்பெருவழி மதுரை, திருத்தங்கல் ஆகிய ஊர்களைத் தொட்டுக்கொண்டு இராமேஸ்வரம் வரை சென்றது. இப்பெருவழிக்கு சோழர் காலத்தில் அசுரர்மலைப் பெருவழி என்று பெயர். இப்பெயர் அயிரைமலை என்ற பெயரின் திரிபு என்று கொள்ளலாம். இச்செய்திகளால் இப்பெருவழி சோழர்காலத்தில் வாணிகர் நடைகொண்ட பெருவழியாக விளங்கியது என்பது விளங்குகின்றது. இப்பெருவழியில் ஆதாழிஅம்மன் கோயில், திருமூர்த்தி மலை, ஐவர்மலை, ஆகிய மலைகளில் சமணப் பள்ளிகள் இருந்தன. இச்செய்தி பெருவழி அருகில் உள்ள மலைகளில் மட்டுமே சமணப் பள்ளிகள் இருந்துள்ளன என்பதை வலியுறுத்தும்.

## படுக்கை அமைத்ததன் நோக்கம்

மலைக் குகைகளில் படுக்கை அமைத்தற்குக் காரணம் வெளியில் செல்ல முடியாத மழைக்காலங்களில் சமணமுனிவர் தங்கியிருப்பர் என்பதாகும். அப்போது படுத்துக் கொள்வதற்குப் படுக்கை அமைக்கப்பெற்றதா? சமண முனிவர்கள் வசதியை விரும்பினார்களா? என்று கேள்வி எழும். அல்லது உண்ணா

நோன்பிருந்த இவ்வுலக வாழ்வை நீத்த பின் நினைவுச் சின்னமாகப் படுக்கை அமைக்கப்பெற்றதா? செஞ்சித் திருநாதர் குன்றின் மீது அமைந்துள்ள நிசிதிகைக் கல்வெட்டு, *'ஐம்பத்தேழு அனசனம் நோற்ற சந்திர நந்தி ஆசிரிகரு நிசீதிகை'* என்று கூறுகின்றது. இக்கல்வெட்டு உண்ணா நோன்பிருந்தவர்களுக்கு மட்டுமே படுக்கை அமைக்கப்பட்டிருந்தது என்ற கருத்தினை வலியுறுத்துகிறது. சங்க இலக்கியத்தில் பாடப் பெற்ற மன்னர்கள் பெயர்களைக் குறிப்பிடும்போது 'குராப் பள்ளித் துஞ்சிய', 'இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய' என்ற அடைமொழி வருவதும் இக்கருத்தினை வலியுறுத்துகின்றது. அதனால் மலைக்குகைகளில் உள்ள படுக்கைகள் உண்ணா நோன்பிருந்த சமண முனிவர்க்கு அமைக்கப்பெற்றது எனலாம்.

கொங்குநாடு மலைகள் சூழ்ந்த நாடாகையால் சமண முனிவர்கள் தனித்திருந்து தவம் செய்வதற்கேற்ற சூழ்நிலைகளைக் கொண்ட குகைகள் நிறையவே இருந்தன. இருப்பினும் முனிவர்கள் எல்லா மலைகளிலும் தவப் பள்ளிகளை உருவாக்கவில்லை. பழங்குடித் தெய்வங்கள் வழிபாடு நடைபெற்ற மலைகளிலும், பெருவழிகளுக்கு அருகிலிருந்த மலைகளிலும் சமணர்கள் தவப்பள்ளிகளை உருவாக்கினர்.

## குறிப்புகள்


1. K.S. Vaidhyanathan *The Geography of the Ancient Kongu Country*
2. R. Nagasamy. *Roman Karur*
3. S.Suresh. *Roman antiquities from TamilNadu*
4. Himansh Praba Ray. *Monastry and Guild.*
5. *கல்வெட்டு* காலாண்டிதழ் எண் 52

# அரசியல் பின்னணி

கோவை மாவட்டம் கொங்கு நாட்டின் மேற்குப் பகுதியிலிருந்தமையால் குடகொங்கு என்றும் மீகொங்கு என்றும் அழைக்கப்பெற்றது. மீகொங்கு என்று அழைக்கப்பெற்ற பகுதி தொடக்கத்தில் வேளிர்கள், கிழார்கள் ஆட்சியிலிருந்தது. மீகொங்கு என்று அழைக்கப்பெற்ற பகுதி இடைக்காலக் கல்வெட்டில் தென் கொங்கு என்று அழைக்கப் பெற்றது. இப்பகுதியில் பாலக்காட்டுக் கணவாய் யவன வாணிகம் செழித்து வளர காரணமாயிற்று. யவன வாணிகம் செழித்தமையால் இப்பகுதி அரசியலில் பாரதூரமான மாற்றங்கள் நிகழ்ந்தன. நிகழவும், மூத்தோர் ஆட்சியிலிருந்து குடித்தலைவனாக உருவாகிய வேள் ஆட்சி நடைபெறத் தொடங்கியது. வேளிர் பலர் இப்பகுதியில் கி.மு.நன்காம் நூற்றாண்டிலிருந்து ஆண்டு வந்தனர்.

## வேளில்

கோவைக்கருகில் உள்ள வெள்ளலூர் இடைக்காலக் கல்வெட்டில் வேளிலூர் என்று அழைக்கப்பெற்றது. இப்பெயர் வேளில் + ஊர் என்று பிரித்துப்பொருள் கொள்ளும் வகையில் அமைந்துள்ளது. முதலில் பயின்று வரும் வேளில் என்ற பெயரே இவ்வூரின் சங்க காலப்பெயராக இருக்கவேண்டும். அது உறுதிப்படும்போது இவ்வூர் வேளிர் இருப்பிடமாக அல்லது தலைநகரமாக விளங்கியிருக்க வேண்டும் எனலாம். இடைக்காலத்தில் ஊர் என்ற அடைமொழி இணைக்கப்பெற்று வேளிலூர் என்று அழைக்கப்பெற்றது. இவ்வூர் வேளிர்கள் பாலக்காட்டுக் கணவாயிலிருந்து பிரிந்து சென்ற கொங்குப் பெருவழியில் சென்று வந்த யவனர்களிடமிருந்து உல்கு வசூலித்து கொண்டு தங்கள் ஆட்சியை நடத்தினர்.

இவ்வூரில் 500க்கும்மேற்பட்ட ரோமானியக் காசுகள் கிடைத்துள்ளன. அவை அகஸ்டஸ் காலம் முதல் (கேலி) குல்லா காலம் வரையில் ஆண்ட மன்னர்களின் காலத்தைச் சேர்ந்தவை. மேலும் பல பொன் அணிகலன்கள் இவ்வூரில் கிடைத்துள்ளன. இவற்றில் புலிபொறித்த மோதிரம். யானை, மாடு பொறித்த மோதிரம், மீன் உருவம் பொறித்த மோதிரம், மைக்கோதி, காது குடைக்கும் கருவி (இவை அனைத்தும் பொன்னால் ஆனவை) ஆகியவை கிடைத்துள்ளன. தலை வாரும் ரோமானியப் பெண்ணின் உருவம் பொறித்த கல்பதித்த மோதிரம். யவனக்குதிரை வீரன் உருவம் பொறித்த மோதிரம், கோமாளி உருவம் பொறித்த மோதிரம் எனப் பல மோதிரங்கள் இவ்வூரில் கிடைத்துள்ளன. இவையும் கூட பொன்னால், செய்யப் பெற்றவை. மேலும் கார்னீலியன் கல்லில் செய்யப்பெற்ற மணியில் குதிரை மேயும் காட்சி வரையப்பெற்றுள்ளது. இதன் அளவு ஒரு விரல்கடை ஆகும்.

இந்தப் பொருட்களை மானிடவியலார் பழங்குடி அருங்கலன் என்று கூறுவர். ஆங்கிலத்தில் premitive valuable என்று கூறுவர். இந்தப் பொருட்கள் மனிதனின் வயிற்றுப் பசியையோ வேறு தேவைகளையோ பூர்த்தி செய்பவை அல்ல. ஆனால் இப்பொருட்களை வைத்திருப்பவன் மதிப்பிற்குரியவன் என்றும். அப்பொருட்கள் ஈகை அரிய நன்கலன்கள் என்றும் கருதப்பெறுவதை உலக நாகரிகங்கள் அனைத்திலும் பார்க்கலாம். இறந்துபோன குடித்தலைவர்களை அல்லது அரசனைப் புதைக்கும்போது இதுபோன்ற ஈகை அரிய நன்கலன்களை உடன் வைத்துப் புதைப்பர். அவ்வாறு புதைக்கப்பெறுவதற்கு அரியகலன்கள் கைவசம் இல்லையென்றால் மாற்று அரசர்களிடம் விலைக்கு வாங்கி அல்லது போரிட்டுப் பிடுங்கி இறந்தவனுடன் வைத்துப் புதைப்பர். இவ்வாறு செய்வதைத் தங்கள் கடமையாகவே கருதினர். இதுபோலவே சிந்து சமவெளியிலும் ஈகை அரிய நன்கலன்களை வைத்துப் புதைக்கும் பழக்கம் இருந்தது. கொங்கு நாட்டிலும் இறந்த மன்னனுடன் ஈகை அரிய நன்கலன்களை வைத்துப் புதைத்தனர் என்பதற்கு அகழ்வுச் சான்றுகள் பல கிடைத்துள்ளன. கொடுமணல் பெருங்கற்சின்னங்களில் ஐந்தில் ஈகை

அரிய நன்கலன்களை வைத்துப் புதைத்த செய்தி கிடைத்துள்ளது. கொங்கு நாட்டில் கார்னீலியன் மணிகள் ஈகை அரிய நன்கலனாகக் கருதப்பெற்றன. அதனால் கார்னீலியன் மணிகள் பெருங்கற் சின்னங்களில் நூற்றுக்கணக்கில் வைத்திருந்தனர் எனலாம். ஒரு பெருங்கற் சின்னத்தில் 2500 கார்னீலியன் மணிகளும் ஆறாவது பெருங்கற்சின்னத்தில் 900 மணிகளும் நான்காவது பெருங்கற்சின்னத்தில் 400 மணிகளும் இரண்டாவது பெருங்கற்சின்னத்தில் காரினீலியன் மணிகளும் கண்டுபிடிக்கப் பெற்றன. சிந்து சமவெளியில் லசபீஸ் லசுலி ஈகை அரிய கலனாகக் கருதப்பெற்றது. ஆனால் கொங்குநாட்டில் கார்னீலியன் மணிகள் ஈகை அரிய கலனாகக் கருதப்பெற்றது. அதனால் கொங்கு நாட்டு வேளிர்களின் ஈமச்சினங்களில் கார்னீலியன் மணிகள் ஈகை அரிய நன்கலன்களாகக் கருதப்பெற்றன. கொங்கு நாட்டில் ஆட்சி செய்த வேளிர்கள் மனை பொன் கொழிக்கும் மனைகளாக இவை விளங்கின. பொன்னுடை நெடுநகர் பொதினி என்றும் பொன்னுடை மாநகர் கருவூர் என்றும் கூறுவதால் இது உறுதிப்படும். வேளிர் நகரங்களும் பெருவழி நகரங்களும் பொன் கொழிக்கும் நகரங்களாக விளங்கினமையால் மூவேந்தர்களும் கொங்கு நாட்டின் மீது படையெடுத்தனர். அவர்களில் சேரர்கள் கொங்கு நாட்டைத் தங்கள் ஆதிக்கத்தில் கொண்டு வந்தனர். கொங்கு நாடு படிப்படியாகத்தான் சேரர் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. முதலில் மீகொங்கிலிருந்த உம்பற்காட்டைத் தங்கள் ஆதிக்கத்தில் கொண்டு வந்தனர். உம்பற்காடு என்பது இன்றைய கோவை மாவட்டத்து ஆனைமலையே ஆகும். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் கொங்கர் நாட்டை (பதிற்று.) அடிப்படுத்தியபின் உம்பற்காட்டு 500 ஊர்களைப் பிரம்மதேயமாகக் கொடுத்தான் என்று பதிற்றுப்பத்து பதிகம் கூறும். ஆனால் பின்னால் வந்த சேரன் பல்யானை செல்கெழுகுட்டுவன் ‘உம்பற்காட்டைத்தன் கோல் நிறீஇ’ என்று கூறுவதால் மறுபடியும் உம்பற்காடு மாற்றரசர்கள் வசம் சென்றது புரிகின்றது. அதனால் கோவை மாவட்டத்து ஆனைமலைப் பகுதி சங்க காலத்தில் பல அரச மரபினர் ஆட்சிக்குட்பட்டிருந்தது எனலாம். இறுதியில் உம்பற்காடு இளங்கண்ணனார் ஆளுகையில் விடப்பட்டது. படிப்படியாக கொங்கு நாட்டைத் தங்கள் ஆட்சியின் கீழ் கொண்டு வந்த சேரர்கள் கருவூரைத் தலைநகரமாக ஆக்கிக் கொண்டனர்.

இப்பகுதியில் சங்க காலச் சேரர்கள் தொடர்ந்து ஆட்சி செய்தனர் என்பதற்குக் குட்டுவன் கோதை என்ற மன்னன் வெளியிட்ட வெள்ளிக்காசே சிறந்த சான்று. கோவை மாவட்டம் பொள்ளாச்சி வட்டம் ஆத்துப் பொள்ளாச்சியில் இக்காசு கண்டெடுக்கப்பெற்றது. இதன் எழுத்தமைதியைக் கொண்டு கி.பி.3ஆம் நூற்றாண்டு என்று கூறுகின்றனர். அதனால் குட்டுவன் கோதை ஆட்சியுடன் (கி.பி.3ஆம் நூற்றாண்டுடன்) சேரர் ஆட்சி முடிந்துவிட்டது எனலாம்.

சங்க காலத்துக்குப் பின் கொங்கு நாட்டு அரசியல் வாழ்வில் நிலையற்ற தன்மையும் குழப்பமும் மிகுந்திருந்தன. சேர மன்னர்களின் ஆட்சிக்குப் பிறகு கொங்கு நாட்டு அரசியல் தெளிவற்றதாகவே இருந்தது. இக்கால கட்டத்தில் களப்பிரர் தமிழ்நாட்டை அலைக்கழித்து வந்தனர். களப்பிரர்கள் பற்றித் தெளிவான அரசியல் வரலாறு ஏதும் இதுவரையில் கண்டறியப்படவில்லை. சமீபத்தில் இராமநாதபுரம் மாவட்டம் பூலாங்குறிச்சி என்ற ஊரில் கி.பி.4-5 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டு ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. இக்கல்வெட்டு கோசேந்தன் கூற்றன் என்ற மன்னனின் பெயருடன் தொடங்குகின்றது. இக்கல்வெட்டு வரலாற்று ஆசிரியர்களிடையே வாதப் பிரதி வாதங்களைத் தோற்றுவித்தது. ஆட்சியாண்டு நூற்றுத் தொண்ணூற்றிரண்டாவது என்று குறிப்பிடப்பட்டுள்ளது விதந்து கூறத்தக்கது. ஓர் அரசன் நூறு ஆண்டு வரை வாழ்வதே கடினமமாக இருந்த அந்தக் காலத்தில் நூற்றித் தொண்ணூற்றிரண்டாவது ஆண்டு ஆட்சியாண்டாகக் குறிப்பிடுவது வியப்பளிக்கும். ஓர் ஆய்வாளர் இதனை சக ஆண்டு என்றும், மற்றோர் ஆய்வாளர் இதனை ஓர் அரசப் பரம்பரையின் ஆட்சியாண்டு என்றும் குறிப்பிடுகின்றனர். எது எப்படியிருந்த போதிலும், இக்கல்வெட்டு கி.பி.4-5ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்றும், தமிழக வரலாற்றின் இருண்ட காலத்திற்கு ஒளி ஊட்டியது என்றும் கூறலாம். பூலாங்குறிச்சிக் கல்வெட்டினால் கொங்கு நாடு மாற்றரசர்களின் ஆட்சியில் இருந்தமைப் புலப்படுகிறது.




## இரட்டர்

கொங்கில் கி.பி.3ஆம் நூற்றாண்டில் இரட்டர் என்ற அரச மரபினர் ஆண்டுள்ளனர். இவர்களில் இறுதி அரசன் கி.பி.5ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆண்டான். இரட்டர்கள் யார் என்பதில் கருத்து வேறுபாடுகளுண்டு. ரெட்டி மரபினர் என்று ஓர் ஆய்வாளர் கூறுவார். இராட்டிரகூடர் என்று மற்றொரு ஆய்வாளர் கூறுவார். களப்பிரர் என்று கருதுவாரும் உளர். இந்த மரபினர் கொங்கு தேச ராஜாக்கள் என்ற நூலில் மட்டுமே கூறப்படுகின்றனர். இவர்கள் பற்றிய கல்வெட்டுச் சான்றுகளோ, செப்பேட்டுச் சான்றுகளோ கிடைக்கவில்லை. பழந்தமிழில் அரட்டர் என்பதே கொங்கு தேச ராஜாக்கள் நூலில் ரட்டி என்று எழுதப்பட்டுள்ளது. பழந்தமிழில் அரட்டு - அரட்டர் என்பதற்குக் குறும்பு குறும்பர் என்று பொருள். கொங்கு நாட்டில் பண்டைக் காலந்தொட்டு குறும்பர்கள் வாழ்ந்துள்ளனர். கொங்கில் குறும்பு என்று சுந்தரர் கூறுவார். ஒருக்கால் *‘ரட்டி’* (அரட்டி) என்பது கொங்கு நாட்டில் வாழ்ந்த குறும்பர்களைக் குறிப்பதாகலாம்.

## கங்கர்

ரட்டர்களுக்குப் பின் கங்கர்கள் ஆட்சி இங்குப் பரவியிருந்ததாகக் கொங்கு தேச ராஜாக்கள் கூறும். கொங்கணிவர்மன் என்பவன் கொங்கு நாட்டை ஆண்ட முதல் கங்க மன்னன். கங்கர்கள் ஆட்சி தொடர்ந்து நடைபெற்றதற்கான கல்வெட்டுச் சான்றுகள் அருகியே காணப்படுகின்றன. ஆனால் கங்கர்கள் வெளியிட்ட செப்பேடுகள் சிலவற்றில் கொங்கு நாடு பற்றிய செய்திகள் உண்டு. துர்விநீதனின் தாய் புன்னாட்டின் இளவரசியாகச் சுட்டப்படுகின்றாள். துர்விநீதன் செப்பேடுகள் அவனை புன்னாட்டின் அரசன் என்று கூறும். அந்நாடு ‘பாலின் வந்த பழவிறல் தாயமாக’ அவனுக்குக் கிடைத்திருக்கலாம். குமரலிங்கத்தில் கிடைத்துள்ள இரவிதத்தன் என்பவன் செப்பேடுகள் புன்னாடு பற்றிச் சுட்டுகின்றன. அது கொண்டு ஆரோக்கியசாமி அவர்கள் புன்னாடு கொங்கின் வடபகுதியையும் மைசூரின் தென் பகுதியையும் உள்ளடக்கியிருந்ததாகக் கூறுவார். புஞ்சைப் புளியம்பட்டிக்கருகில் நல்லூர் அத்திக்கோசக் கல்வெட்டு

புன்னாடு என்றொரு நாட்டினைக் குறிக்கிறது. அதனால் துர்விநீதன் தாய் கொங்கு நாட்டினைச் சேர்ந்தவன் என்று கருத வேண்டியுள்ளது.

அண்மையில் மத்திய அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையினர் ஒரு செப்பேட்டினைக் கண்டுபிடித்துள்ளனர். அச்செப்பேடு பேரூர் பற்றியும், பேரூருக்கு அருகில் இருந்த தடாகம் பற்றியும், ஆறு பற்றியும், மலைகள் பற்றியும் கூறுவதாகக் கல்வெட்டியல் அறிஞர்கள் கூறுவர். அது கி.பி. 6ஆம் நூற்றாண்டில் ஆண்ட கொங்கணிவர்மன் காலத்தில் வெளியிடப்பட்டதாகும். கங்கர் ஆதிக்கம் கி.பி. 6ஆம் நூற்றாண்டிலிருந்து நிலைபெற்றதற்கான சாசனச் சான்றுகள் கிடைத்துள்ளன. இச் செப்பேட்டினை வைத்திருந்தவர் கோவை மாவட்டத்துக் காரமடையைச் சேர்ந்தவர்.

பாண்டியர்களில் கடுங்கோன் என்பவனுக்குப் பின்வந்தவர்கள் கொங்கு நாட்டைத் தங்கள் ஆதிக்கத்திற்குக் கொண்டு வரப் பலகாலும் முயன்றனர். தேர்மாறன், கோச்சடையன் ரணதீரன் ஆகியோர் கொங்கர் கோமான் என்று குறிப்பிடப்படுகின்றனர். தேர்மாறன் கொங்கப் பூமியை அடிப்படுத்திக் கங்கராசனுடைய மகளை மணந்தான் என்று வேள்விக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன. இவனுக்குப் பின் வந்த பராந்தக நெடுஞ்சடையன் வீரநாராயணன் கொங்கு நாடு முழுவதையும் தன் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டு வந்தான். வேள்விக் குடிச் செப்பேட்டில் பராந்தகன் காவிரிக்கு வடகரையில் காடவனைத் துகளடித்தான் என்று குறிப்பிடப்படுகிறான். சீவரமங்கலச் செப்பேட்டில் ஆயிரவேலி, புகழூர், வஞ்சி ஆகிய ஊர்களை அவன் வென்றதாகவும் குறிப்பிடப்படுகிறது. கொங்கு வெற்றிக்குப் பின் பாண்டிக் கொடுமுடி சென்று பசுபதியினுடைய பதும பாதத்தைப் பணிந்து ஏத்திப் பொற்காசுகளைத் தானமாக அளித்தான். இவனே 'மீகொங்கில் காஞ்சிவாய்ப் பேரூர்' புக்குத்திருமாலுக்குக் குன்றமனையதோர் கோயில் கட்டினான் என்றும் அச்செப்பேடு கூறுகிறது. இவனுக்குப்பின் வந்த வரகுணன், இராசசிம்மன், வீரநாராயணன், இரண்டாம் வரகுணன் ஆகியோர் கொங்கு நாட்டினை ஆட்சி செய்துள்ளனர்.

## சோழர்

சோழர்களில் முதலாம் ஆதித்தன் கொங்கு நாட்டை வென்றதாகக் கொங்கு தேச ராஜாக்கள் என்ற நூல் குறிப்பிடும். சமீபத்தில் கண்டுபிடிக்கப்பட்ட திருத்தணி செப்பேடுகளும் அவ்வரலாற்றினை உறுதிப்படுத்தும். முப்பது ஆண்டுகளுக்கு முன் கோவை நகருக்கருகில் இராசகேசரிப் பெருவழி என்றொரு பெருவழி கண்டுபிடிக்கப்பட்டது. இப்பெருவழி பற்றிய கல்வெட்டு வட்டெழுத்திலும், தமிழெழுத்திலும் வடிக்கப்பட்டுள்ளது. வட்டெழுத்தில் ஒரு பாடல் பின்வருமாறு அமைகிறது.

*திருநிழலு மன்னு யிருஞ்சிறந் தமைப்ப*
*ஒருநிழல் வெண்டிங்கள் போலோங்கி - ஒருநிழல்போல்*
*வாழியர்கோச் சோழன்வளங் காவிரி நாடன்*
*கோழியர் கோக்கண்டன் குலவு*

இக்கல்வெட்டுக்கருகில் ஆயிரம் ஆண்டுகட்கு முன் அமைக்கப்பட்ட பெருவழியும் உள்ளது. இப்பெருவழி கண்டராதித்தன் காலத்தைச் சேர்ந்ததென்றும், முதலாம் இராசராசன் காலத்தைச் சேர்ந்தது என்றும் கருதுகின்றனர்.

# அரசியல் பின்னணி - இடைக்காலம்

கோவை மாவட்ட வரலாற்றில் சங்ககாலத்திற்குப்பின் அரசியல் பின்னணி தெளிவற்றதாகவே விளங்குகின்றது. கி.பி. 8-9 ஆம் நூற்றாண்டிலிருந்து கிடைக்கின்ற கல்வெட்டுகள், செப்பேடுகள் ஆகியவை ஓரளவிற்கு இப்பகுதி அரசியலை அறிந்து கொள்ள உதவுகின்றன. சங்ககால அரசியல் வீழ்ச்சிக்குப்பின் இடைக்காலச் சேரர்கள் இப்பகுதியில் ஆட்சி செய்கின்றனர். அதற்கான கல்வெட்டுச் சான்றுகள் செப்பேட்டுச் சான்றுகள் மிகுதியும் கிடைக்கின்றன. நாமக்கல்லில் கிடைக்கும் வீரசோழனின் செப்பேடுகள் கி.பி. 8-ஆம் நூற்றாண்டிலிருந்து ஆட்சி செய்த சேரர்கள் பற்றிய செய்திகளைத் தருகின்றன. இந்த மரபினர் சங்க கால சேரர்களின் குட்டுவன், கோதை ஆகியோர் வழிவந்தவர்களாகக் கூறிக் கொள்கின்றனர்.

நாமக்கல் செப்பேட்டில் அரசுக் கொடிவழி கூறப் பெற்றுள்ளது. அச்செப்பேடுகளின்படி மரீசி, காஸ்யபன், ரவி (சூரியன்), மனு, இக்சுவாகு, சகரன், பாகிரதன் ரகு, தசரதன், ராமன், மகாபாகு, கேரள ஜகத்பதி, மணிகுட்டுவன், கோதை ரவி (கொண்டாவை மணந்த ரவி), கண்டன் (பல்லவ இளவரசியை மணந்தவன்), ரவி (கங்க இளவரசியை மணந்தவன்) கண்டன் ஆகியோர் கூறம்பெறுகின்றனர். இடையிலிருந்த நான்காம் ஏடு கிடைக்கவில்லை. அதனால் கண்டனுக்குப்பின் ஆண்ட மன்னர்களைப்பற்றி ஏதும் அறிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் கொங்கின் மேற்குப் பகுதியில் கோகண்டன் வீர நாராயணன், கண்டன் இரவி, இரவிகண்டன், இரவி கோதை, கோதை இரவி ஆகிய மன்னர்களின் கல்வெட்டுகள் கிடைக்கின்றன. அண்மையில் பழனி வட்டம் ஒட்டன்சத்திரம் அருகில் கப்பலூர்ப் பட்டி என்ற ஊரில் கோக்கண்டன் மாந்தரன் என்பவன் கல்வெட்டு கண்டுபிடிக்கப் பெற்றுள்ளது.

## அரசர் வரிசை

சில கல்வெட்டுகள் கோக் கண்டன் வீரநாராயணுடைய தாகவும் சில கல்வெட்டுகள் இரவி கண்டனுடையதாகவும், சில கல்வெட்டுகள் இரவி கோதையினுடையதாகவும் குறிக்கப்பெறுகின்றன. கண்டன் இரவி என்பவனும் சில கல்வெட்டுகளில் குறிக்கப் பெறுகின்றான். இந்த மன்னர்களை வரிசையிட்டுப் பார்க்கும்போது சில உண்மைகள் புலப்படாமல் போகா. நாமக்கல் செப்பேட்டில் குறிக்கப்பெறும் இறுதி மன்னன். கண்டன் என்பவனே வீரநாராயணின் தந்தை கோக்கண்டன் என்று கொள்வதில் தவறில்லை. அவ்வாறு கொள்வோமானால் கோக்கண்டனின் மக்கள் மூவர் ஆவர். அவர்கள் வீரநாராயணன், மாந்தரன், இரவி ஆகியோர். இரவிகண்டன் என்பவன் இரவியின் மகனாக இருக்கலாம்.இரவியின் இன்னொரு மகன் கோதை என்பவன். இம்மன்னர்கள் கி.பி. 9-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆட்சி செய்தவர்கள் ஆகலாம். சங்ககாலம் முதல் கி.பி. 9-10ஆம் நூற்றாண்டு வரை இம்மன்னர்கள் கொங்கின் மேற்குப் பகுதியில் (கோவை) ஆண்டவர்களாகலாம். இவர்களில் இறுதியில் கூறப்பெறும் இரவி கோதையின் காலத்தைச் சேர்ந்தததாகக் கருதப்பெறும் அத்திகோசத்தார் கல்வெட்டொன்று ஆனைமலையில் கிடைத்துள்ளது. அதனால் இடைக்காலச் சேரர் ஆட்சி ஆனைமலையில் நீண்ட நாட்கள் நடைபெற்றது என்பதில் சிறிதளவும் ஐயமில்லை.

கி.பி. 10-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து கொங்குநாடு மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பெற்றது. சேலம்-கரூர் பகுதி கொங்கான வீரசோழ மண்டலம் என்று பெயரிடப்பெற்று தஞ்சாவூர் சோழர்களின் நேரடி ஆட்சியில் வைக்கப்பெற்றது அவை இன்றைய பெரியார் மாவட்டம், கோவை மாவட்டத்தின் வடக்கு கோவை வட்டம், மேட்டுப் பாளையம் வட்டம், அவினாசி வட்டம் திண்டுக்கல் மாவட்டம், பழனிபகுதி ஆகியவற்றை உள்ளடக்கிய பகுதி வடகொங்கு என்று அழைக்கப்பெற்றது. கோவை மாவட்டத்தின் மேற்கு, பல்லடம் வட்டம், தெற்குக் கோவை வட்டம், பொள்ளாச்சி வட்டம் உடுமலை வட்டம், பழனி வட்டத்தின் மேற்குப் பகுதி ஆகியவற்றை உள்ளடக்கிய பகுதி தென்கொங்கு என்று அழைக்கப்பெற்றது.

## வீரகேரளர்

தென் கொங்கு வீர கேரளர்கள் ஆட்சியிலும். வடகொங்கு கொங்குச்சோழர் (கோநாட்டார்) ஆட்சியிலும் இருந்தன. இவர்கள் சுயாட்சி பெற்று சோழர்களுக்குக் கீழ்ப்படிந்தவர்களாக ஆண்டனர். வீர கேரளர்களின் தோற்றம்பற்றி பல்வேறு கருத்துக்கள் உள்ளன. கே.வி. சுப்ரமணிய அய்யர் வீரகேரளர்களைப்பற்றிக் கூறும்போது இடைக்காலச் சேரர்களைத் தொடர்ந்து ஆட்சி செய்த கேரள மரபினர் ஆகலாம் என்று கூறுவார். பேராசிரியர் வி. மாணிக்கம் அவர்கள் கோக்கண்டன் மரபில் தொடர்ந்து வந்தவர்களே வீரகேரளர் என்று கூறுவார். அண்மையில் இரா. ஜெகதீசன் என்பார் வானியல் கோள் நிகழ்வுகள் வீரகேரளர் கல்வெட்டில் குறிக்கப்பெறுவதைக் கொண்டு வீரகேரள அரசர்களின் ஆட்சிக் காலங்களை அறுதியிட்டுக் கூறியுள்ளார். அவர் குறிப்பிடும் அரச கொடிவழி சரியானதாகும். ஆனால் அவர் வீரகேரளர்கள் பாண்டியர் மரபிலிருந்து வந்தவர்கள் என்று கூறுகிறார் அக்கருத்து ஆய்வுக்குரியது தென் கொங்குப் பகுதியில் வீரகேரளர்கள் சுமார் 250 ஆண்டு (கி.பி.945-1200) வரை ஆண்டுள்ளமையால் அவர்கள் வரலாறு விரிவாகத் தரப் பெறுகின்றது.

## வீரகேரளன் வீரநாராயணன் - (கி.பி.958-967)

இவ் வீரகேரளர்களின் கல்வெட்டுகளில் சக ஆண்டோ, கலி ஆண்டோ குறிப்பிடப்படாததால் இவர்களின் ஆட்சி ஆண்டுகளை சரியாகக் கணக்கீடு செய்வது சிக்கலாக உள்ளது. ஆனால் இவர்கள் ஒவ்வொருவரும் தனது தந்தையின் பெயரை முன்னொட்டுப் பெயர்களாகக் கொண்டுள்ளது இவர்களின் கொடிவழியைப் புரிந்துகொள்ள உதவுகின்றது.

பழநி பெரியாவுடையார் கோயிலில் உள்ள வீரகேரளன் வீரநாராயணன் மற்றும் வீரகேரளன் அமரபுயங்கனின் கல்வெட்டுகள் அக்கோயில் இறைவனைத் திருவராலூர் மகாதேவர், என்று குறிப்பிடுகின்றன. தமிழ் நாட்டு இறைவன் பெயர்களை ஆய்வு செய்த சு.இராஜகோபால் கி.பி. 10ஆம் நூற்றாண்டு வரை இறைவன் பெயர்கள் மகாதேவர் என்ற பின்னொட்டுப் பெயர்களைப் பெற்றுள்ளதாகக்

கருதுகின்றார், இதன்படி வீரகேரளன் வீரநாராயணனும், வீரகேரளன் அமரபுயங்கனும் கி.பி. 10ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்துள்ளனர் என்று கருதலாம்.

மேலும் வீரநாராயணனின் தந்தை வீரகேரளன் ஆட்சி கி.பி. 958இல் முடிவடைந்துள்ளதால் வீரகேரளன் வீரநாராயணன் கி.பி. 958இல் ஆட்சிக்கு வந்துள்ளான் என்றும் கருதலாம்.

இவ் வீரகேரள மன்னர்களின் ஆட்சிக் காலத்தைக் கணக்கிட வீரகேரளன் அதிராஜராஜன் என்பவனது 23ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்றும், இவன் மகன் அதிராஜராஜன் ஸ்ரீராஜராஜனின் கல்வெட்டு ஒன்றும், துணை நிற்கின்றன. அதிராஜராஜனின் 23ஆம் ஆட்சியாண்டு கல்வெட்டில் மகாமக திருவிழா நடந்தது பற்றி குறிப்பிடப்படுகின்றது. மகாமகம் என்பது குரு சிம்மராசிக்கு வரும்போது கொண்டாடப்படுகின்ற ஒரு விழாவாகும். இவ்விழா, பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை வரும். இதன்படி கடந்த 2004ஆம் ஆண்டு சமீபத்தில் ஒரு மகாமகத் திருவிழா நடைபெற்றுள்ளது. இதைக்கொண்டு கணக்கிட்டால் கி.பி. 1092இல் ஒரு மகாமகத் திருவிழா நடைபெற்றிருக்க வேண்டும். மேலும் ஸ்ரீராஜராஜனின் 3ஆம் ஆட்சி ஆண்டு கல்வெட்டில் குரு துலாம் ராசியில் இருப்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதன்படி மகாமகம் நடைபெற்ற ஆண்டில் சிம்ம ராசியிலிருந்த குரு (ஆண்டுக்கு ஒரு ராசி வீதம் மாறக்கூடியது) சிம்மராசிக்கு மூன்றாம் ராசியான துலாம் ராசிக்கு வந்துள்ளது. எனவே ஸ்ரீராஜராஜன் மகாமகம் நடைபெற்ற ஆண்டான கி.பி.1092இல் ஆட்சிக்கு வந்துள்ளான், என்றும், இவனுடைய தந்தை வீரகேரளன் அதிராஜராஜன் ஆட்சி இவ்வாண்டில் முடிவுற்றது என்றும் கருதலாம்.

இந்த ஆண்டை மையமாகக் கொண்டும் ஒவ்வொரு மன்னர்களின் கல்வெட்டுகளில் உள்ள ஆட்சியாண்டுகளைக் கொண்டும் இவ்வீரகேரள மரபினர்களின் ஆட்சிக்கு வந்த ஆண்டுகளும் முடிவுற்ற ஆண்டுகளும் கணக்கீடு செய்யப்பட்டுள்ளன. வீரகேரளன் வீரநாராயணனின் ஆட்சிக்குப்பின் இவன் தம்பி வீரகேரளன்

அமரபுயங்கன் கி.பி.967இல் ஆட்சிக்கு வந்துள்ளதால் இவ்வாண்டில் இவன் ஆட்சி முடிவுற்றுள்ளது.

## வீரகேரளன் அமரபுயங்கன்: (கி.பி.967-990)

இவனது முன்னொட்டுப் பெயரைக் கொண்டு இவன் வீரகேரளன் என்ற வீரபாண்டியனின் மகன் என்றும் அண்ணன் வீரகேரளன் வீரநாராயணனுக்குப் பின் ஆட்சிக்கு வந்துள்ளான் என்றும் கருதலாம். இவன் சோழப் பேரரசன் முதலாம் இராஜராஜனின் மலை நாட்டுப் படையெடுப்பைத் தடுத்து போர் செய்துள்ளான். இப்போரில் இவன் தோல்வியடைந்து பின்னர் இராஜராஜனிடம் சரணடைந்ததன் மூலம் தனது ஆட்சிப் பகுதியை பெற்றுள்ளான். இதைப் பற்றி திரு வாலங்காட்டுச் செப்பேடும், கொங்கு தேச ராஜாக்கள் என்ற நூலும் குறிப்பிடுகின்றன. இராஜராஜனின் மலைநாட்டுப் படையெடுப்பு கி.பி. 989இல் நடைபெற்றுள்ளதால் இவன் அதன் பின் சிறிது காலம் ஆட்சி செய்திருப்பான். மேலும் இவனது கல்வெட்டுகள் இவனது 23ஆம் ஆட்சியாண்டு வரை கிடைப்பதால் இவன் கி.பி.990ஆம் ஆண்டு வரை ஆட்சி செய்துள்ளான் என்று கருதலாம்.

## வீரநாராயணன் அதிசய சோழன் - (கி.பி.990-1021)

இவனது முன்னொட்டுப் பெயரைக் கொண்டு இவன் வீரகேரளன் வீரநாராயணனின் மகன் என்றும், இவனது சித்தப்பா அமரபுயங்கனுக்குப் பின் கி.பி.990இல் ஆட்சிக்கு வந்துள்ளான் என்றும் தெரிகின்றது. இவனுடைய கல்வெட்டுகள் இவனது 31ஆம் ஆட்சியாண்டு வரைக் கிடைப்பதாலும், இவனுக்குப் பின் வீரநாராயணன் கி.பி.1021ஆம் ஆண்டில் ஆட்சிக்கு வந்துள்ளான் என்று கருதப்படுவதாலும் இவனது ஆட்சி கி.பி.1021இல் முடிவுற்றது என்று கருதலாம்.

## அதிசய சோழன் வீரநாராயணன் (கி.பி.1021-1040)

இவனது முன்னொட்டுப் பெயரைக் கொண்டு இவன் அதிசய சோழனின் மகன் என்றும் தந்தைக்குப் பின் கி.பி. 1021ல் ஆட்சிக்கு

வந்துள்ளான் என்றும் அறிகிறோம். இவ்வீரகேரள மரபினரில் இதற்கு முன் ஒரு வீரநாராயணன் ஆட்சி செய்துள்ளதால் இவனை இரண்டாம் வீரநாராயணன் என்று குறிப்பிடலாம் இவனுக்குப் பின் வீரகேரளன் கி.பி.1040இல் ஆட்சிக்கு வந்துள்ளான் என்று கருதப்படுவதால் இவனது ஆட்சி கி.பி.1040 வரை நடைபெற்றுள்ளது எனலாம்.

## வீரநாராயணன் வீரகேரளன் - (கி.பி. 1040-1069)

இவனது முன்னொட்டுப் பெயரைக் கொண்டு இவன் அதிசய சோழன் வீரநாராயணன் என்ற இரண்டாம் வீரநாரயணனின் மகன் எனலாம். இதுவரை வீரகேரள மரபினரால் கல்வெட்டுகளில் பயன்படுத்தி வந்த வட்டெழுத்து இவனது ஆட்சியுடன் முடிவுக்கு வந்தது. இவனுக்கு முன் இம்மரபினரில் வீரகேரளன் ஒருவன் ஆட்சி செய்துள்ளதால் இவனை இரண்டாம் வீரகேரளன் என்று குறிப்பிடலாம். இவனது கல்வெட்டுகள் இவனது 29ஆம் ஆட்சியாண்டு வரை கிடைப்பதால் இவனது ஆட்சி கி.பி.1069இல் முடிவடைந்துள்ளது என்று தெரிகின்றது.

## வீரகேரளன் அதிராஜராஜன் - (கி.பி.1069-1092)

இவனது முன்னொட்டுப் பெயரைக் கொண்டு இவன் வீரநாராயணன் வீரகேரளனின் மகன் எனலாம். தந்தைக்குப் பின் கி.பி.1069இல்ஆட்சிக்கு வந்துள்ளான். இவனது ஆட்சிக் காலத்தில் நடைபெற்ற மகாமகத் திருவிழாவைக் கொண்டும், இவனது மகன் ஸ்ரீராஜராஜனின் போளுவாம்பட்டி கல்வெட்டில் உள்ள வானிலைக் குறிப்பைக் கொண்டும், இவனது கல்வெட்டுகள் இவனது 23ஆம் ஆட்சியாண்டு வரைக் கிடைப்பதாலும் இவனது ஆட்சி கி.பி.1092 வரை நடைபெற்றுள்ளது தெரிகின்றது.

## அதிராஜராஜன் ஸ்ரீ ராஜராஜன் (கி.பி.1092-1129)

இவனது முன்னொட்டுப் பெயரைக் கொண்டு இவன் வீரகேரளன் அதிராஜராஜனின் மகன் என்று கருதலாம். இவனது போளுவாம்பட்டி கல்வெட்டின் வானிலைக் குறிப்பைக் கொண்டு இவன் கி.பி.1092இல் ஆட்சிக்கு வந்துள்ளான் எனலாம்.

இக்கல்வெட்டை வீ.இரர்மமூர்த்தி கரிகாலனுடைய கல்வெட்டு என்று கருதி வீரகேரள மரபினிரின் ஆட்சியைக் காலக் கணக்கீடு செய்துள்ளார். இவன் கொங்குச் சோழன் உததம சோழனின் (கி.பி.1100-1117) சமகாலத்தவன் என்று இருகூர் செப்பேட்டால் கருத முடிகின்றது. இவனது கல்வெட்டுகள் இவனது 37 ஆம் ஆட்சியாண்டு வரை கிடைப்பதால் இவன் கி.பி.1129ஆம் ஆண்டுவரை ஆட்சி செய்துள்ளான் எனலாம்.

## ராஜராஜன் கரிகாலன் - (கி.பி.1129-1149)

இவனது முன்னொட்டுப் பெயரைக் கொண்டு இவன் அதிராஜராஜன் ஸ்ரீராஜராஜனின் மகன் என்றும் இவனது தந்தை ஸ்ரீராஜராஜனின் ஆட்சி கி.பி. 1129இல் முடிவுற்றதால் இவன் கி.பி.1129இல் ஆட்சிக்கு வந்துள்ளான் எனலாம். இவனது கல்வெட்டுகள் இவனது 12ஆம் ஆட்சியாண்டு வரை கிடைப்பதால் இவன் கி.பி. 1149 ஆம் ஆண்டு வரை ஆட்சி செய்துள்ளான் எனலாம்.

இவனுக்குப்பின் ஆட்சிக்கு வந்தவர்கள் தந்தையின் பெயரை முன்னொட்டுப் பெயராக குறிப்பிடும் மரபு இல்லாமல் போனதால் வீரகேரளர்களின் கொடிவழி பிற்பகுதியில் கணக்கிட முடியாமல் குழப்பமான நிலையே காணப்படுகிறது. மேலும் வடகொங்குப் பகுதியில் மட்டும் ஆட்சி செய்து வந்த கொங்குச் சோழன் மூன்றாம் வீரசோழன் (கி.பி.1168-96) தென் கொங்கையும் கைப்பற்றிக் கொண்டதால் வீரகேரள மரபினரின் ஆட்சி கி.பி.12ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் வீழ்ச்சியைத் தழுவியது.

தென் கொங்கில் வீரகேரளர்களும், வடகொங்கில் கொங்குச் சோழர்களும் ஆண்டுகொண்டிருந்தபோது உத்தமசோழன் காலம் முதல் இருதிறத்தார்க்குமிடையில் முரண்பாடுகள் தோன்றி பூசலில் ஈடுபட்டனர். அதனால் வீரகேரளர்களில் ராஜராஜன் என்பவன் காலத்தில் ஒரு கோட்டை கட்டப்பெற்றது. அக்கோட்டை உத்தமசோழன் ஏற்கெனவே கோடிக்காரைத் தொழுவில் கட்டிய கோட்டைக்கு எதிராகக்கட்டப் பெற்றது. வீரகேரளர்கள் கட்டிய கோட்டைக்கு வஞ்சகர் வஞ்சகன்கோட்டை என்று பெயர். உத்தமசோழன் காலத்தில்

தொடங்கிய பூசல் மூன்றாம் வீரசோழன் (1168-96) காலத்தில் கொங்குச் சோழர் வெற்றிபெறும் நிலை எய்திவிட்டது. இம்மன்னன் 'இரு கொங்கும் ஒன்றாக ஆண்ட' என்று கூறுவதால் இம்மன்னன் காலம் முதல் தென்கொங்கும் கொங்குச் சோழர் ஆளுகைக்குப்பட்டது என்று உறுதியாகக் கூறலாம். கி.பி.1187முதல் தென்கொங்கு கொங்குச் சோழர் வசமாயிற்று. தென் கொங்குக் கல்வெட்டுகளை ஊன்றிப் பார்க்கும்போது காலப்போக்கில் இவ்விரு குடும்பக்களுக்கிடையில் மண உறவு ஏற்பட்டிருக்கவேண்டும் என்று தெரிகிறது. வீரசோழன் கல்வெட்டுகளில் வீரகேரள மன்னன் வீரநாராயணனை மாமடி என்று கூறுவதிலிருந்து இதனை அறிந்து கொள்ளமுடியும்.

## கொங்குச் சோழர்

கொங்குச் சோழர்களில் முதல் வீரசோழன் காலம் முதல் முதல் குலோத்துங்கன் (943-1168) வரையிலான மன்னர்கள் வடகொங்கில் மட்டுமே ஆட்சி செய்தனர். ஆனால் மூன்றாம் வீரசோழன் காலமுதல் தென்கொங்கிலும் அவர்கள் ஆட்சி பரவியது. மூன்றாம் வீரசோழனுக்கு முன் ஆண்டவர்கள் பட்டியல் கீழே தரப் பெறுகின்றது.

1. முதல்வீரசோழன் (943-980)
2. வீரசோழகலிமூர்க்கன் (980-1004)
3. கலிமூர்க்க விக்ரமசோழன் (1004-1047)
4. அபிமான சோழராஜாதிராஜன் (1085-1100)
5. ராஜாதிராஜ உத்தமசோழன் (1100-1118)
6. ராஜாதிராஜ வீரசோழன் II (1118-1138)
7. உத்தமசோழவீர நாராயணன் (1138-1149)
8. ராஜகேசரிகுலோத்துங்கன் (1149-1168)

முதற்பராந்தகன் அரசியல் சூழ்நிலை காரணமாகக் கொங்கு நாட்டை சுயாட்சிமிக்க பகுதியாக்கி கோநாட்டார் ஆட்சியில் விட்டுள்ளான். கோநாட்டார் கொங்குச் சோழர் என்று அழைக்கப்பெற்றனர். கொங்குச் சோழர்களில் முதல் மன்னன் வீரசோழப்பெருமானடிகள் என்பவன். இவன் கல்வெட்டு கோவை

மாவட்டம் அவினாசி வட்டம் ஆலத்தூரில் கிடைக்கின்றது. இவன் வீரசோழகலிமூர்க்கன் என்பவனின் தந்தை. அதனால் கே.வி.சுப்ரமணிய அய்யர் அவர்கள் இந்த வீர சோழன்தான் கொங்குச் சோழர்களில் முதல் மன்னன் என்று கருதுகிறார். மேலும் கொங்குநாட்டில் (வடகொங்கு) இவனுடைய கல்வெட்டுகள் இரண்டு கிடைத்துள்ளன. ஆலத்தூர் கல்வெட்டு ''ஸ்வஸ்திஸ்ரீ வீரசோழப் பெருமான் அடிகளுக்குத் திருவெழுத்திட்டுச் செல்லாநின்ற திருநல்லியாண்டு முப்பத்தைந்தாவது'' என்று தொடங்குகின்றது. இக்கல்வெட்டில் குறிப்பிடப்பெறும் வீரசோழப் பெருமானடிகள் வீரசோழக் கலிமூர்க்கனின் தந்தையே ஆவான். மேலும் பராந்தக சோழனுடைய ஆட்சியின் பிற்பகுதியில் இவனுடைய ஆட்சி கொங்கு நாட்டில் தொடங்குகின்றது. அதனால் பராந்தகனுடைய விருதுப் பெயரான வீரசோழன் என்ற சிறப்புப் பெயரை இவன் தாங்கியுள்ளான். இவனுடைய கல்வெட்டு வெள்ளியெறிச்சில், கொடுவாய் ஆகிய ஊர்களில் கிடைக்கின்றன.

## வீரசோழகலிமூர்க்கன் (கி.பி.980-1004)

வீரசோழனுடைய மகன் கலிமூர்க்கன் என்ற பொருளில் இப்பெயர் அமைந்துள்ளது. இவனுடைய கல்வெட்டுகள் கொடுவாய், பிரமியம், வெள்ளியெறிச்சில் ஆகிய ஊர்களில் கிடைக்கின்றன. கொடுவாய் கல்வெட்டு, கலிமூர்க்க பெருமாள் என்று கூறுகின்றது. இவன் கல்வெட்டுகளில் கோயிலுக்கு விளக்கு அளித்தசெய்தி. கொடுவாயில் கிணறு வெட்டிய செய்தி ஆகியவை குறிக்கப் பெறுகின்றன.

## கலிமூர்க்கன் விக்கிரமசோழன் (கி.பி.1004-1047)

கோநாட்டரசர்களில் மூன்றவதாகக் கூறப்பெறும் அரசன் கலிமூர்க்க விக்ரம சோழன் என்பதாகும். கோவை மாவட்டம் அன்னூரில் இவனுடைய கல்வெட்டுகள் ஆறு கிடைத்துள்ளன. அன்னூர் வடகொங்கில் அமைந்திருந்தமையால் தொடக்கக் காலக் கொங்குச் சோழர்கல்வெட்டுகள் இவ்வூரில் கிடைக்கின்றன. இவனுடைய கல்வெட்டுகள் வெள்ளியெறிச்சில் அகிலாண்டபுரம்,

அரசன் பாளையம், பிரம்மியம் ஆகிய ஊர்களில் கிடைக்கின்றன. பிரம்மியத்தில் இவனுடைய மெய்க்கீர்த்தி கிடைக்கின்றது. இவன் கல்வெட்டுகளில் கங்கைப்பள்ளி, மன்னியூர் கருவலூர் ஆகிய ஊர்களைச் சேர்ந்தவர்கள் விளக்குத்தானம் செய்துள்ளனர் என்று கூறப்பெறுகின்றது. மற்றொருகல்வெட்டில் புலியூர் என்ற ஊரைத் தானமாக அளித்த செய்தி கூறப்பெறுகின்றது. விளத்துரைச் சேர்ந்த சிலமண்டை என்ற வாணிகன் சந்தியா தீபம் விளக்கு வைத்ததைப்பற்றிக் கூறும் கல்வெட்டு ஒன்று கிடைத்துள்ளது. பழையாறையைச் சேர்ந்த வாணிகன் ஒருவன் சந்தி விளக்கு ஒன்று அளித்த செய்தியை மற்றொரு கல்வெட்டு கூறுகின்றது. கலையன்புத்தூர் (கோயில்பாளையம்) என்ற ஊரைச்சேர்ந்த புள்ளன் என்பவன் அடியார்களின் உருவங்களைச் செய்து வைத்து பாவை விளக்கு ஒன்றையும் செய்தளித்தான் என்று அக்கல்வெட்டு கூறும்.

## விக்கிரமசோழ அபிமானசோழன் (கி.பி.1047-85)

இவன் விக்ரம சோழனின் மகன் என்பது பெயராலேயே விளங்கும். இவனுடைய கல்வெட்டுகள் இரண்டு கோவை மாவட்டத்தில் கிடைத்துள்ளன. அதுவும் முற்றுப்பெறாத கல்வெட்டு. இக்கல்வெட்டில் பராக்கிரமபாகு என்ற பெயர் முதலில் குறிக்கப்பெறுகின்றது. அபிமான சோழனுடைய மற்றொரு கல்வெட்டு கோவை மாவட்டம் திருமுருகன்பூண்டியில் கிடைக்கின்றது. இக்கல்வெட்டு 'அபிமானச் சோழனேள்' என்று தொடங்குகிறது. அதனால் அரசனே ஆணையை அளித்துள்ளான் எனலாம். இக்கல்வெட்டு அபிமான சோழராஜாதிராஜன் என்று குறிப்பிட்டிருப்பதால் இராஜாதிராஜனுடைய தந்தையாக எடுத்துக் கொள்ளலாம். இருப்பினும் இக்கல்வெட்டில் ராஜாதிராஜனுடைய கொடி குறிக்கப்பெறுவதால் அபிமானசோழனுடைய மகன் இராஜாதிராஜன் என்று கொள்ளலாம். இராஜாதிராஜனுடய கல்வெட்டு திருமுருகன்பூண்டியில் கிடைக்கின்றது. இவனுக்குப்பின் இராஜாதிராஜ உத்தமச்சோழன், இராஜாதிராஜ வீரசோழன் ஆகிய மக்கள் ஆண்டுள்ளனர். இவர்களுடைய கல்வெட்டு கோவை மாவட்டத்தில்

கிடைக்கவில்லை. இவ்விரு மன்னர்களுக்குப்பின் பரகேசரி உத்தமசோழ வீர நாராயணன் என்பவன் ஆண்டுள்ளான்.

## பரகேசரி உத்தமசோழவீரநாராயணன் (கி.பி.1138-49)

இம்மன்னனுடைய கல்வெட்டு ஒன்று கோயில் பாளையத்தில் கிடைத்துள்ளது. கொங்குச்சோழர்கள் தொடர்ந்து வடகொங்குப் பகுதியை ஆட்சி செய்தனர். அதனால் கோவை மாவட்டத்தில் நிலைபெற்றிருந்த கொங்குச்சோழர் கல்வெட்டுக்கள் வடகொங்குப் பகுதியில் இடைப்பிற வரவாகக் கிடைக்கின்றன. வீரநாராயணனுக்குபின் ஆண்ட முதல் குலோத்துங்கன் காலத்துக் கல்வெட்டுக்கள் ஏதும் கிடைக்கவில்லை. ஆனால் அவனுக்குப்பின் ஆட்சி செய்த மூன்றாம் வீர சோழன் (கி.பி.1168-96) கல்வெட்டுக்கள் கோவை மாவட்டத்தில் மிகுதியும் கிடைக்கின்றன. இவனுடைய 19ஆம் ஆட்சி ஆண்டினைச் சேர்ந்த கொழுமம் கல்வெட்டு 'இரு கொங்கும் ஒன்றாக ஆண்ட' என்ற அடைமொழியுடன் தொடங்குகின்றது. அதனால் இம்மன்னனுடைய பத்தொன்பதாம் ஆட்சி ஆண்டிலிருந்து இரு கொங்குகளையும் ஆண்டவன் என்பது புலப்படும். இவனுக்குப் பின் இரண்டாம் குலோத்துங்கன் (கி.பி.1196-1207) ஆட்சிசெய்துள்ளான். இவனுடைய கல்வெட்டுகள் இரண்டு கோவை மாவட்டம் அன்னூரிலும், கடத்தூரிலும் கிடைக்கின்றன. இவற்றில் அன்னூர் கல்வெட்டு குறிப்பிடத்தக்கது. குலோத்துங்க சோழன் கல்வெட்டுகள் ஏழு கிடைத்துள்ளன. இவற்றில் ஒரு கல்வெட்டு சக ஆண்டு 1125 (கி.பி 1203) என்று முடிகின்றது. இக்கல்வெட்டு தவிர பிற கல்வெட்டுகள் முதல் குலோத்துங்கன் காலத்தை சேர்ந்தவையாகவும் இருக்கலாம்.

## முதல் குலோத்துங்க சோழன் (கி.பி.1149-1168)

இவனுடைய கல்வெட்டுகள் வடகொங்கு முழுவதும் கிடைக்கின்றன. கோவை மாவட்டம் அன்னூரில் குலோத்துங்கன் பெயரில் எட்டு கல்வெட்டுகள் கிடைக்கின்றன. அவற்றில் சில கல்வெட்டுகள் முதல் குலோத்துங்கன் காலத்தில் பொறிக்கப் பெற்றவை ஆகலாம். இவன் பாண்டியர் அரசியலில் ஏற்பட்ட தாயாதிச்சண்டையில்

தலையிட்டுள்ளான். குலசேகரப்பாண்டியன் என்பவனுக்கும் மாறவர்மன் பராக்கிரம பாண்டியன் என்பவனுக்கும் இடையில் ஏற்பட்ட அரியணை போட்டியில் குலசேகரபாண்டியனை குலோத்துங்கன் ஆதரித்தான். பராக்கிரம பாண்டியனுக்கு (வீரபாண்டியன்) ஆதரவாக இலாங்கபுரத் தண்டநாயகன், ஐயத்திரதத்தண்ட நாயகன் ஆகியோரை இலங்கை மன்னன் அனுப்பிவைத்தான். இவர்கள் தலைமைத்தாங்கி வந்த இலங்கைப்படை பாண்டியநாடு, சேர நாடு, சோழ நாடு ஆகிய நாடுகளைக் கொள்ளையிட்டன. அப்போது சோழப் பேரரசு குழப்பமடைந்திருந்தமையால் இலங்காப்புரத்தண்டநாயகன் பல ஊர்களை எரி ஊட்டினான். அந்த நேரத்தில் குலோத்துங்கன் குலசேகரனுக்கு ஆதரவாக இருந்த ஈழப்படையைத்தாக்கி நிர்மூலமாக்கினான். மேலும் இரண்டு தளபதிகளிள் தலைகளைத் துண்டித்து மதுரைக் கோட்டை வாயிலில் தொங்கவிட்டான்.

அன்னூரில் குலோத்துங்கசோழனுடய கல்வெட்டுகள் சில கிடைத்துள்ளன. அவை 4, 5, 7, 8 ஆகிய ஆட்சி ஆண்டுகளைச் சேர்ந்தவை. ஏழாம் ஆட்சி ஆண்டில் நான்கு கல்வெட்டுகள் வெட்டப்பெற்றுள்ளன. கல்வெட்டுகளை வெட்டிக் கொடுத்தவர்களில் சிவப்பிராமணர், வாணிகர், பெருமாள், சாமந்தர் முதலியோர், மரபுக்குறிக்கப்பெறாத இருவர் ஆகிய பெயர்கள் சுட்டப்பெறுகின்றன. நான்காம் ஆட்சி ஆண்டு கல்வெட்டு ஆண்டிகளுக்கு ஐந்து ஐந்து ஓடுகள் கொடுத்ததைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளது. இது திருநீலகண்டர் சிவனடியார்களுக்குத் ஓடு கொடுத்ததை நினைவுபடுத்துகின்றது. மற்ற கல்வெட்டுகள் அனைத்தும் சந்தியா தீபம் வைப்பதற்குக் காசுகள் கொடுத்ததைப் பற்றிச் சுட்டுகின்றன.

குலோத்துங்க சோழன் ஆட்சியில் கொங்கு நாடு முழுவதும் படை வீடுகளின் எண்ணிக்கை அதிகரிக்கப்பெற்றன. கோயில்களுக்குத் தானம் செய்பவர்களில் படைவீரர்களும், சேனாபதிகளுமே அதிகம். திருமுருகன்பூண்டி, அவினாசி, பேரூர், ஆனைமலை, கடத்தூர், வெள்ளலூர், முட்டம் (போளுவாம்பட்டி), ஆகிய ஊர்களில் படையைச்சேர்ந்தவர்களும் சேனாபதிகளும் கோயில்களுக்குக் கொடை வழங்கியுள்ளனர். பேரூரில் இடங்கைப் படை பிரிவினர்.

அப்படைப்பிரிவு சேனாபதிகள் இடங்கை நாயகம் உடையார் என்ற கோயிலைக் கட்டியுள்ளனர். அன்னூரிலும் இப்பெயர்கொண்ட கோயில் ஒன்று உள்ளது. முதல் குலோத்துங்கச் சோழனுக்கு பின் மூன்றாம் வீரசோழன் ஆட்சிக்கு வந்தான். அவன் பரகேசரி வீரசோழன் என்று கல்வெட்டுகளில் அழைக்கப்படுகின்றான்.

## மூன்றாம் வீரசோழன் (1168-96)

முதலாம் குலோத்துங்கனுக்குப் பின் இம்மன்னன் ஆட்சிக்கு வருகிறான். இவனைக் குலோத்துங்கனின் மகனாகவே கொள்ளவேண்டும். காரணம் முதல் குலோத்துங்கன் இராஜகேசரி என்ற பட்டத்துடன் ஆட்சி செய்தான். மூன்றாம் வீரசோழன் பரகேசரி என்ற பட்டத்துடன் ஆட்சி செய்தான். அவனுக்குப்பின் வந்த இரண்டாம் குலோத்துங்கன் இராஜகேசரி என்ற பட்டத்துடன் ஆட்சி செய்கிறான். முதல் குலோத்துங்கனின் பேரன் இராஜகேசரி குலோத்துங்கன். இவ்விருவர்களுக்கிடையில் ஒரு பரகேசரி ஆண்டுள்ளான். அவனே மூன்றாம் வீரசோழன்.

இவன் இரு கொங்கையும் ஆண்டவன் என்று கூறிக்கொள்ளுகின்றான். இரு கொங்கு என்பது வடகொங்கு, தென்கொங்கு எனும் இரு பிரிவைக் குறிக்கும். கொழுமம் கல்வெட்டு ஒன்று இவன் பிறந்த நாளும் சூரியகிரகணமும் ஒரே நாளில் இருந்தமையால் ஏற்பட்ட தோஷத்தைப் போக்க வீரசோழீஸ்வரம் என்ற கோயிலை கொழுமத்தில் கட்டினான் என்று கூறும். இவன் அக்கோயிலுக்கு இரட்டையம்பாடி என்ற ஊரையும் வீரசோழநல்லூர் என்ற ஊரையும் தானமாக அளித்தான். வீரசோழீசுவரத்தைக் கட்டிய சிற்பியின் பெயரும், கட்டுவதற்குக் காரணமாயிருந்த பிரமாதிராயன் பெயரும் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளன. கொழுமம் கல்வெட்டில் சூரியகிரகணம் பற்றிய குறிப்பு வருவதால் இவனுடைய ஆட்சியாண்டை அறுதியிட்டுக் கூற முடிகின்றது. இவன் கீழ் பணிபுரிந்த அதிகாரிகளும், சேனாதிபதிகளும் கொங்குநாடு முழுவதுமுள்ள கோயில்களுக்குத் தானம் அளித்துள்ளனர். இவ்வரசன் இரு கொங்கையும் ஆண்டதால் கொங்கு நாட்டு அனைத்துக் கோயில்களுக்கும் ஊரையும், ஊர் வரியையும் தானமாக அளித்தான்.

மன்னீசுவரர் கோயிலுக்கு வீரசோழ நல்லூர் என்ற ஊரைத் தேவதானமாக அளித்துள்ளான். அக்கல்வெட்டு 'மன்னியூர் ஊரார்க்கும் தேவகன்மிகளுக்கும் ஓலை கொடுத்தபடியாவது' என்று தொடங்குகின்றது. அதனால் இவ்வூரை அரசன் தானே தானமாகக் கொடுத்துள்ளான் என்று தெரிகிறது.

## இரண்டாம் குலோத்துங்கன் (கி.பி.1196 - 1207)

அன்னூரில் கிடைக்கின்ற குலோத்துங்கன் கல்வெட்டு ஒன்று சக ஆண்டு 1125 (கி.பி.1203) என்று கூறுகின்றது.. முதல் குலோத்துங்கன் கி.பி.1149 முதல் 1168 வரை ஆட்சி செய்துள்ளான். ஆனால் இக்கல்வெட்டு கி.பி.1203 ம் ஆண்டினைச் சேர்ந்ததாக உள்ளது. இக்கல்வெட்டு கோயில் கொடைகள் நிர்வகிக்கப்பெற்ற விதம் பற்றிக் கூறகின்றது. அக்கல்வெட்டின் முழுவாசகம் கீழே தரப்பெறுகின்றது.

*''வடபரிசார நாட்டு மன்னியூர்*
*ஆளுடையார் மன்னியாமண்டார்*
*காணியுடைய சிவப்பிராமண*
*ர் பலர்பாலும் பொன்கொண்டு*
*டைய விளக்கு இவ்வாண்டு*
*க்கு உள்பட கல்வெட்டிக் கு*
*டுத்தவிளக்கு நாளொன்றுக்கு விள*
*கு சந்தியாதீபம் நூற்றிபதி நான்கும் கரும்பார்ப்பான்*
*தோட்டத்தால் விள*
*க்கு பதினைஞ்சும் ஆகவிளக்*
*கு நூற்றிருபத்தொன்பதும் குடம்*
*கொடு கோயில் புகுவார் சேவி*
*த்து வருக இத்தன்மம் சந்திராதித்த*
*வரை செல்வதாக சென்ற*
*யாண்டு ஆயிரத்தொரு நூற்றி*
*ருபத்தஞ்சரை இத்தன்மம் பன்ம*
*ஹேபவரரகைஷ''*

இக்கல்வெட்டு அரசனுடைய ஆணையாக இருப்பதால் விளக்குதானத்தில் ஏற்பட்ட குழப்பத்தைச் சரிசெய்து தருவதற்காகவே அளிக்கப்பெற்றது என்பதை வலியுறுத்தும். இரண்டாம் குலோத்துங்கனுக்குப்பின் வீரராசேந்திரன் ஆட்சிக்கு வந்தான். கி.பி.1206இல் வீரராசேந்திரன் கல்வெட்டு தொடங்குகின்றது. இரண்டு அரசர்களின் ஆட்சிக்கிடையில் பத்தாண்டு இடைவெளி உள்ளது. ஆகையால் இவ்விருவருக்கிடையில் ஓர் அரசன் ஆண்டிருக்க வேண்டும். அவன் தான் இராஜகேசரி பட்டம் தரித்த இரண்டாம் குலோத்துங்கன் என்பவன். இவன் கல்வெட்டு தென்கொங்கில் கிடைக்காமையால் தென்கொங்கு மறுபடியும் வீரகேரளர் ஆட்சிக்கு சென்றிருக்கும் எனலாம்.

## வீரராசேந்திரன் (கி.பி.1207-1256)

வீரசோழனின் மகனான வீரராசேந்திரன் கி.பி.1206-ல் பட்டத்துக்கு வந்தான். இவனும் இரு கொங்கையும் ஆண்டதாகக் கூறிக்கொள்கிறான். அன்னூரில் இவனுடைய கல்வெட்டுக்களில் ஆட்சியாண்டைக் குறிப்பிடும் பொழுது 'எதிராமாண்டு' என்ற சொல் குறிப்பிடப் படுகின்றது. சான்றாக 'ஸ்வஸ்தி ஸ்ரீ வீரராசேந்திர சோழ தேவர்க்கு எதிர் பதினேழாம் ஆண்டு' என்று வருவதைக் கூறலாம். எதிர் என்ற வாசகம் பயன்படுத்தப்பட்டால் அதைக்கூட்டி ஆட்சியாண்டைக் கொள்ள வேண்டும். அன்னூரில் எதிராமாண்டைக் குறிக்கின்ற கல்வெட்டுக்கள் ஏழு கிடைத்துள்ளன. கொங்குநாடு முழுவதும் இவனுடைய கல்வெட்டுக்கள் முந்நூற்றுக்கும் அதிகமாகக் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. ஏழாம் ஆண்டு தொடங்கி முப்பத்தைந்தாம் ஆண்டு வரயிலான கல்வெட்டுக்கள் அன்னூரில் கிடைத்துள்ளன.

இந்த மன்னனுடைய கொழுமம் கல்வெட்டு ஒன்றினால் அரிய செய்தி கிடைக்கின்றது. இவன் கரை வழிநாட்டின்மீது படையெடுத்த போது கரை வழிநாடும் கொழுமமும் கொள்ளையிடப்பெற்றன. அந்த இழப்பை ஈடுகட்ட வைகாவிநாட்டு இரட்டயம்பாடி என்ற ஊரைத் தானமாகக் கொடுத்துள்ளான். ''நாம் படையேற்றுகையில் கரைவழிநாடும் கொழுமம் அழிவுபட்டமையில் நமக்குப் பிராயசித்தமாக'' என்று கூறி இரட்டயம்பாடியைத் தானமாக அளித்தான்.

# இரண்டாம் விக்கிரம சோழன்

வீரராசேந்திர சோழனுக்குப்பின் விக்கிரம சோழன் என்று பல கல்வெட்டுக்கள் குறிக்கப்படுகின்றன. இக்கல்வெட்டுக்கள் இரண்டு அரசர்கள் விக்கிர சோழன் என்ற பெயரில் வாழ்ந்ததைக் குறிக்கின்றன. இவ்விருவருக்குரிய கல்வெட்டுக்களையும் வகைப்படுத்திப் பார்ப்பது அரிதாக உள்ளது. வரலாற்றாசிரியர் இரண்டாம் விக்கிரம சோழன் என்றும், மூன்றாம் விக்கிர சோழன் என்றும் இருவரைப் பிரித்துக் கூறுவர். மேலும் மாறவர்மன் சுந்தர பாண்டியன். மாறவர்மன் விக்கிரம பாண்டியன் ஆகியோர் கல்வெட்டுக்களில் மச்சுனனார் என்று விக்கிரம சோழனை அழைக்கின்றனர். இது கொண்டு கே.வி.சுப்பிரமணிய அய்யர் வீரராசேந்திரன் (விக்கிரம சோழனின் தந்தை) தன்னுடைய இரண்டு பெண்மக்களை பாண்டிய மன்னர்களுக்கு மனம் முடித்துக் கொடுத்திருக்க வேண்டும் என்று கருதுகிறார். மேலே கூறப்பெற்ற பாண்டிய மன்னர்களின் காலம் வீரராசேந்திரனின் காலம் ஆகியன ஒன்றேயாகையால் விக்கிரம சோழன் பாண்டிய நாட்டிற்கு வந்திருக்க வேண்டும் எனலாம்.

இரண்டாம் விக்கிரமனின் ஆட்சியாண்டு (7) சக ஆண்டு 1185 உடன் வருவதால் அவன் வீரராசேந்திரனுக்குப் பின் (கி.பி.1256) ஆட்சிக்கு வந்திருக்க வேண்டும என்று கருதலாம். மற்றொரு விக்கிரம சோழன் கல்வெட்டுக்களில் கூறப்படுவதால் இவனுடைய இறுதி ஆடசி ஆண்டினை உறுதிப் படுத்துவது கடினமாக உள்ளது. மூன்றாம் விக்கிரம சோழன் கி.பி.1274-ல் ஆட்சிக்கு வந்தான். இருவருடைய ஆட்சிக்கும் இடையில் பதினெட்டு ஆண்டுகள் இடைவெளி. அதனால் கல்வெட்டு எழுத்து வடிவத்தைக் கொண்டு இருவரையும் பிரித்தறிவது கடினம். ஆனால் இருவரும்.'பரகேசரி' என்ற பட்டப் பெயரைத் தாங்கி இருப்பதால் இருவருக்குமிடையில் ஓர் 'இராஜகேசரி' ஆண்டிருக்கவேண்டும் என்று கருத வேண்டியுள்ளது. இரண்டாம் விக்கிரம சோழன் ஏழு ஆண்டுகளே (கி.பி.1256-63) ஆண்டான் என்று கொண்டால் இவனுக்குப் பின் ஓர் இராஜகேசரி பத்தாண்டுகள் ஆண்டிருக்க வேண்டும் என்றும் கருதலாம். ஏனென்றால் மூன்றாம் விக்கிரம சோழன் ஆட்சி கி.பி.1273ல் தொடங்குகின்றது. மூன்றாம் விக்கிரம சோழனை இரண்டாம் விக்கிரம சோழனின் பேரன் என்று

கருதலாம். கொங்குச் சோழரின் இறுதி மன்னன் மூன்றாம் விக்கிரம சோழன் 32 ஆண்டுகள் ஆண்டான். ஆகையால் அவன் ஆட்சி கி.பி.1305இல் முடிவுறுகின்றது. அதே ஆண்டு கொங்குச் சோழர் ஆட்சியின் இறுதி ஆண்டு எனலாம்.

## சுந்தரபாண்டியன்

கொங்குச்சோழர் ஆட்சிக்குப்பின் பாண்டியர்கள் இப்பகுதியை ஆண்டுள்ளனர், இவர்களைக் கொங்குப் பாண்டியர் என்று கொங்கு வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர். இவர்களில் சிலர் இராசகேசரி பட்டம் தரித்து ஆண்டுள்ளனர். வீரபாண்டியன், விக்ரபாண்டியன், சுந்தரபாண்டியன் ஆகியோர் பெயர்கள் கல்வெட்டில் குறிக்கப்பெறுகின்றன. ஆனைமலைக் கல்வெட்டில் 'கோச்சடை பந்மரான சுந்தரபாண்டிய தேவர்க்கு பதினான்காவது' என்று வருகின்றது. இதே போன்ற மற்றொரு கல்வெட்டும் இம்மன்னனுடைய 14ஆம் ஆட்சி ஆண்டில் பொறிக்கப் பெற்றுள்ளது. வாணியல் குறிப்புகளைக் கொண்டு இக்கல்வெட்டுகள் கி.பி.12.1.1332 என்ற நாளைச் சேர்ந்தது என்பர். இக்கல்வெட்டில் குறிக்கபெறும் பல்லவரையனான சுந்தரப்பெருமாள் வாழ்வித்தான் எனபலர் பாண்டி மண்டலத்திலிருந்து வந்த அரசு அதிகாரி என்றும் கூறப்பெறுகின்றது. மற்றொரு கல்வெட்டும் இதே அதிகாரி இதே தெய்வம் குறிக்கப்பெறு கின்றனர். இரண்டாவது கல்வெட்டில் வடக்கிலூரான வீரபாண்டிய நல்லூர் ஊர்ச்சபையார் பணத்தைப்பெற்றுக்கொண்டு நாள் தோறும்இறைவிக்கு அமுது படிசெய்தற்கு ஆண்டிற் கொருமுறை நெல் அளிப்பதாக உறுதி அளிக்கின்றனர்.

## மூன்றாம் வீரவல்லாளன் (கி.பி.1291-1344)

போசளர்களில் இம்மன்னன் கல்வெட்டுகளே கொங்கு நாடு முழுவதும் கிடைக்கின்றன. இவன் இறுதி நாட்கள் பற்றிப் பல்வேறுகருத்துகள் நிலவுகின்றன. கி.பி.1342ல் மதுரை சுல்தானியர்களால் கொல்லப்பெற்றான் என்று மஜும்தார் உட்பட பல அறிஞர்கள் கருதுகின்றனர். பேராசிரியர் கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி மதுரையில் அவன் உயிருடன் தோலுரிக்கப்பெற்றான் என்று கூறுவார்.

கொங்கில் போசளர் ஆட்சி பரவியபோது பவானிசாகரில் மூழ்கியுள்ள டண்ணாயக்கன்கோட்டை அவர்களின் தலைநகராக விளங்கியது. அதற்குக் கல்வெட்டுகளில் நீலகிரி சாதாரணன் கோட்டை என்று பெயர். இக்கோட்டையிலிருந்து போசளர் பிரதிநிதியாக ஆட்சி செய்தவன் மாதப்ப தண்டநாயகன் என்பவன். பேரூரில் வீரவல்லாளனின் நீண்ட மெய்க்கீர்த்தி ஒன்றுபொறிக்கப்பெற்றுள்ளது. அதில் அம்மன்னனின் வெற்றிச் செய்திகள் சுட்டப்படுகின்றன. இக்கல்வெட்டு கொங்கு நாட்டு அரசியல் நிருவாகத்தை அறிந்து கொள்வதற்குக் கிடைத்த சிறந்த சான்று. கொங்கில் உள்ள சில நாட்டுச் சபைகள் நீலகிரி சாதாரணன் கோட்டை மாதவப் பெருமாள் கோயிலுக்குத் தங்கள் நாட்டு வரியினை அளித்துள்ளன.

வீரவல்லாளனின் இறுதிநாட்கள் அரசியல் குழப்பங்களும். கலங்களும் நிறைந்தவை. மாலிக்காப்பூர் என்ற முகம்மதிய படைத்தலைவன் தென்னிந்தியா மீதுபடையெடுத்து வந்தான். அந்தப்படையெடுப்பின் போது கொங்கு நாட்டில் பல ஊர்கள் எரியூட்டப் பெற்றன. இந்தவீழ்ச்சிக்குப்பின் அழிந்து போன ஊர்களில் குடியேற்றம் நடைபெறுவதற்குப் பல நூற்றாண்டுகள் பிடித்தன. அன்னூர் ஆனைமலை முட்டம் ஆகிய ஊர்களில் வீரவல்லாளனுக்குப் பின் கல்வெட்டுகள் ஏதும் கிடைக்கவில்லை.

கோவை மாவட்டம் கேந்திரமுக்கியத்துவம் வாய்ந்த இடத்தில் நிலைபெற்றிருந்தமையால் அரசியல் முக்கியத்துவம் பெற்று விளங்கியது. இடைக்காலச் சேரர்கள் முதல் போசளார் வீரவல்லாளன் காலம் வரையிலான காலத்தில் (700ஆண்டுகள்) இங்கு பல்வேறு அரசியல் நிகழ்வுகள் நடந்துள்ளன. அரசியல் நிருவாகம், சமூக நிருவாகம் எனப்பல நிலைகளில் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. ஊர்ச்சபைகள், பிரமதேய சபைகள் சுயமாகச் செயல்பட்டன. இவை மட்டுமின்றி வணிகக்குழுக்களின் சுயாட்சி பெற்ற நிருவாகமும் பெருமை பெற்று விளங்கியது.

போசளர்களுக்குப்பின் விஜயநகர மன்னர்கள், மைசூர் உடையார்கள், மதுரை நாயக்கர்கள் பாளையக்காரர்கள், பிரித்தானியர்கள் ஆகியோர் ஒருவர்பின் ஒருவராக ஆட்சி செய்தனர்.

# நாட்டுப்பிரிவுகள்

கோவை மாவட்டம் தென்கொங்கிலிருந்த எட்டு நாடுகளையும் வடகொங்கிலிருந்த வடபரிசாரநாட்டின் பெரும்பகுதியையும் தன்னகத்த கொண்டிருந்தது. தென்கொங்கு வடகொங்கு என்ற பெரும் பிரிவுகள் இடைக்காலத்தில் மக்கள் பெருக்கம் மிகுதியானதையொட்டி உருவான பிரிவுகள். கி.பி.12ஆம் நூற்றாண்டிலிருந்து நாட்டுப் பிரிவுகள் பல்கிப் பெருகின. நாடு என்ற சொல் பொதுவாக நிலம் / நாட்டுப் பகுதி என்று பொருள் கொள்ளப் பெறுகின்றது. இச்சொல் குறித்து விளக்குமிடத்து 'நாடு' என்பது காடழித்து உருவாக்கப்பட்டது என்றும், வேளாண்மைப் பகுதிகளின் கூட்டமைப்புதான் நாடு என்றுக் கூறப்பெறும். காடழித்து உருவாக்கப்பட்ட பகுதிகள்தான் நாடுகள் என்பதே சோழன் பூர்வபட்டயத்தின் மையக்கருத்து. கொங்கு நாட்டின் அரசியல் அதன் தொடக்க நிலையில் சமூக அமைப்புகளைச் சார்ந்துள்ளது. அரசியல் என்பது சமூக சார்பற்ற நிறுவனமாக இருக்கவில்லை.

## நாடுகளின் உருவாக்கம்

கி.பி.12ஆம் நூற்றாண்டிலிருந்துதான் கோவை மாவட்டத்தில் நாட்டுப் பிரிவுகள் உருவாக்கப்பெறுகின்றன. பொதுவாகக் கொங்கு நாட்டில் கி.பி.10ஆம் நூற்றண்டிலேயே நாட்டுப்பிரிவுகள் உருவாகிய போதும் கோவை மாவட்டத்தில் கி.பி.12ஆம் நூற்றாண்டிலிருந்துதான் நாட்டுப்பிரிவுகள் உருவாக்கப் பெறுகின்றன. கி.பி.10ஆம் நூற்றாண்டிலிருந்து ஊர்கள் கல்வெட்டுகளில் குறிக்கப்பெற்றாலும் நாடு (Micro region) என்ற பிரிவு கி.பி.12ஆம் நூற்றாண்டிலிருந்துதான் குறிக்கப்பெறுகின்றது. ஆலத்தூர், வெள்ளலூர், மன்னியூர், சூரலூர், திருமுருகன்பூண்டி, பேரூர் ஆகிய ஊர்ப்பெயர்கள் கல்வெட்டுகளின் குறிக்கப்பெற்றாலும் அவை சார்ந்த நாட்டுப் பெயர்கள் குறிக்கப்பெறவில்லை.

கோவை மாவட்டத்தில் காணப்பெறும் நாட்டுப் பிரிவுகளிலேயே மிகப்பெரியது வட பரிசாரநாடு. கொங்கு மண்டலத்தைப் பெறுத்தவரையிலும் இதுதான் பெரும்பரப்பினைப் பெற்ற நாடு. இந்நாட்டுப்பிரிவின் பரப்பு 3750 சதுர கிலோமீட்டர் ஆகும். வாயறைக்கா நாடு, பொங்கலூர்க்கா நாடு, பேரூர் நாடு போன்ற நாடுகளின் பரப்பு 500 சதுரகிலோமீட்டர்கள் ஆகும்.

## வடபரிசாரநாடு

வடபரிசாரநாட்டினைச் சதகங்களும் பட்டயங்களும் ஆறைநாடு என்று கூறும். ஆறை நாடு என்பதில் வட பரிசார நாடு மட்டுமின்றி பேரூர்நாடும் அடங்கும். ஆறைநாடு என்பதன் பொருள் பற்றி இரண்டு விதக்கருத்துகள் உள்ளன. ஒரு சாரார் ஆறுகள் நிறைந்த நாடு என்றும், ஆறுநாடு என்பதன் திரிபே ஆறை நாடு என்றும் கூறுகின்றனர். இரண்டு ஆறுகளுக் கிடையில் அமைந்தநாடு என்றும் பொருள் கொள்கின்றனர். வடக்கே வாணியாறும், தெற்கே காஞ்சியாறும் எல்லைகளாக நிற்கின்றன. ஆறைநாடு என்ற பெயரினை வேறொரு பொருளிலும் வழங்கியதாகக் கொள்ளலாம். ஆறுநாட்டு வேளாளர்கள் என்ற சமுதாயப் பிரிவு உண்டு. இந்தச் சமுதாயப் பிரிவின் அடிப்படையிலும் ஆறுநாடு என்ற பிரிவு உருவாகியிருக்க வேண்டும் எனலாம்.

கல்வெட்டுகளில் வடபரிசாரநாடு என்றும், வட பாரிசார நாடு என்றும் குறிக்கப்பெறுகின்றது. முன் கூறுப்பெற்ற பெயரே மிகுதியும் பயின்றுவரக் காணலாம். பாரிசாரநாடு என்று கொண்டு சில ஆய்வாளர்கள் வேள் பாரிக்குரிய நாடு என்று முடிவு கூறுகின்றனர். இக்கருத்திற்கு ஆதரவாகச் சான்று ஏதும் கிடைக்கவில்லை. கொங்கு நாட்டின் மையப்பகுதியில் பாய்ந்து செல்லும் நொய்யாலாற்றை (காஞ்சி) மையமாக வைத்து நாட்டு எல்லைகள் வகுக்கப்பெற்றன. அவ்வாறு வரையறுக்கும்போது தென்கரையில் வேளாண் வளர்ச்சியும் குடியேற்றங்களும் புத்தூர் ஆக்கங்களும் சோழராட்சியின் தொடக்கத்திலேயே முடிந்து விட்டன. அதனால் தென்கரையில் காங்கய நாடு, வீரசோழ வளநாடு, வாயறைக்கா நாடு, மேல்கரை பூந்துறை

நாடு ஆகிய நாட்டுப்பிரிவுகள் ஏற்படுத்தப் பெற்றன. மேலும் இவ்வாற்றின் வடகரையில் குறும்புநாடு என்ற ஒரு நாட்டுப் பிரிவு ஏற்பட்டது. குறும்பு நாட்டின் மேற்கெல்லையாக செங்கப்பள்ளி விளங்கியது. குறும்பு நாட்டிற்கு மேற்கிலும் நொய்யலுக்கு வடக்கிலுமிருந்த பெரும்பரப்பில் சமண சைவ சமயங்களைச் சுட்டும் சில ஊர்களே தொடக்கத்திலிருந்தன. அவ்வூர்களும் பண்டைய பெருவழிகளின் அருகிலேயே இருந்தன. இந்தப் பகுதியின் உள்புறங்களில் கால்நடை வளர்ப்பில் ஈடுபட்டு நாடோடிகளாய் வாழ்ந்த பூலுவர்கள்மிகுந்த காணப்பெற்றனர். ஆனால் கி.பி.12ஆம் நூற்றாண்டிலிருந்து பூலுவர்கள் நிலையாக வேளாண்மையில் ஈடுபட்ட குடிகளாக மாற்றப்பெற்றனர்.

## பள்ளிகள்-கால்நடை வளர்ப்போர் குடியிருப்புகள்

வடபரிசாரநாட்டில் பள்ளி என்ற பெயர் கொண்ட ஊர்கள் பல உள்ளன. விண்ணம்பள்ளி, பதுமன்பள்ளி, வயிரப்பள்ளி, கைஞ்சப் பள்ளி, தடப்பள்ளி, செங்கறப்பள்ளி, வடக்கிற்பள்ளி, தெற்கிற்பள்ளி, நரியம்பள்ளி என ஊர்ப்பெயர்கள் பல பள்ளி என்ற விகுதிப் பெயருடன் அமைந்துள்ளதைப் பார்க்கலாம். வடதமிழ்நாட்டில் கிடைக்கின்ற நடுகற்கல்வெட்டுகளில் பள்ளி என்று முடியும் ஊர்ப் பெயர்கள் சுட்டப்பெறுகின்றன. அந்த நடுகற்கள் மாடுபிடிசண்டையில் மாண்ட வீரர்களுக்கு எடுக்கப் பெற்றவை. ஒரு நடுகல்லில் போரில்பட்ட வீரனைக் குறிப்பிடும்போது புதுப்பள்ளிகளோடு செவ்று எறிந்துபட்டான்' என்று கூறும். இங்கு புதுப்பள்ளி என்பது கால்நடைவளர்ப்பில் - பாதுகாப்பில் ஈடுபட்டிருந்த மக்களைக்குறிக்கும். பள்ளி என்ற திராவிட சொல் இந்தியாவின் வடபுலத்தில் மத்திய பிரதேசம் வரை பரவியிருந்த தன்மையை ஆயவாளர்கள் எடுத்துக் காட்டிள்ளனர். செங்கம், தருமபுரிப் பகுதிகளில் கிடைக்கும் நடுகற்கள் சிலவற்றில் நரிப்பள்ளி, மின்னாப்பள்ளி என இடப்பெயர்கள் குறிக்கப் பெறுகின்றன. இவை கி.பி.6-ஆம் நூற்றாண்டிலிருந்து வழக்கத்தில் உளளவை. மேலும் பத்துப் பாட்டில் ஒன்றான மலைபடுகடாத்தில் 'காவும் பள்ளியும்' (வரி 451) என்று குறிப்பிடும் போது கால்நடை மேய்ப்போர் (இடைச்சேரி) குடியிருப்பு என்று நச்சினார்க் கினியர்

குறிப்பிடுவர். அதனால் பள்ளி என்பது கால்நடை மேய்ப்போர் குடியிருப்பு என்று பொருள் கொள்ளலாம். பள்ளி என்ற விகுதியுடன் கூடிய இடப் பெயர்கள் சமண சமயத்துடன் தொடர்புடைய பெயர்களாகக் கருதப்பெறுகின்றன. ஆனால் கோவை மாவட்டத்தில் கிடைக்கும் பள்ளி என்ற விகுதியுடன் கூடிய ஊர்ப் பெயர்கள் எல்லாவற்றையும் சமண சமயத்துடன் தொடர்பு படுத்த முடியாது. அவற்றில் பெரும்பாலானவை கால்நடை வளர்ப்பு செய்வோர் குடியிருப்பாக இருந்திருக்க வேண்டும்.

வட பரிசார நாட்டில் பாடி என்ற விகுதி கொண்ட ஊர்ப் பெயர்களும் உளளன. அவற்றில் குறிப்பிடத்தக்கது வெள்ளைப் பாடி என்ற ஊராகும். பாடி என்ற விகுதி கொண்ட பெயர்களும் தொடக்கத்தில் கால்நடை மேய்ப்பவர்கள் தங்கியிருந்த ஊர்ப்பெயர்களாக விளங்கியிருக்க வேண்டும். அன்னூர் கல்வெட்டு ஒன்றில் வட பரிசாரநாட்டு ஆன்பதி என்று குறிப்பிடப்படுகின்றது. இப்பெயரில் ஆன் என்ற சொல் பசு என்ற பொருளில் வழங்கப் பெற்றது. இது கொண்டு இப்பெயரும் கால்நடை வளர்ப்புடன் தொடர்புடையபெயர் எனலாம். வடபரிசார நாட்டிலிருந்த பல ஊர்ப் பெயர்கள் கால்நடையுடன் தொடர்புடைய பெயர்களாக இருப்பதால் இப்பகுதி மக்கள் கால்நடை வளர்ப்பில் சிறப்புற்றிருந்தனர் என்பதும், அவர்களை இருந்து வாழும் வேளாண்மைக்கு மாற்றிய போது அவர்கள் வாழ்விடங்களும் கால்நடை வளர்ப்புடன் தொடர்புடைய ஊர்களாக அமைந்தன என்பது குறிப்பிடத்தக்கது. மேலும் வட பரிசார நாட்டில் துடியலூர், மாவண்டூர், கள்ளிமடை, இடிகரை, கவயன்புத்தூர், இராசாதி, முருகந்துறை, கூடலூர், சத்திய மங்கலம், கொற்றமங்கலம், தென்கரை நியமம், தென்கரை கொடிவேரி, நம்பிப் பேரூர், மொட்டனம், கருவாலூர் ஆகிய ஊர்கள் பழம்பெருமை வாய்ந்தவை.

## பொங்கலூர்க்காநாடு

இந்நாட்டில் வடபொங்கலூர்க்காநாடு, தென் பொங்கலூர்க்காநாடு என இருபெரும் பிரிவுகள் இருந்தன. கோவை மாவட்டத்தின் தென்கிழக்கு ஓரப்பகுதி வட பொங்கலூர்க்காநாடு அமைந்திருந்தது.

கொடுவாய், பொங்கலூர் ஆகியவை பொங்கலூர்க்காநாட்டின் அமைந்திருந்த கோவை மாவட்டத்து ஊர்கள் ஆகும்.

## தென் கொங்கு

இன்றைய கோவை மாவட்டத்தின் வட கோவை வட்டம், மேட்டுப்பாளையம் வட்டம், அவினாசி வட்டம் ஆகிய வட்டங்கள் நீங்கலாக பிற வட்டங்கள் இடைக்காலக் கொங்கில் தென்கொங்கு என்று அழைக்கப் பெற்றது. இப்பகுதி வரலாற்றுக் காலந்தோறும் கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த பகுதி. இயற்கை வளத்தினாலும், பாலக்காட்டுக் கணவாய் அருகில் அமைந்திருப்பதாலும் அரசியல், பொருளியல் முக்கியத்துவம் வாய்ந்ததாக விளங்கியது. அதனால் இப்பகுதி காலந்தோறும் மாற்றார் தாக்குதலுக்குள்ளாகிவந்தது. ஆற்று வளமும் தென் கொங்கிலேயே பயன்படுத்திய நிலையிலும் நீர்வளம் மிக்க பகுதியாக விளங்கியது.

தென்கொங்கில் கம்மாளர்க்கு என்று தொடங்கும் கல்வெட்டுகள் நான்கு கோவைமாவட்டத்தில் கிடைக்கின்றன. அதனால் தொடக்கத்தில் இப்பகுதியில் நாட்டுப்பிரிவுகள் (Microregion) உருவாகவில்லை என்றே தோன்றுகின்றது. கி.பி.13ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் ஏழுநாடுகள் இருந்தமைபற்றிக் குறிக்கப்பெறுகின்றது. கரை வழிநாடு, வெண்டையூர்க்கால் நாடு, கவிடிகா நாடு, வாயறைக்கா நாடு, வலுப்பூர்கா நாடு, நல்லூர்கா நாடு, பேரூர் நாடு என ஏழுநாடுகள் குறிக்கப்பெறுகின்றன. மேலும் தழிஞ்சி என்ற ஊரில் கிடைக்கும் கல்வெட்டுகள் மீமிசல் நாடு என்ற ஒரு நாட்டைக்குறிக்கின்றன. போளுவாம்பட்டி கல்வெட்டு ஒன்று மூலை நாடு என்றொரு நாட்டினைக் குறிக்கின்றது. இதனால் கோவைமாவட்டத்தில் நாட்டுப் பிரிவுகள் காலந்தோறும் பல்கிப் பெருகிய வண்ணம் இருந்தன என்பது தெரிகிறது.

## நாட்டு நிருவாகம்

வடகொங்கு நாட்டுப் பிரிவுகள் பற்றிக் கூறும் ஒரே வாசகம் கொண்ட ஐந்து கல்வெட்டுகள் மூன்றாம் வீரசோழன் (கி.பி.1170) காலத்தைச் சேர்ந்தவை. வடகொங்கில் இருபது நாடுகள் இருந்தமை

பற்றிக் கூறுகின்றன. தென் கொங்கில் ஏழு நாடுகள் இருந்தமைபற்றி கொழுமம் கல்வெட்டு ஒன்று கூறும். இந்தக்கல்வெட்டுகள் கொங்கு நாட்டில் குறுநாட்டு நிருவாகம் நாட்டுத் தலைவர்களாகிய நாட்டுச்சாமந்தர், நாட்டுக் கருமம் ஆராய்வார் ஆகியவர்களிடமிருந்தது. ஆனால் பாண்டிய போசளர் காலத்தில் (கி.பி.14 ஆம் நூற்றாண்டிலிருந்து) நாட்டார்ச்சபை நாட்டு நிருவாகத்தில் பெரும்பங்காற்றியது.

## பூலுவநாட்டார்

கோவை மாவட்டத்தில் இடைக்காலத்தில் வாழ்ந்த பூலுவர்கள் தங்களுக்கென நாட்டுச் சபையை வைத்திருந்தனர். கோவைமாவட்டத்தில் பரவியிருந்த வட பரிசாநாடு என்ற நாட்டுப் பிரிவில் இருந்த ஒவ்வொரு ஊரிலும் பூலுவர் ஊர்ச்சபை இருந்தது. இதற்கு பூலுவனூர் என்று பெயர். இந்த ஊர்களில் வாழ்ந்த பூலுவத்தலைவர்கள் பூலுவநாட்டுச் சபையில் உறுப்பினர்களாக விளங்கினர். ஓர் ஊரின் வரியினைப் பற்றிமுடிவெடுக்க வடபரிசாரநாட்டுப் பூலுவநாட்டார் பேசி முடிவெடுக்கின்றனர். இதுபோலவே வெள்ளாளர்கள் ஊர் அளவில்வெள்ளானூர் வைத்திருந்தனர். நாடு அளவில் வெள்ளநாட்டார் சபை வைத்திருந்தனர். வெள்ளாளர் வரி பற்றிய முடிவுகளை வெள்ளாநாட்டாரே பேசி முடிவெடுக்கின்றனர். பூலுவர், வெள்ளாளர் ஆகிய பிரிவினர் வரியினைப் பற்றிமுடிவெடுக்க பூலுவநாட்டாரும் வெள்ளாநாட்டாரும் கூடிப்பேசி முடிவெடுக்கின்றனர்.

பூலுவர்கள் கோவை மாவட்டத்தின் மேற்குப் பகுதியிலும், தெற்குப் பகுதியிலும் வடக்குப் பகுதியிலும் வாழ்ந்துள்ளனர் சோழர் காலத்திலும் இப்பகுதிகளில் வாழ்ந்துள்ளனர். வாயாறைக்காநாடு, காவடிக்கா நாடு, வடபரிசாரநாடு ஆகிய நாட்டுப்பிரிவுகளில் வாழ்ந்துள்ளனர். நாயக்கர்காலத்தில் புரவி பாளையத்தில் வாழ்ந்த பட்டகாரர் பூலுவர் குடியைச் சேர்ந்தவர். அவினாசி, திருமுருகன்பூண்டி, அன்னூர் ஆகிய ஊர்களில் உள்ளகோயில் கல்வெட்டுகளில் பூலுவவேட்டுவர் என்ற ஒரு மரபினர் குறிக்கப்பெறுகின்றனர்.

வெள்ளாளர்கள் சோழர் காலத்தில் அன்னூர், இடிகரை, பேரூர், கோயில் பாளையம் ஆகிய ஊர்களில் வாழ்ந்தது பற்றிக் கல்வெட்டுகள் கிடைக்கின்றன.

## சித்திரமேழி பெரியநாட்டார்

கொங்குநாட்டுக்கல்வெட்டுகளில் சித்தரமேழி பெரியநாட்டார் பற்றி மிகுதியும் பயின்று வருகின்றது. கோவை மாவட்டத்தில் அன்னூர், திருமுருகன் பூண்டி, இடிகரை, கடத்தூர் ஆகிய ஊர்களில் சித்திரமேழி பெரியநாட்டார் பற்றியும் அவர்களுடன் தொடர்புடைய பணியாளர்களைப்பற்றி கல்வெட்டுகள் பேசுவதைக் காணலாம். இடிகரை, அன்னூர் ஆகிய ஊர்களில் சித்தரமேழி பட்டன் பற்றிய கல்வெட்டு குறிப்புகள் கிடைக்கின்றன. சித்திரமேழித் தட்டான் என்ற மற்றொரு கல்வெட்டு கூறுகின்றது. கடத்தூரில் சித்திரமேழி ஈஸ்வரமுடையார் என்ற சிவன் கோயில் சுட்டப்பெறுகிறது.

சித்திரமேழி பெரியநாட்டார் பற்றிக் கோவை மாவட்டத்தில் பரவலாகக்கல்வெட்டுகள் கிடைக்கின்றன. இவற்றில் திருமுருகன் பூண்டிக்கல்வெட்டுக் குறிப்பிடத்தக்கது. இக்கல்வெட்டு பூலுவநாட்டார்க்கும் வெள்ளா நாட்டார்க்குமிடையிலான ஒப்பந்தம் பற்றியது. இக்கல்வெட்டில் பூலுவர்களுக்கு பூலுவ நாட்டாரும், வெள்ளாளர்களுக்கு சித்திர மேழிப் பெரியநாட்டாரும் கையொப்பமிட்டுள்ளனர். அதனால் சித்திரமேழிப் பெரியநாட்டார் தமிழ்நாடு முழுவதுமுள்ள வெள்ளாளர்களின் பிரதிநிதியாகச் செயல்பட்டார்கள் எனலாம். சித்திரமேழி நாட்டார் சபை பல்வேறு நிலையிலிருந்த வெள்ளாளர்களை ஒருங்கிணைக்கும் அமைப்பாகச் செயல்பட்டது என்று கருதலாம்.

கோவை மாவட்டத்தில் நிலைபெற்றிருந்த பல்வேறு சபைகள் நாட்டு நிருவாகத்தினைக் கவனித்துள்ளன. இந்தப் போக்கு கி.பி.12ஆம் நூற்றாண்டின் இறுதியில் தொடங்கி கி.பி.15ஆம் நூற்றாண்டு வரை நிலை பெற்றுள்ளது.

இருநூற்றாண்டுகள் இக்குழுக்கள் அரசியல் நிருவாகத்தினை நடத்தியுள்ளன. கோவை மாவட்டத்தில் அக்கசாலைகள், சாலிய

நகரத்தார், படைவீரர்கள், ஏற்கெனவே குறிப்பிடப்பெற்ற பூலுவ நாட்டார், வெள்ளாநாட்டார் போன்ற குழுக்கள் அவற்றில் குறிப்பிடத்தக்கவை. கல்வெட்டறிஞர் கே.வி. சுப்ரமணியஅய்யர் இந்தச் சபைகள் அரசுக்கும் மக்களுக்குமிடையில் இணைப்புப் பாலமாக அமைந்திருந்தன என்று கூறுவர்.

## சாதிநாட்டுச்சபை

கோவை மாவட்டத்தில் வாழும் குலாலர், நாவிதர் போன்ற சாதியாரிடையில் இருபத்திநான்கு நாட்டுச் சபைகள் இருந்தன. இவை திருமண உறவுக்கான கோத்திரமாகவும் செயல்பட்டு வருகின்றன. வாயறைக்கா நாட்டு ஆண்மகன் வாயறைக்கா நாட்டுப்பெண்ணை மணக்க முடியாது. கொங்கு இருபத்தி நான்கு நாட்டுப் பிரிவுகளில் ஏதோ ஒரு நாட்டுப் பிரிவைச் சேர்ந்த பெண்ணைமணந்து கொள்ளமுடியும். குலாலர்களில் சில நாட்டுச் சபைகள் ஆண்டிற்கொருமுறை கூடி அந்த ஆண்டில் உருவான தாவாக்களைத்தீர்த்து வைக்கும் நீதிமன்றங்களாக செயல்படுகின்றன.

## துணை நூல்கள்

1. க.அ. புவனேசுவரி, *அன்னூர் வரலாறு.*
2. க.அ. புவனேசுவரி, *கொங்குச்சோழர்.*
3. ஆர். பூங்குன்றன், *தொல்குடி வேளிர் அரசியல்.*
4. Y. Subbarayalu, *The political Geography of the Chola Country.*
5. V. Manickam, *Kongu Nadu.*

# பண்டைய நீர்ப்பாசனம்

'நீரின்றி அமையாதுலகு' என்று வள்ளுவர் கூறுவார். பண்டைத் தமிழர்கள் நீரின் முக்கியத்துவத்தை எந்த அளவிற்கு உணர்ந்திருந்தனர் என்பதற்கு இவ்வரி சிறந்த எடுத்துக்காட்டு. பண்டைய கொங்கு மக்கள் கால்நடைகளுக்காக கிணறுகளைத் தோண்டினர் என்பதற்குப் பதிற்றுப்பத்து சான்று கூறுகின்றது.

*'பொன்செய் கணிச்சித்திண் பிணியுடைத்துச்*
*சிரனு சில ஊறிய நீர்வாய்ப்பத்தல்*
*கயிறு குறுமுகவை மூயின மொய்க்கும்*
*ஆகெழு கொங்கர் நாடு'* (பதிற் 22)

சங்க காலத்தை அடுத்து வந்த காலங்களில் நீர்ப்பாசன முயற்சிகள் தொடர்ந்து நடந்து வந்தன என்பதற்குக் கல்வெட்டு சான்றுகள் கிடைக்கின்றன.

கி.பி.பத்தாம் நூற்றாண்டிற்குப்பின் நீர்ப்பாசன முயற்சிகள் வேளாண்வளர்ச்சியை ஒட்டி அமைந்தன. இந்த வகையில் அணைகள், கால்வாய்கள், ஏரிகள், குளங்கன் ஆகியவை உருவாக்கப் பெற்றன.

## அணைகள்

காட்டாறுபோல் பாய்ந்து செல்லும் நொய்யலாற்றின் குறுக்கே 32 அணைகள் கட்டியதாகப் பட்டயகுறிப்புகள் கிடைக்கின்றன. ஆனால் கல்வெட்டுகளில் இரண்டு அணைகளைப் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. கி.பி.12-ஆம் நூற்றாண்டில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டு ஒன்று பேரூர் அருகில் இரண்டு கல்லணைகள் இருந்ததைக் குறிப்பிடுகின்றது. கோனேரின்மை கொண்டான் என்று தொடங்கும் அக்கல்வெட்டு கொங்குச் சோழ மன்னன் வீரராசேந்திரன் (கி.பி.1207-1256) காலத்தைச் சேர்ந்ததாகக் கொள்ளலாம். அரசனிடம் பிராமணர்கள்

மாளிகை பழநத்தம் என்ற பகுதியில் 'புகலிடம் கொடுத்த சோழ சதுர்வேதி மங்கலம்' என்ற பிரமதேயத்தை உருவாக்கிக் கொள்ளவும், அக்குடியிருப்பு அருகில் நொய்யலாற்றின் குறுக்கே ஓர் அணையைக் கட்டிக்கொள்ளவும் அனுமதி கோருகின்றனர். அதற்கு அரசன் அனுமதி ஆணை வழங்கும்போது புதிதாக உருவாக்கப்பெறும் ஊர் அருகில் 'தேவிசிறை' என்ற பெயரில் அணை கட்டிக் கொள்ளலாம் என்று ஆணை வழங்கினான். ஆனால் இவ்வணைக்குக் கீழே உள்ள கோளூர் அணைக்கு நீர்விட்டு அவ்வணை நிரம்பிய பின்பே தேவிசிறையில் நீரை நிரப்பவேண்டும் என்று அவ்வாணையில் குறிப்பிட்டுள்ளான். இக்கல்வெட்டுச் செய்தி மூலம் கொங்கு நாட்டு மக்கள் ஆறுகளின் குறுக்கே அணைகளைக் கட்டி நீரைத்தேக்கும் தொழில் நுட்பத்தை அறிந்திருந்தனர் என்பது உறுதிப்படுகின்றது. மேலும் நீர்ப்பாசனத்தில் எல்லா தரப்பு மக்களுக்கும் நீர்கிடைக்க வேண்டும் என்பதைக் கொளகையாகக் கொண்டிருந்தனர் என்பதும் தெரியவருகின்றது.

## கல்வெட்டு வாசகம்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் கோனேரின்மை
2. கொண்டான் பேரூர் நாட்டு புகலிடங்குடுத்த சோ
3. ழச் சதுர்வேதி மங்கலத்துச் சபையாற்கும்
4. பேரூர் ஊரார்க்கும் நம்மோலை குடுத்தபடியா
5. வது இவர்கள் தங்களூற்கு நீர்த்தட்ட பெற வென
6. க்கு வந்தறிவித்தமையிலிவர்கள் தங்களூரெல்
7. லையில் தேவிசிறை யென்கிற அணையடைத்து வாய்க்காலும்
8. வெட்டிக் கோளூரணைக்குச் சேதம் வாராதபடி யவ்வணைக்கு
9. ப் பின்பாக நீர்விட்டுக் கொள்ளப்பெறவாராகவு மிவர்கள் தங்
10. களூரெல்லையில் மாளிகைப் பழநத்த மென்கிற நத்ததிலே
11. புகலிடங்குடுத்த சோழ நல்லூரென்று ஊரெற்றிக் கொள்வா
12. ர்களாகவும்

## நீர் நிருவாகம்

இடைக்காலக் கொங்கில் நீர்நிருவாக அதிகாரம் அரசனிடமே இருந்தது என்பதற்கு சர்க்கார் பெரியபாளையம் கல்வெட்டு சிறந்த

சான்றாக அமைகின்றது. கி.பி.பதின்மூன்றாம் நூற்றாண்டில் பொறிக்கப்பெற்ற இக்கல்வெட்டு சுந்தரபாண்டியன் காலத்தைச் சேர்ந்தது. பாண்டியர்கள் தமிழகத்திலேயே நீர்ப்பாசனத் தொழில் நுட்பத்தில் மேலோங்கி நின்றனர். இந்தத் தொழில் நுட்பம் ஈழத்திலிருந்து அவர்கள் பெற்றதாகும். ஈழத்தினர் 2500 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே நீர்ப்பாசனத்தில் பெருமை பெற்றவர்கள். பாண்டியர்களுக்கும் ஈழத்தரசர்களுக்கும் மணவினை உறவு, அரசியல் உறவு பண்டைக் காலம் முதல் தொடர்ந்து நீடித்து வந்ததால் அவர்களிடமிருந்து பாண்டியர்கள் நீர்ப்பாசனத் தொழில் நுட்பத்தை அறிந்து கொண்டார்கள். பாண்டியர்கள் இடைக்காலக் கொங்கில் ஆட்சி செய்த கொங்குச் சோழர்களுடன் மணவினை உறவு ஏற்படுத்திக் கொண்டபோது கொங்கு நாட்டில் நீர்ப்பாசனத் தொழில் நுட்பம் பயன்படுத்தப் பெற்றது. ஏற்கெனவே குறிக்கப்பெற்ற தேவிசிறை, கோளூர் அணை ஆகிய அணைகள்கூட பாண்டியர்கள் அளித்த தொழில் நுட்பத்தால் உருவானது எனலாம்.

சர்க்கார் பெரியபாளையம் கல்வெட்டு சூலூருக்கருகில் சுந்தரபாண்டியன் காலத்திலிருந்த அணை நீர் நிருவாகம் பற்றி விரிவாகப் பேசுகின்றது. பாண்டிய மன்னன் அணைநிருவாகத்தை வெள்ளலூரைச் சேர்ந்த செம்படவன் பிள்ளான் என்பவனிடம் ஒப்படைத்தது பற்றி இக்கல்வெட்டு கூறுகின்றது. அணை நீரைப் பகிர்ந்தளித்தல், அணைக்கரையைப் பாதுகாத்தல் ஆகியவை எப்படிச் செய்யவேண்டும் என்பதைப் பற்றி விரிவாக மன்னன் ஆணையிட்டுள்ளான். அணையில் தேங்கியிருக்கும் நீரின் அளவுபற்றி கோயில் தானத்தார்க்கும், ஊரார்க்கும் அப்போதைக்கப்போது அறிவித்து வரவேண்டும் என்றும் நீர்நிருவாகம் பற்றி கோயில் தானத்தாரும், ஊராரும் அளிக்கும் ஆணையைப் பெற்று அவ்வாணையின் படி நடக்க வேண்டும் என்றும் குறிப்பிட்டுள்ளான். இடைக்காலக் கொங்கில் நீர் நிருவாகம் நடத்தப்பெற்ற தன்மையை இக்கல்வெட்டு விவரிக்கின்றது.

## ஏரிகள், குளங்கள்

கொங்கு நாட்டில் ஏரிகள், குளங்கள் உருவாக்கப்பெற்று குடியிருப்புகள் ஏற்படுத்தபெற்ற நிலையில் மக்கள் ஊரைவிட்டுப் போய்விட்டனர். கொங்கு நாட்டின் மையப்பகுதியில் (இன்றைய பல்லடம் வட்டம்) உருவாக்கப்பெற்ற பல ஊர்கள் மக்களால் கைவிடப்பெற்றுப் பாழ்பட்ட ஊர்கள் ஆகிவிட்டன. அவ்வாறு கைவிடப்பெற்ற ஊர்களைக் கல்வெட்டுகள் 'அனாதிபாழ்' என்று குறிப்பிடுகின்றன. இத்தகைய ஊர்களை நீர்வளம் பெற்ற ஊர்களாக மாற்றிக் கோயிலுக்குத் தேவதானமாகப் பாண்டியமன்னர்கள் அளித்துள்ளனர். இச்செய்தி பேரூர், சர்க்கார் பெரியபாளையம் போளுவாம்பட்டி ஆகிய ஊர்களில் கிடைக்கும் கல்வெட்டுகளால் புலப்படுகின்றது.

## ஆற்றுக்கால்வாய்கள்

கொங்குச் சோழர்கள், வீரகேரளர்கள் ஆகிய அரச மரபினர் அமராவதி, நொய்யல், ஆழியாறு ஆகிய ஆறுகளிலிருந்து கால்வாய் வெட்டி நீர்ப்பாசன வாய்ப்புகளை உருவாக்கினர். அமராவதி ஆற்றிலிருந்து வாய்க்கால்கள் பிரிந்து சென்றதைப்பற்றி கொழுமம், குமரலிங்கம், சோழமாதேவி, கடத்தூர் ஆகிய ஊர்க்கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. அனைத்து வாய்க்கால்களும் அரசன், அரசி பெயர்களில் வருவதால் இந்த வாய்க்கால்களை அரசர்களே வெட்டியிருக்க வேண்டும் எனலாம். கால்வாய் உருவாக்கும் பணியில் வீரகேரளர் பங்கு குறிப்பிடத்தக்கதாகும். ஆழியாற்றிலிருந்து சில கால்வாய்கள் பிரிந்து சென்றன என்பதற்குப் பல கல்வெட்டுக் குறிப்புகள் ஆனைமலையில் கிடைக்கின்றன. நொய்யலாற்றிலிருந்து பல கால்வாய்கள் சென்றன என்பதற்கும் பல கல்வெட்டுச் சான்றுகள் கிடைக்கின்றன. பேரூர், கோயம்புத்தூர், போளுவாம்பட்டி ஆகிய ஊர்களிலிருந்து கிடைக்கின்ற கல்வெட்டுகள் நொய்யலாற்றிலிருந்து பிரிந்து சென்ற கால்வாய்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. கோவை மாவட்டம் மேற்குத் தொடர்ச்சி மலையை ஒட்டி அமைந்துள்ளதால்

மழைவளம் மிக்க பகுதியாக விளங்கியது. மழைவளத்தால் கிடைத்த நீர்வளத்தினை இடைக்காலக்கொங்கு அரசர்கள் வேளாண்மைக்குப் பயன்படுத்த வகைசெய்தனர். இடைக்கால ஆற்றுக் கால்வாய்கள் அனைத்தும் பிரமதேயங்கள் வளம் பெற உதவின.

கி.பி.பதினான்காம் நூற்றாண்டிற்குப் பின் மைசூர் உடையார்கள் ஏரிகளையும், குளங்களையும் வெட்டினார்கள். அவிநாசி, பழங்கரை, பேரூர், சேவூர், அன்னூர், கோயம்புத்தூர், சர்க்கார் சாமக்குளம், திருமுருகன் பூண்டி, பெருமாநல்லூர் ஆகிய ஊர்களில் மைசூர் உடையார் மரபினர் ஏரிகளையும் குளங்களையும் வெட்டி நீர்வளத்தினைப் பெருக்கினர். இவர்கள் காலத்து ஏரி, குளங்கள் ஆகியவை அரசர்கள் பெயராலேயே விளங்கின.

## துணை நூல்கள்


1. மா. கணேசன், *கொங்குநாட்டுக்கல்வெட்டுகள்* (கோவை மாவட்டம்)
2. V. Manickam, *Kongunadu*
3. C.N. Subbramaniyan, *Aspects of agricultural developmet in Cholamandalam,* (c.850?1850) M. Phil Dissertation Jawaharlal Nehru University New Delhi 1985
4. M. Ganesan, *Agricultural development in medieval Kongu.* (ICHR Protect)

# தொழில் குழுக்கள்

ஆனைமலையில் அத்திகோசத்தார் சங்கக் கல்வெட்டு ஒன்று கிடைத்துள்ளது. வட்டெழுத்துக்களில் பொறிக்கப்பெற்ற இக்கல்வெட்டு முழுமையும் அழிந்துவிட்டது. இதுபோலவே ஈரோடு மாவட்டம் சத்திய மங்கலம் அருகில் உள்ள நல்லூர் என்ற ஊரில் கிடைத்துள்ள வட்டெழுத்துக் கல்வெட்டிலும் அச்சங்கத்தின் சின்னங்களும் வரையப்பெற்றுள்ளன. இக்கல்வெட்டு இரவி கோதையின் காலத்தைச் சேர்ந்தது. ஆகையால் ஆனை மலை அத்திகோசக் கல்வெட்டும் இரவிகோதை காலத்தைச் சேர்ந்தது என்று கொள்வதில் தவறில்லை.

பண்டைய இந்தியாவில் பல்வேறு தொழிற்குழுக்கள் செயலாற்றிச் சிறப்படைந்தன.இந்தியாவில் பண்டைய அரசியல் கோட்பாடுகள் பற்றி அறிய உதவும் அர்த்த சார்ஸ்திரம் தொழிற்குழுக்களைப் பற்றிப் பேசுகின்றது. இத்தகைய குழுக்கள் பொதுவாழ்வில் மிகுந்த செல்வாக்குடன் விளங்கின. தென் இந்தியாவில் தோன்றி நிலைபெற்ற குழுக்கள் பல. ஈரோடு மாவட்டம் கொடுமணல் தமிழ்ப்பிராமிக் கல்வெட்டு, 'நிகம' என்ற வணிகக்குழுவைச் சுட்டுகிறது. இதுவே தமிழகத்தில் தொழிற்குழுக்களில் காலத்தால் முற்பட்டது. மேலும் சங்க இலக்கியம் வணிகச்சாத்து பற்றிப் பேசுவதை எடுத்துக்காட்டலாம். சாத்து என்ற சொல் பெருவழியில் செல்கின்ற வணிகக் கூட்டத்தினரைக் குறிப்பதாகும். தமிழகத்திலும், இத்தகைய தொழிற்குழுக்கள் பல்கிப் பெருகின. சித்திரமேழி, நானாதேசி, மணிக்கிராமம், அஞ்சு வண்ணம் போன்ற குழுக்கள் குறிப்பிடத் தக்கவை வணிகர்கள் வைத்திருந்த படைகள் கூடத் தங்களுக்கென குழு வைத்திருந்தனர். வணிகர்களும் படையினரும் மத்தியகாலத்து இறுதியில் அரசியல் வாழ்வில் பெற்றிருந்த செல்வாக்கு குறிப்பிடத்தக்கது. இவ்வாறு நிலைபெற்ற பல்வேறு குழுக்களில் அத்திகோசமும் ஒன்று. இது பற்றித்

தமிழ்நாட்டுக் கல்வெட்டுக்களும் இலக்கியங்களும் பேசுவதைக் காணலாம்.

## தமிழ் இலக்கியத்தில் அத்திகோசத்தார்

அத்திகோசம் பற்றிக் கொங்குவேளிரின் பெருங்கதையில்தான் முதன்முதலில் குறிக்கப்படுகின்றது. உதயணன் உருமண்ணனாவாவுக்கு விருத்தியாக நாடும், சேனபாதி பட்டமும் அளித்தது பற்றிக் கூறும்போது மேலே கூறப்பட்ட அத்திகோசத்தார் உடன் இருந்தார்கள். நேரம் அறிவிக்கும் முகூர்த்தவிதானிகள், ஐம்பெருங்குழு, அத்திகோசம், மனைபெரும்சனம், தேவிமார்கள், தானை ஆகியோர் சேனாபதி பட்டம் அளிக்கும் விழாவில் பங்கேற்றனர். பெருங்கதை தவிர பின்னாளில் வந்த உரையாசிரியர்களும் அத்திகோசத்தாரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளனர். தொல்காப்பியம் சொல்லதிகாரத்திற்கு உரைகண்ட சேனாவரையர் குழுப் பெயர்க்குச் சான்று காட்டும்போது ''அத்திகோசமும் பட்டிபுத்திரரும் போல வருவன'' என்று கூறுவார். நன்னூல் 275 ஆம் சூத்திர உரையிலும் அத்திகோசத்தார் பற்றிக் கூறுவதைக் காணலாம்

## பூலாங்குறிச்சிக் கல்வெட்டு

தமிழக அரசு தொல்லியல் துறையால் கண்டுபிடிக்கப் பட்ட பூலாங்குறிச்சிக் கல்வெட்டு தமிழக வரலாற்றில் சிறப்பு வாய்ந்தது என்பதில் இரண்டுவித கருத்துக்கள் இருக்க முடியாது இதன் காலம் கி.பி.மூன்றாம் நூற்றாண்டு என்றும், கி.பி.ஐந்தாம் நூற்றாண்டு என்றும் இருவேறு கருத்துகள் உள்ளன. எது எப்படி இருப்பினும் பூலாங்குறிச்சியில் கல்வெட்டு பண்டைய நாளைய தமிழகத்தில நிருவாகம், அரசியல் பண்பாடு போன்றவற்றை அறிந்து கொள்வதற்குக் கிடைத்த சிறந்த சான்று. அந்தக் கல்வெட்டில் அத்திகோசத்தார் பற்றிக் குறிப்பிடப்படுவது விதந்து கூறத்தக்கது.

*''பச்செறிச்சின் மலைமேற் செய்வித்த*
*தேவகுலமும் முத்தூற்றுக் கூற்றத்து வீரைமரு*
*செய்வித்த வேக. . .யும் மதிரை உலாவியத்*

*தான் குளத்தின் வட பக்கத்துச் செய்வித்த தாபத*
*பள்ளியுள் வசிதேவனாரு கோட்டமும்*
*(அ)த்திகோயத்தாரு முள்மனையாருந்*
*நாற்பாற்றிணைகளுநந் தமக்கு காவலாக''*

என்று கல்வெட்டில் கூறப்படுவதைக் காணலாம். கல்வெட்டில் பயின்று வரும் வாசகத்தை ஊன்றிப் பார்க்கும்போது அதில் கூறப்படுகின்றவர்கள் என்பேராயம் போன்ற அரசன் உடன் கூட்டத்தவர்களோ என்று கருத வேண்டியுள்ளது. பூலாங்குறிச்சிக் கல்வெட்டில் கூறப்படும் அத்திகோயத்தார் பின்னாளில் அத்திகோசத்தார் என்று திரிந்து விட்டது. தமிழில் யகரம் சகரமாகத் திரிவது மொழியியல் கண்ட உண்மை.

## பெருவழியில் அத்திகோசத்தார்

அத்திகோசத்தார் பற்றிய கல்வெட்டுகளும், செப்பேடுகளும் பெருவழி ஓரத்திலேயே கிடைக்கின்றன. இது குறிப்பிடத்தக்கது. பூலாங்குறிச்சிக் கல்வெட்டு பண்டை நாளைய பெருவழியில் இருந்திருக்க வேண்டும். பூலாங்குறிச்சிக் கல்வெட்டருகில் திசையாயிரத்தைந்நூற்றவர் செய்து வைத்த ஐயனார் பற்றிய கல்வெட்டு ஒன்றும் கிடைத்துள்ளது. ஐயனாரும், கல்வெட்டு அருகிலேயே உள்ளது. கல்வெட்டு முதலாம் பராந்தக சோழன் காலத்தைச் சேர்ந்தது. சோழர் காலத்தில் பூலாங்குறிச்சிக் கல்வெட்டு இருக்குமிடத்தில் ஒரு வணிக நகரம் இருந்திருக்கவேண்டும். அந்த நகரத்தில் தங்கிய திசை ஆயிரத்தைந்நூற்றுவரே ஐயனாரைச் செய்து வைத்தனர் என்று கருத இடமுண்டு. அல்லது பெருவழியில் செல்லும் வணிகர்கள் வழிபடுவதற்கெனச் செய்து வைத்து ஐயனாரக வுமிருக்கலாம். சமீபத்தில் ஈரோடு மாவட்டம் சத்தியமங்கலம் வட்டம் நல்லூரில் இருந்து கண்டுபிடிக்கப்பட்ட அத்திகோசம் பற்றிய கல்வெட்டு மைசூர் - கோவை பெருவழியில் உள்ளதும் குறிப்பிடத்தக்கது.

மேலே கூறியவற்றால் அத்திகோசத்தார்க்கும் பெருவழிக்கும் இடையில் உள்ள தொடர்பு தெளிவாகும். பெருவழிகளில் நிறுத்தி வைக்கப்பட்ட யானை, காலாட்படைகளில் தலைவர்களின் குழுக்களே

அத்திகோசம். வீரகோசம் எனலாம். பெருவழிகளில் படைவீரர்கள் தங்கியிருந்த வணிகர்களிடம் சுங்கம் வாங்கவும் வணிகர்களைக் கள்வர்களிடம் இருந்து காக்கவும் ஆகும். அதனால் அத்திகோசத்திற்கும் வணிகர்களும் இடையிலான தொடர்பு புலப்படும். அதனால்தான் பெருவழி ஓரத்தில் உள்ள ஊர்களில் செய்யப்படுகின்ற தானத்தினைச் செயல்படுத்தவும் பாதுகாக்கவும் இவர்கள் வேண்டப்படுகிறார்கள்.

தென்னிந்திய வணிகர்கள் தங்களுக்கெனப் படை வைத்திருக்கும் உரிமை பெற்றிருந்தனர். அகநானூறு 89ஆம் பாடல் வணிகர்களுடன் சென்ற வீரர்களைப் பற்றிக் கூறப்படுகின்றது. தொல்காப்பியர், வணிகர்கள் படை வைத்துக் கொள்ள உரிமை பெற்றவர்கள் என்று கூறுவார். ஆறலை கள்வர்கள் தாக்குதலிலிருந்து பாதுகாத்துக் கொள்ள வணிகர்கள் படைவைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டனர். இதைத் தமிழகத்திற்கே உரிய தனிப்போக்காகக் கொள்ளலாம். மத்திய காலத் தமிழகத்திலும் வணிகர்கள் வைத்திருந்த படை பற்றி கல்வெட்டுக்கள் கூறும். முனைவீரர், பெருநிரவியார், கொடி வீரர், செட்டிவீரர், எறிவீரர் போன்றவர்கள் வணிகர்கள் வைத்திருந்த படைப்பிரிவினர் ஆகும்.

## பூலாங்குறிச்சியில் கல்வெட்டும் பெருங்கதையும்

பூலாங்குறிச்சிக் கல்வெட்டில் அரசனுக்கும் காவலாக அத்திகோசத்தார் உள்மனையார், நாற்பாற்றிணைகள் ஆகியோர் குறிப்பிடப்படுகின்றனர். இதே போன்று பெருங்கதையில் அரசனுடன் இருப்பவர்களாகக் கடிகைக்கணம் ஐம்பெருங்குழு அத்திகோசம், மனைப்பெருஞ்சனம், தேவிமார்கள், தானை போன்றவைகள் குறிக்கப்படுகின்றன. அரசர்களுடன் முக்கிய விழாக்களில் யானைப்படைத்தலைவர் குழு கலந்து கொண்டது என்பது பெருங்கதையினால் அறியமுடிகிறது. அந்த வகையில் பூலாங்குறிச்சிக் கல்வெட்டு கூட அரசன் முக்கிய விழா அல்லது நிகழ்ச்சியில் வெளியிட்ட ஆணையாக இருக்கலாம். 'உள்மனையார்' என்பது பெருங்கதையில் வரும் மனைப்பெருஞ்சனம் என்பதுடன் ஒப்பிடத்தக்கது. உ.வே.சா. அவர்கள் மனைப்பெருஞ்சனம் என்பது

பற்றி அடிக்குறிப்பில் எதுவும் குறிப்பிடவில்லை. 'மன்பெருஞ்சிறப்பின்' என்ற அடைமொழி அவர்கள் உயர்ந்த நிலையைக் குறிக்கிறது. திணை என்பது பழகுங்குடி, சாதி, குலம், குடும்பம் ஆகியவற்றைக் குறிக்கின்றது. நாற்பாற்றிணைகள் அரசனுடைய குலத்திற்கு வழிவழியாகத் தொண்டராகப் பணிபுரியும் வீர குடும்பத்தினர் என்று கொள்ளலாம்.

பூலாங்குறிச்சிக் கல்வெட்டில் குறிக்கப்படும் மூன்று பிரிவினரும் படைகளுக்குத் தொடர்புடையவராகவே தெரிகின்றனர். உள்மனையார் ஒழிந்து மற்ற இருதிறத்தார் களுடைய படைத் தொடர்பு தெளிவாகவே புலப்படுகின்றது. மேலும் பூலாங்குறிச்சிக் கல்வெட்டில் கடலகப் பெரும்படைத் தலைவர் குறிக்கப்படுவதும் இங்கு எடுத்துக்காட்டத்தக்கது. பூலாங்குறிச்சிக்கல்வெட்டு காலந்தொட்டு அத்திகோசத்தார் அரசியலில் முக்கிய பங்காற்றியுள்ளனர். அரச காரியங்கள் அனைத்திலும் அவர்கள் பங்கு இன்றியமையாததாய் இருந்தது.

அத்திகோசம் என்ற குழு அமைப்பு முதலில் தோன்றிய இடம் பற்றித் தெரியவில்லை. இந்தியா முழுவதிலும் கிடைக்கின்ற கல்வெட்டுக்கள் சிலவற்றில் மட்டும் அவர்களைப் பற்றிக் குறிக்கப்படுகிறது. அதுவும் தக்காணத்திலும் தென்னிந்தியாவிலும்தான். வட இந்தியப் பகுதிக் கல்வெட்டுக்களில் அவர்களைப் பற்றிய செய்திகள் அருகியே காணப்படுகின்றன. அதனால் யானைப் படைத்தலைவர்கள் குழு தென்னிந்தியாவிலும் தக்காணத்திலும் மட்டுமே இருந்திருத்தல் வேண்டும். அதுவும் தமிழகத்திலிருந்துதான் அவர்கள் தக்காணம் சென்றிருக்க வேண்டுமென்று கருதவேண்டியுள்ளது. விஷ்ணுகுண்டினர் செப்பேடுகளில் கி.பி.7ஆம் நூற்றாண்டிலிருந்துதான் அத்திகோசம் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. ஆனால் தமிழகத்தில் அத்திகோசம் கி.பி.5ஆம் நூற்றாண்டிற்கு முன்பிருந்து குறிக்கப் படுகின்றது. அதுவும் தமிழகத்தின் தென்பகுதியில் கிடைப்பது விதந்துகூறத்தக்கது. அரசியல் நிர்வாகத்தில் அவர்களுக்கு முக்கியத்துவம் அளித்ததும், தென்னிந்தியாவில்தான். அத்திகோசத்தார் என்ற குழு அமைப்பும் கூட தென்னிந்தியாவில் தான் முதலில் தோன்றியிருக்கவேண்டும்.

ஏனெனில் இதுகாறும் கிடைக்கும் கல்வெட்டுச் சான்றுகளின் காலத்தால் முற்பட்டது பூலாங்குறிச்சிக் கல்வெட்டுதான்.

அத்திகோசம், வீரகோசம் பற்றி ஆய்வு செய்து முதன்முதலில் தெளிவாக முடிவு கூறிய திரு. கே.எஸ். வைத்தியநாதன் அவர்கள் கொண்டுள்ள முடிவுகள் ஏற்றுக் கொள்ளக்கூடியவை. விஷ்ணு குண்டினர்கள் வரலாறு என்ற கட்டுரையில் இது பற்றிக் குறிப்பிட்டுள்ளார். அவர் கூறுவதாவது.

''.....அவர்கள் (அஸ்திகோசம், வீரகோசம்) யானை, காலாட்படையின் தலைவர்கள் என்று சொல்லலாம். அவர்களிடம் அரசனால், தானங்களைச் செயற்படுத்தும் அல்லது பாதுகாக்கும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டிருந்தன. சாசனங்களில் பயின்று வரும் அஸ்தியத்க்ஷன் என்ற சொல் யானைப்படையைக் கண்காணிப்பவர்களைக் குறித்து வந்தது என்பது மனங்கொள்ளத்துக்கது. அஸ்திகோசம் அஸ்தியத்க்ஷம் என்ற சொற்கள் ஒரு பொருள் சொற்கள் என்று கொள்வதில் தவறில்லை. மேலே காட்டப்பட்ட கல்வெட்டு ஆதாரங்களைக் கொண்டு அவர்கள் படை அதிகாரிகள் என்றோ அல்லது யானைப்படை அதிகாரிகள் என்றோ கொள்ளலாம். நாம் காட்டும் சாசனங்களில் அவர்கள் மிகவும் பொறுப்பு வாய்ந்த பணியை செய்ததாகவே கூறப்படுகிறது அரசர்கள் அளித்த தானத்தைப் பாதுகாக்கும் பொறுப்பே அது. . . ''

இதுகாறும் கூறியவற்றால் அத்திகோசத்தார் என்பார் யானைப்படைத் தலைவர்கள் என்பது விளங்கும். அவர்கள் பெரும்பாலும் வியாபாரிகள் வைத்திருந்த படைப்பிரிவினர். அதனால் அவர்கள் வாழ்ந்த பெருவழி ஊர்களில் தானம் அளிக்கும்போது அவர்களைப் பாதுகாவலர்களாக இருக்க வேண்டுகிறார்கள். திருவாளர்கள் கே.எஸ். வைத்தியநாதன், கிருஷ்ணசாஸ்திரி, பிலிட் போன்றவர்கள் அத்திகோசத்தாரைப் பற்றிக் கொண்ட முடிவுகள் சரியானவையே என்பது பின்னாள் கிடைக்கின்ற கல்வெட்டுச் சான்றுகளால் விளங்குகிறது. மேலும் அத்திகோசத்தார் தென்னிந்தியாவிலும் தக்காணத்திலும் செல்வாக்குப் பெற்றிருந்த காலம் ஒன்று இருந்தது. அது வணிகர்கள் சிறப்படைந்த காவிய காலமாகும்.

கி.பி.10ஆம் நூற்றாண்டிற்குப்பின் திசையாயிரத்தைந்நூற்றுவர், நானாதேசி நாட்டுச் செட்டிகள், வளஞ்சியர் போன்ற பிரிவினர்களும் இப்பகுதியில் வாணிகத்தில் ஈடுபட்டனர் என்பது கல்வெட்டுகளால் உறுதிப்படுகின்றது. கம்மாளர், தச்சர், பொற்கொல்லர், கல்தச்சர் போன்ற கைவினைத் தொழிலாளர்களும் கல்வெட்டுகளில் குறிக்கப் பெறுகின்றனர்.

## துணை நூல்கள்


1. அ.இராசேந்திரன், (ப.ஆ.) *தொல்லியல் கருத்தரங்கு* (தொகுதி 2)
2. மா. கணேசன், இரா. ஜெகதீசன் *கொங்குநாட்டுட்க கல்வெட்டுகள்* (கோவை மாவட்டம்)
2. S. Sankaranarayanan, *The Vishnukundis and their times.*

# மன்றம் - மன்றாட்டு - மன்றாடி

கோவை மாவட்டத்துக் கல்வெட்டுகளில் மன்றம், மன்றாட்டு, மன்றாடி ஆகிய சொற்கள் பயின்று வரக்காணலாம். மன்றம் அன்னூர், சேவூர் ஆகிய ஊர்க்கல்வெட்டுகளில் குறிக்கப்பெறுகின்றது. அன்னூர் கல்வெட்டுகளில் மன்னியூர் மன்றம் என்றும், சேவூர்க்கல்வெட்டுகளில் இவ்வூர் மன்றம் என்றும் குறிக்கப்பெறுகின்றது. அன்னூர் கல்வெட்டில் மன்றம் வரி செலுத்துமிடமாகவும், சேவூர்க் கல்வெட்டுகளில் நிலம் விற்கும் இடமாகவும் குறிக்கப்பெறுகின்றது.

சங்க இலக்கியத்தில் மன்றம், மன்று ஆகிய சொற்கள் பலகாலும் பயின்று வருகின்றன. அக்காலத்தில் மன்றம், மன்று ஆகிய சொற்கள் ஊர்ப்பொதுவிடத்தைக் குறிக்கும். மன்றம் ஊரின் அனைத்துப் பொதுக்காரியங்கள் நடக்குமிடமாகவும் போர்க்காலங்களில் முதல்தாக்குதலுக்குரிய இடமாகவும் விளங்கியது. பாணர், புலவர் ஆகியோர் வந்து தங்குமிடமாகவும் விளங்கியது. மன்றத்தில் பொதியில் இருந்தது. அங்கு கந்தில் (தூண்) உறையும் கடவுளை வழிப்பட்டனர்.

கவர்ந்து வந்தநிரைகளை மன்றில் கொண்டு வந்து நிறுத்துவர். ‘கன்று நிரையும் மன்று என்கோ’ என்று ஒரு புறப்பாடல் குறிப்பிடும். மேலும் பல சங்கப் பாடல்கள் மன்றத்தில் நிறைந்திருந்த மாட்டு மந்தைகளைப் பற்றிக் குறிப்பிடும். மன்று என்ற சொல் பல்லவ மன்னன் ஸ்கந்த சிஷ்யனின் இராயக்கோட்டை செப்பேட்டில் குறிக்கப்பெறுகின்றது. மேலும் நன்னிலம் கல்வெட்டுகளிலும் இச்சொல் பயின்று வரக் காணலாம். நன்னிலம் கல்வெட்டில் மன்று என்பது நிலவெல்லையாகக் குறிக்கப்பெறுகின்றது. தருமபுரிமாவட்டத்தில் மன்ற நாடு (மன்னநாடு) என்றவொரு நாடு குறிக்கப்பெறுகின்றது. கேரளத்தில் ஊர்ப்பெயர்கள் மன்றம் (மன்னம்) என்ற விகுதியுடன் பயின்று வரக்

காணலாம். கோயில்மன்னம், குழல்மன்னம் ஆகிய பெயர்கள் இதற்குச் சிறந்த சான்றுகள். மன்றம் தமிழக வரலாற்றில் காலந்தோறும் செயல்பட்டதன்மை இதனால் புலப்படாமல் போகாது.

கோவைமாவட்ட கல்வெட்டுகளில்மன்றாட்டு, மன்றாடி ஆகிய சொற்கள் மிகுதியும் பயின்று வரக்காணலாம். கோயில்களுக்கு ஊர்களைத் தேவதானமாக அளிக்கும்போது இச் சொற்கள் பயின்றுவரக்காணலாம். தேவதானமாகக் கொடுக்கப்பெற்ற ஊர்கள் நீர்வளமற்ற பகுதிகளாகவும் நீர்வளமிக்க பகுதிகளாகவும் இருந்துள்ளன. வறண்ட பகுதிகளான பல்லடம், அவினாசி, கோவை (வடக்கு) ஆகிய வட்டங்களில் கிடைக்கும் கல்வெட்டுகளில் மன்றாட்டு மிகுதியும் பயின்று வந்துள்ளது. ஆற்றங்கரையில் நீர்வளத்துடன கூடிய ஊர்களிலும் மன்றாட்டுகள் இருந்துள்ளன. இன்றைய கோவை மாவட்டத்தில் அடங்கியிருந்த தென் கொங்கில் மன்றாட்டு பற்றிய கல்வெட்டுகள் மிகதியும் கிடைக்கின்றன. வடகொங்கு கல்வெட்டுகள் மூன்று மன்றாட்டு பற்றிக் கூறுகின்றன. இருப்பினும் இவற்றில் இரண்டு கல்வெட்டுகள் தென் கொங்கிலிருந்த ஊர்கள் பற்றியவை. ஒரு கல்வெட்டு கருவூர் அருகில் வெஞ்சமாங்கூடலில் கிடைக்கின்றது. இந்தச் சான்றுகள் மன்றாட்டிற்கும் தென்கொங்கிற்கும் (கோவை மாவட்டம்) இடையில் நிலை பெற்றிருந்த நெருங்கிய தொடர்பினை அறிய உதவும்.

பேரூர், முருகன்பூண்டி, அன்னூர், போளுவாம்பட்டி, கொழுமம், குமரலிங்கம், சோழமாதேவி கடத்தூர் ஆகிய ஊர்களில் மன்றாட்டுகள் பற்றிய கல்வெட்டுகள் மிகுதியும் கிடைக்கின்றன. இவற்றில் பல ஊர்கள் ஆற்றங்கரைகளில் அமைந்துள்ளன. பேரூரில் நான்கு கல்வெட்டுகள் மன்றாட்டு பற்றியும், மன்றாடிபற்றியும் குறிப்பிடுகின்றன. கொழுமத்தில் இரண்டு கல்வெட்டுகள் மன்றாட்டு, மன்றாடி ஆகிய சொற்கள் பற்றிப்பேசுகின்றன. சோழமாதேவியில் ஒரு கல்வெட்டும், கொழுமத்தில் ஒரு கல்வெட்டும், கடத்தூரில் ஒரு கல்வெட்டும் மன்றாட்டு, மன்றாடி ஆகியவைபற்றிச் சுட்டுகின்றன. திங்களூர் கல்வெட்டு மன்றாடி பற்றிக் குறிப்பிடுகின்றது.

மன்றாட்டுகள் தேவதானமாக அளிக்கபெற்ற ஊர்களில் இருந்துள்ளன. அரசன் தேவதானம் அளிக்கப்பெற்ற ஊர்களைக் குறிப்பிடும்போது அவ்வூர்களை ஐந்து மன்றாட்டு, ஆறு மன்றாட்டு, ஏழு மன்றாட்டு, எட்டுமன்றாட்டு, ஒன்பது மன்றாட்டு, பத்து மன்றாட்டு எனப் பல மன்றாட்டுகளாகப் பிரிக்கப் பெற்றிருந்த தன்மையைச் சுட்டுகின்றன.

மன்றாட்டு கருவூலத்தில் காசு கட்டிய பின் அளிக்கப் பெற்றிருக்க வேண்டும். சோழர்காலக் கொங்கில், சமூகம் பல்வேறு மாற்றங்களைக் கண்டது. நாடோடி வாழ்க்கையிலிருந்து நிலையான வாழ்க்கைக்கு மாறி வந்தது. அதனால் சமூகத்தில் பல்வேறு பிரிவினர் பொருள் வளத்திலும், அந்தஸ்து நிலையிலும் வளர்ந்தனர். ஒவ்வொரு சாதியிலுமிருந்த உயர்ந்தோர் (Elite) அரசனிடமிருந்து பல்வேறு உரிமைகளையும், தொழில் செய்யும் உரிமைகளையும் பெற்றனர் என்பதற்குப் பல கல்வெட்டுச் சான்றுகள் கிடைத்துள்ளன. அவினாசிக் கல்வெட்டு ஒன்று 'வடபரிசாரநாட்டுப் பார்ப்பார் சான்றார் நம் சரக்கிற்கு பொன் வைத்தமையில் கொடுத்த வரிசையாவது' என்று தொடங்கும். மேலும் சர்க்கார் பெரியபாளையம் கல்வெட்டு ஒன்று மன்னியூர் சிவப்பிராமணன் ஒருவன் முப்பது பொன் தந்து எனக்கு காணிதர வேணும் என்று கேட்டான் என்று வீரராசேந்திரன் கல்வெட்டு கூறும். இந்த அடிப்படையில் வைத்துப் பார்க்கும்போது மன்றாட்டு உரிமையும் பணம் கொடுத்து வாங்கிய உரிமையாகவே இருந்திருக்கவேண்டும் எனலாம்.

மன்றாட்டினை அளிக்கும் அதிகாரம் அரசன் வசமே இருந்துள்ளது. அரசனுடைய அதிகாரிகளில் சிலர் துரோகியாய் ஓடிப்போனமையில் அவர்கள் மன்றாட்டும் திரும்பப் பெற்றுக் கொள்ளப்பெற்றது. விக்ரமசோழன் கல்வெட்டு ஒன்றில் 'வீர சிங்கதேவன் நமக்கு துரோகியாய் போனமையில் அவனது மன்றாட்டு நம்முதானமையில்' என்ற வாசகம் குறிப்பிடத்தக்கது. இது போன்ற கல்வெட்டுகள் கோவை மாவட்டத்தில் கிடைக்கின்றன. மேலும் ஓர் ஊரைத் தேவதானமாக அளிக்கும்போதும் மன்றாட்டுகளைப்

பிரித்தளிக்கும் அதிகாரத்தினை அரசனே வைத்திருந்தான் என்பதற்குப் பல கல்வெட்டுச் சான்றுகள் கிடைத்துள்ளன. அனாதிபாழாய்க் கிடந்த பல ஊர்கள் தேவதானமாக அளிக்கப்பெற்றபோது மன்றாட்டுகளைப் பிரித்தளித்த அதிகாரம் அரசனிடமே இருந்தது என்பதற்குப் பல கல்வெட்டுச்சான்றுகள் கிடைத்துள்ளன. செலக்கெறிச்சில், பலகைப்புழை, குமிலை, சூரலூர் (இன்றைய சூலூர்) ஆகிய ஊர்கள் அனாதி பாழாய்க் கிடந்தன என்பதை சர்க்கார் பெரியபாளையம், பேரூர் ஆகிய ஊர்க்கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இவை அனைத்தும் இன்றைய பல்லடம் வட்டத்தில் உள்ளன.

மன்றாட்டினைப் பெற்றவர்கள் பல்வேறு சாதியினைச் சேர்ந்தவர்கள். வெள்ளாளர், பிராமணர், ஊராளி, வியாபாரி, படைத்தலைவர், சாமந்தர் எனப் பலதரப்பட்ட மக்கள் மன்றாட்டினை வாங்கியுள்ளனர், ஒரு மன்றாட்டினைப் பலர் வாங்கியுள்ளனர். ஒன்றுக்கும் மேற்பட்ட மன்றாட்டுகளை ஒருவரே வாங்கியுள்ளார். ஒரு மன்றாட்டினை ஒருவர் வாங்கியுள்ளார். கோவை மாவட்டத்துப் பூர்வ குடிகளான பூலுவர், வேட்டுவர், ஆரியர், குன்னாடியர் ஆகியவர்கள் மன்றாட்டினை விலைக்கு வாங்கியதற்கான சான்று கிடைக்கவில்லை. பூலூவர்கள் ஊராளிகளாகவும் ஊர்க்காமிண்டர் களாகவும் குறிக்கப் பெறுகின்றனர். எந்தக்கல்வெட்டிலும் மன்றாடி என்று குறிக்கப் பெறவில்லை. அதனால் இவர்கள் மன்றாட்டு பெறுவதிலிருந்து விலக்கி வைக்கப்பெற்றார்களோ என்று கருத வேண்டியுள்ளது. அல்லது மன்றாட்டினை விலை கொடுத்து வாங்கும் வசதியற்றவர்களாக இருந்திருக்க வேண்டும். மன்றாட்டுகளைப் பெற்றோர் மன்றாடி எனப்பெற்றனர்.

அன்னூர்க் கல்வெட்டுகள் சில, மன்றாட்டுளைப்பற்றிக் குறிப்பிடுகின்றன. அவற்றில் ஒன்று வெள்ளைப்பாடி என்ற ஊரிலிருந்த மன்றாட்டுப் பங்குகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. வெள்ளைப்பாடி மன்றாட்டினைப்பெற்றவர்கள் கோயிலுக்குச் செலுத்தவேண்டிய வரியினை வாங்கிக் கோயிலில் செலுத்த வேண்டும் என்று கூறுகின்றது. அதனால் மன்றாட்டு என்பது கோயில் வருவாயுடன் தொடர்புடைய சொல்லாக அமைந்துள்ளது எனலாம். மேலும் பேரூரில் கோயில்

பண்டாரம் அழிவுபட்டபோது அதுபற்றி அரசனுக்கு அறிவிக்க சென்றவர்களில் மன்றாடிகளும் இருந்தனர் என்று வீரராசேந்திரன் கல்வெட்டு கூறும். கோயிலுக்குரிய தேவதான ஊர்களில் மன்றாடி முக்கிய பொறுப்பிலிருந்தான் என்பது இக்கல்வெட்டால் விளங்கும். தாவளத்திலும் மன்றாட்டு இருந்தமை பற்றி மற்றொரு பேரூர்க் கல்வெட்டு கூறும். மன்றாட்டுக்கும். கோயிலுக்குமிடையில் உள்ள தொடர்பு பற்றி கோவை மாவட்டத்துக் கல்வெட்டுகள் விரிவாகப் பேசியுள்ளன. மன்றாட்டு என்பதன் பொருளை விளங்கிக் கொள்ள திருமுருகன் பூண்டிக் கல்வெட்டு ஒன்று நமக்க துணையாக நிற்கின்றது.

திருமுருகன்பூண்டிக் கல்வெட்டு மன்றாட்டினை விளங்கிக் கொள்வதற்குப் பல வகையிலும். உதவியாக இருப்பதால் அக்கல்வெட்டின் முழுவாசகத்தையும் தருதல் பயனுடையது.

1. *தண்டீஸ்வரன் ஓலைச் சாகரஞ்சூழ் வையகத்துக் கண்டீஸ்வரன் கரும மாராய்ந்து பண்டே அறஞ் செய்தான் செய்தான் அறங்காத்தன் பாதம் திறம்பாமல் சென்னி மேல் வைத்து அருளான் ஆதிசண்டேஸ்வரன் ஆதேசம் நம் சக்தன் ஆழ்வான் அண்ணாமலையானுக்கு நம் ஓலை குடுத்தபடியாவது உடையார் திருமுருகன் பூண்டி ஆளுடைய நாயனார் கோயிற் தானத்தாருடன் இக்கோயிலுங் கேட்டு ஊர் மன்றாட்டு ஆள்வதாக இவனுக்கு நாம் மன்றாட்டு குடுக்கையிற்*

2. *இவன் இக் கோயிற் திருப்பணிக்குறை தீரப்பல திருப்பணிக்கும் இவ்வூற் கால்பாட்டில் தேவர் கோயிற் திருப்பணிக்கும் . . . . ன் இ.....ப....று இப்பொன் இருனூற் . . . இவன் அடைப்பித்த அழியா விரதங் கொண்டாந் குளம் நீங்கலாக இடுகையில் இவனுக்கு நாம்குடுத்த தானத்தார் மன்றாட்டு ஒன்று இம்மன்றாட்டு ஒன்றும் முன்பு நடந்து போதும் தானத்தார் ஐந்தும் ஆகத் தானத்தார் மன்றாட்டு ஆறும் கூட நடந்து கோயிலும் கேட்டு ஊருங் கால்பாடும் மன்றாட்டும் ஆண்டு ஊருங்*

3. *கால்பாடும் நாற்பாற் கொல்லைக்குட் பட்ட நஞ்செய் புன் செய் மேனோக்கின மரங் கீணோக்கின் கிணறு... எழுவன*

*முளைப்பன... மற்றும் எப் பெறப்பட்டவர் பிராப்திகளும் ஆறு மன்றாட்டிலே வகையிட்டு ஆறிலொன்று இவன் மக்கள் சந்திராதித்தவரை அனுபவித்து வருவாராகவும் இது செம்பிலுஞ்சிலையிலும் வெட்டிக் கொள்வதாக நம்மோலை குடுத்தோம்*

இக்கல்வெட்டு மன்றாட்டின் உண்மைப் பொருளை விளங்கிக்கொள்ள உதவுகின்றது. மன்றாட்டு பொன் விலைக்குரியதாக விளங்கியது என்பது இவன் 200 பொன் செலவழித்தற்குப் பிரதிபலனாக ஒரு மன்றாட்டினை அண்ணாமயையானுக்கும் அவன் வழியினருக்கும் அரசன் அளித்துள்ளான். மேலும் மன்றாட்டுக்குரியவர் ஊர் வருவாயில் உரிய பங்கினைப் பெறுவதற்குரியவர் என்பது எழுவன் முளைப்பன மற்றுமொப்பெறப்பட்ட பிராப்திகளும் ஆறுமன்றாட்டிலே வகையிட்டு (கூறு) ஒரு கூறினை அண்ணாமலையானும் அவன் வழியினரும் பெறவேண்டும் என்று கூறுவதிலிருந்து மன்றாட்டு வழி வருமானமும் இருந்தது என்பது புலப்படும்.

மேலும் மன்றாட்டிற்குரிய மன்றாடி மன்றாட்டுக்காணி, மன்றாட்டுச் செய், மன்றாட்டு நிலம், மன்றாட்டுப் பேறு ஆகியவற்றையும் அவற்றின் மூலம் கிடைக்கும் வருவாயினையும் பெறத்தகுதியுடையவர் என்பது மற்றொரு கல்வெட்டு குறிப்பிடுகின்றது. திருமுருகன்பூண்டிக் கல்வெட்டு தானத்தார் மன்றாட்டு என்று ஒரு வகை மன்றாட்டினைக் குறிக்கின்றதா என்பதை ஆய்வு செய்ய வேண்டும்.

## மன்றாடி

கொங்கு நாட்டுக்கல்வெட்டுகளில் பயின்று வரும் மன்றாடி என்ற சொல் மன்றாட்டினை ஆள்பவன் என்ற பொருளில் வழங்கியது. பிறபகுதி கல்வெட்டுகளில் மன்றாடி என்ற சொல் கோயில் கால்நடைகளைத் தன்பொறுப்பில் வைத்துக் கொண்டு கோயிலுக்கு நெய்யளப்பவன் என்ற பொருளில் வழங்கியது. மேலும் ஊரில் நடைபெற்ற நீதி மன்றத்தில் வழக்காடுபவன் என்ற பொருளிலும் வழங்கியது. இது இலக்கிய வழக்கு. ஆனால் கொங்கு நாட்டில் தேவதான ஊர்களில் உருவாக்கப்பெற்ற மன்றாட்டுக்களை

நிருவகிப்பவன் என்ற பொருளில் வழங்கியது.

கொங்கு நாட்டில் கோயில் பொருளாதாரமும் வேளாண்வளர்ச்சியும் இணைந்து நின்றபோது கால்நடை வளர்ப்பில் உருவான மன்றாட்டு என்ற அமைப்பு கால்நடை வளர்ப்பிலிருந்து வேளாண்மைக்கு மாறிய பின்பும் வேளாண்மைக்குரிய சொல்லாக மாறிவிட்டது என்பது கோவை மாவட்டத்துக் கல்வெட்டுகளால் உறுதிப்படும்.

மன்றாடி காலப்போக்கில் ஊர் மன்றாடி, நாட்டு மன்றாடி ஆகிய பொறுப்புகளை வகிப்பதில் சென்றுமுடிந்தது. கொங்கு நாட்டில் 24 நாட்டு நாட்டு மன்றாடிகள் இருந்துள்ளனர் என்பது பிற்காலப் பட்டயங்களால் உறுதிப்படுகின்றது.

## துணை நூல்கள்


1. மா. கணேசன், இரா. ஜெகதீசன், கொங்கு நாட்டுக்கல்வெட்டுகள் (கோவை மாவட்டம்)
2. க.அ. புவனேசுவரி, கொங்குச் சோழர்.
3. V. Manickam, Kongunadu

# சமயங்கள்

## காபாலிகம்

கொங்கு நாட்டுச் சிவாலயங்கள் சிலவற்றிற்குக் 'காபாலீச்சுரம்' என்று பெயர் சுட்டப்படுகின்றது. கோவை மாவட்டம் சேவூர், பெரியார் மாவட்டம் ஈரோடு, மடவிளாகம் ஆகிய ஊர்களில் உள்ள கோயில்கள் ஆருத்திரா காபாலீசுரம் என்றும், காபாலீசுரம் என்றும் குறிக்கப்படுகின்றன. இப்பெயர்கள் காபாலிக சமயத்தின் செல்வாக்கினை வலியுறுத்துகின்றன.

## காளாமுகம்

சேலம் கிளிவண்ணமுடையார் கோயிலில் காளாமுகர் வழிபாடு செய்தமைக்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. இராசிபுரம் என்ற ஊர்ப் பெயர் குறிப்பிடத்தக்கது. காளாமுக முனிவர்கள் பெயர்கள் 'ராசி' என்ற விகுதியுடன் முடியும். கங்கராசி பண்டிதர், அமிர்தராசி, நாகராசி பண்டிதர் ஆகிய பெயர்களைச் சான்றுக்குக் கூறலாம். ராசி என்ற காளாமுக முனிவர் பெயரால் இராசிபுரம் என்ற பெயர் உருவாகியிருக்க வேண்டும். மேலும் காளாமுகம், மடங்கள் தோன்றுவற்குக் காரணமாயிருந்தது என்பர். கொங்குநாட்டில் கி.பி.12ம் நூற்றாண்டுக் கல்வெட்டுக்கள் மடங்கள் இருந்ததைப் பற்றிச் சுட்டுகின்றன. கொழுமத்தில் திருத்தொண்டத் தொகையான் மடம் என்றும், அன்னூரில் ஞானசம்பந்தர் மடம் என்றும் கல்வெட்டுக்கள் கூறும். பேரூர், திருமுருகன் பூண்டி, அவினாசி போன்ற ஊர்களில் மடங்கள் இருந்ததற்கான கல்வெட்டுச் சான்றுகள் உண்டு. இந்தச் சான்றுகள் எல்லாம் கொங்கு நாட்டில் காளாமுக சைவம் சிறப்புற்றிருந்ததை வலியுறுத்துகின்றன.

## பாசுபதம்

பாசுபத சைவம் கி.மு.2ம் நூற்றாண்டில் தோன்றியது என்றும். கி.பி.2ம் நூற்றாண்டில் தோன்றியது என்றும் இருவிதக் கருத்துக்கள் நிலவுகின்றன. பாசுபதத்தில் போற்றப்படும் மாகேஸ்வரர் வழிபாடு குஷாணர் காலத்தில் செல்வாக்குப் பெற்றிருந்தது என்பதற்கு வீமகட்பிஸஸ் காசுகளே சான்று. அவன் கி.பி.முதல் நூற்றாண்டில்வாழ்ந்தவன். பாசுபதத்தில் சில சீர்திருத்தங்களைச் செய்த இலகுலீசர் இலாடநாட்டினைச் சேர்ந்தவர். இலகுலீச பாசுபதம் பழமை வாதத்தினைப் பின்பற்றுவது. யோகத்தையும், பத்தி நெறியினையும் போற்றிய பெருமை இலகுலீச பாசுபதத்திற்கு உண்டு. சாதவாகனர் காலத்தில் இச்சமயம் மேற்கிந்தியாவிலிருந்து தென்னிந்தியாவிற்குப் பரவியது. கி.பி.3-4ம் நூற்றாண்டளவில் கர்நாடகத்திலும், ஆந்திரத்திலும் பரவிச் சிறப்படைந்தது. இச்சமயம் தமிழ் நாட்டில் யாண்டும் பரவவில்லை என்ற கருத்து நிலவி வந்தது. ஆனால் அண்மையில் கண்டு பிடிக்கப்பட்ட இலகுலீசர் சிற்பங்கள், பாசுபத சமயம் தமிழகத்தில் பரவியிருந்த தன்மையைப் புலப்படுத்தும். அரிட்டாபட்டி (மதுரை), பேரூர் (கோவை) ஆகிய ஊர்களில் மட்டும் இச்சமயம் பரவியிருந்தது மேலே காட்டிய சான்றுகளால் விளங்கும்.

## பேரூர் இலகுலீசர்

பேரூரில் உள்ள இலகுலீசர் சிற்பம் குறிப்பிடத்தக்கது. கொடலூரு மாரியம்மன் கோயிலுக்கு அருகில் இச்சிற்பம் உள்ளது. பத்மாசன நிலையில் அமர்ந்துள்ளார். வலக்கரத்தில் கபாலமும், இடக்கரத்தில் தண்டமும் உள்ளது. ஜடாபாரத்துடன் காட்சி அளிக்கிறார். காதில் குண்டலங்கள் உள்ளன. இச்சிற்பம் மேலைக்கங்கர் கலை மரபினைப் பின்பற்றி வடிக்கப்பட்டுள்ளது. கி.பி.7-8ம் நூற்றாண்டினைச் சேர்ந்தது. கி.பி.6ம் நூற்றண்டிலிருந்து கொங்கில் கங்கர்கள் ஆதிக்கம் நிலை பெற்றது. கங்க வம்சத்தினைத் தாபித்தவர்கள் பேரூரில் வாழ்ந்த சமண முனிவரிடம் அருளாசி பெற்றதாக அவர்தம் செப்பேடுகள் கூறும். அதனால் கங்கர்க்கும் பேரூருக்கும் இடையில் இருந்த நெருங்கிய தொடர்பு புலப்படும். தற்போது கண்டுப் பிடிக்கப்பட்ட

இலகுலீசர் சிற்பம் அத்தொடர்பினை வலியுறுத்தி நிற்கிறது. கங்கவாடியிலிருந்து பாசுபதம் கொங்கில் காலூன்றியது என்று கூறலாம்.

## கொங்கேழ் சிவாலயங்கள்

கொங்கு இலக்கியங்களில் கொங்கேழ் சிவாலயங்கள் என்று கூறும் போக்கு சென்ற நூற்றாண்டிலிருந்து பயின்று வருகிறது. சில ஊர்களை வைப்புத் தலங்களாகச் சுட்டுவதாகக் காண்கிறோம். தொழூர், ஏழூர், பேரூர், கொல்லி - அறப்பள்ளி போன்றவை வைப்புத் தலங்கள். மேலும் சேவூர் பாடல் பெற்ற தலமாகச் சுட்டப்படுகிறது. அன்னூரும் தேவாரப்பாடல் பெற்ற தலம் என்று திரு. நடேசகவுண்டர் அவர்கள் கூறுவார். கொங்கேழ் சிவாலயங்கள் என்ற கருத்து கி.பி.12ம் நூற்றாண்டு கல்வெட்டுக்களில் பயின்று வருகின்றது. கொங்கேழ் என்ற அடைமொழி கூறாவிட்டாலும் கொங்கு நாட்டில் கிடைக்கின்ற ஐந்து கல்வெட்டுகள் ஏழு சிவாலயங்களைப் பற்றிச் சுட்டுகின்றன. ஐந்து கல்வெட்டுக்களும் பாரியூர், திங்களூர், விசயமங்கலம், மொடக்கூர், கூகலூர் ஆகிய ஊர்களில் பொறிக்கப்பட்டுள்ளன. அவை ஒரே வாசகம் கொண்டவை. அந்நாளில் சிவன் கோயில்கள் அரசுக்குச் செலுத்தி வந்த ‘ஒட்டச்சு’ என்ற வரியினை நீக்கியயமை பற்றிய அரசன் ஆணையே அக்கல்வெட்டு. வடகொங்குப் பகுதியில் இருபது நாட்டு நாட்டுச்சாமந்தர் அவிநாசி, திருமுருகன்பூண்டி, கரூர், வெஞ்சாமங்கடல், கொடுமுடி, கூடல் (பவானி), மன்னியூர் (அன்னூர்) ஆகிய ஊர்களில் உள்ள கோயில் தானத்தார் ஆகியோர்களுக்கு அரசன் ஓலை கொடுத்ததாகச் சுட்டப்படுகிறது. இங்கு ஏழு ஊர் கோயில் தானத்தார் சுட்டப்படுவதைக் காணலாம். திருச்செங்கோடு விடுபட்டுள்ளது. மன்னியூர் சேர்க்கப்பட்டுள்ளது.

## மடங்கள்

கோவை மாவட்டத்தில் அன்னூர், அவினாசி, போளுவாம்பட்டி, கொழுமம் ஆகிய ஊர்களில் மடங்கள் நிலை பெற்றிருந்தமை பற்றிய கல்வெட்டுகள் கிடைக்கின்றன. அன்னூர் மன்னீஸ்வரர் கோயில் கல்வெட்டொன்று திருஞான சம்பந்தர் மடம்’ என்ற பெயரில் ஒருமடம் அவ்வூரில் இருந்தமை பற்றிக் குறிப்பிடுகின்றது. அவினாசியில்

மாணிக்கவாசகர் மடம் என்ற பெயரில் ஒரு மடம் இருந்தது. கொழுமம் கல்வெட்டொன்று திருத்தொண்டர்த்தொகையான் மடம் என்றொரு மடம் பற்றிக் குறிப்பிடுகின்றது. மேலும் கொங்குநாட்டுக் கல்வெட்டுகள் மடவிளாகம் பற்றி மிகுதியும் குறிப்பிடுகின்றன. மடங்களுக்கு நிலமும் காசும் கொடையாக அளிக்கப்பட்டுள்ளன.

சைவ சமய வரலாற்றினைப் பின்னோக்கிப் பார்க்கும் போது மடங்களின் நீண்ட பாரம்பரியம் புலப்படாமல் போகாது. தேவாரப் பாடல்களில் மடங்கள் பற்றிய குறிப்புகள் காணப்பெற்றாலும் கல்வெட்டுகளில் கி.பி.9ஆம் நூற்றாண்டிலிருந்து தான் மடங்கள் பற்றிய குறிப்புகள் காணப் பெறுகின்றன.

மடங்களின் தோற்றம் தமிழ்நாட்டில் பரவிய பக்தியிலக்கத்துடன் பின்னிப் பிணைந்து நிற்கின்றது. பக்தி இயக்கம் மக்களிடையில் தாசமார்க்கத்தைப் பரப்பியதால் மக்கள் மடங்கள் உருவாவதை ஆதரித்தனர். மேலும் கருநாடகத்திலும், தமிழ்நாட்டிலும் செல்வாக்கு பெற்றிருந்த சமணர்கள் ஒருங்கிணைந்த மடங்களை உருவாக்கி மக்களிடையே பரவினர். பொருளாதாரத்திலும் சமண மடங்கள் மக்கள் வாழ்வில் ஊடுருவிநின்றன. மேலும் நோயிலும் பசிப்பிணியிலும் உழலும் மக்களுக்கு உணவு, உறையுள், கல்வி ஆகிய நால்வகை அறத்தினை அளித்து, ஆறுதல் அடையச் செய்தது சமணம். மக்களும் மன்னனும் நிலக்கொடை அளித்தமையால் சமண மடங்கள் நிமிர்ந்து நின்றன. பொருட்செல்வத்திலும் புகழ்ச்செல்வத்திலும் திளைத்து நின்ற சமணம் மடங்களக்கெதிராக சைவர்கள் நிமிர்ந்து நிற்பது கடினமாக இருந்தது. அதனால் சைவர்கள் தங்களுக்கென மடங்களை உருவாக்கத் தலைப்பட்டனர். சைவர்களில் காளாமுக சைவரும், பாசுபத சைவரும் மடங்களை உருவாக்குவதில் முனைப்பு காட்டினர். அதில் வெற்றியும் பெற்றனர்.

கோவை மாவட்டம் பேரூரில் இலகுலீச பாசுபதமடம் ஒன்றிருந்தது. சேலத்தில் ஒரு காளமுக மடம் இருந்துள்ளது. நெரிஞ்சிபேட்டையில் ஒரு வீரசைவ மடம் இருந்துள்ளது. பிரித்தானியர்கள் வருவதற்கு முன் பல மடங்கள் கோவை மாவட்டத்தில் உருவாகி விட்டன. பேரூர் சாந்தலிங்க அடிகளார் மடம் குறிப்பிடத்தக்கது.

வைணவம், பௌத்தம் ஆகிய சமயங்கள் கி.பி.5-6ஆம் நூற்றாண்டிலிருந்து தழைத்தன. வீரசைவம், ஸ்வேதம்பர சமணம், கிருத்துவம், முதலான சமயங்கள் கி.பி.16-18ஆம் நூற்றாண்டுகளில் பரவின. கிருத்துவ சமயம் கி.பி.17ஆம் நூற்றாண்டின் பரவத் தொடங்கியது.

## துணை நூல்கள்


1. I.K. Sharma. Early Saiva Architexture
2. David Lorenzen. Kapalikas and Kala mukhas
3. க.அ. புவனேசுவரி. அன்னூர் வரலாறு
4. மா. கணேசன். இரா. ஜெகதீசன். கொங்கு நாட்டுக் கல்வெட்டுகள் (கோவை மாவட்டம்)

# கொங்கச் செல்வி

கோவை மாவட்டத்தில் கல்வெட்டுகள் சிலவற்றில் 'பெற்ற நாச்சியார்' என்ற பெயருடன் ஓர் அம்மன் குறிக்கப்பெறுகின்றது. பெற்ற நாச்சியார் கோயில் திருக்காமகோட்டம் என்று அழைக்கப் பெறுகின்றது. இத் திருக்காமகோட்டம் ஆனைக்ரீஸ்வரமுடையார் கோயிலில் இருந்த அம்மன்கோயில் என்றும் கொள்ளப்பெறுகின்றது. மூன்று கல்வெட்டுகள் இவ்வம்மையைப் பற்றிக் கூறுகின்றன. பெற்ற நாச்சியார் என்ற சிற்பம் பெரும்பாலும் கல்சிற்பமாக இருந்திருக்க வேண்டும். பெற்றம் என்பது சிவபெருமானின் வாகனம் என்று பொதுவாகக் கருதப்பெறுகின்றது.

பெற்ற நாச்சியாரைப் பற்றி ஆய்வு செய்வதற்கு முன் கொங்கு நாட்டில் நிலைபெற்றிருந்த தாய் வழிபாட்டினைப் பற்றித் தெரிந்து கொள்வது பயனுடையது. கொங்கு நாட்டில் கொல்லிப்பாவை, கொற்றவை, கொங்கச் செல்வி, இயக்கி, அவ்வை எனப் பலபெயரில் அழைக்கப்பெறும் பெண்தெய்வங்கள் பண்டைக்காலம் முதல் வழிபடப் பெறும் பெண் தெய்வங்கள் ஆகும். இவை மட்டுமின்றி 'அணங்கு' என்ற தெய்வமும் பண்டை நாளில் வழிபாடு செய்யப்பெற்றது. அச்சத்தினால் வழிபடுதற்குரிய சிறிய தெய்வங்கள் அணங்கு என்று அழைக்கப் பெற்றது.

*அணங்கே விலங்கே கள்வர்தம் இறையெனப்*
*பிணங்கல் சாவா அச்சம் நான்கே*

அணங்கு குறிஞ்சிநிலத்தில் வழிபாடு செய்யப்பெற்ற தெய்வங்களுள் ஒன்று.

குறிஞ்சியும் முல்லையும் திரிந்த நிலையே பாலை என்று பெயர்பெற்றது. அது வேனில் காலத்து நிலை. பாலையின்

தெய்வமாகக் கொற்றவை குறிக்கப் பெறுகின்றாள். சேக்கிழார் பெரும்பாலும்,

*''கோலமுல்லையுங் குறிஞ்சியுந் திரிந்த திவ்விடங்கள்*
*நீளவாட்படை நீலிகோட்டங்களும் நிரந்து*
*காலவேனிலிற் கடும்பகற் பொழுதினைப் பற்றிப்*
*பாலையுஞ் சொல்லா வனவுள பரன் முரம்பி''*

என்று குறிப்பிடுவார். கொங்கு நாடு முல்லையும், குறிஞ்சியும் நிறைந்த நிலப்பகுதியாகையால் இங்குக் கொற்றவை வழிபாடு சிறப்புற்றது. குறிஞ்சி, முல்லை ஆகிய நிலப்பகுதியில் கொற்றவை வழிபாடு மேலோங்கிற்று.

அணங்குடை நெடுமுடி, அணங்குடை பௌவம் அணங்குடை ஆறு என அணங்கு என்னும் சிறு தெய்வம் பல்வேறிடங்களில் உறைவதாகக் குறிக்கப் பெறுகின்றது. அணங்குடன் தொடர்புடைய பேய், பூதம், சூர் ஆகியவையும் அச்சம் தருகின்ற சிறு தெய்வங்கள். இத்தெய்வங்களும், குறிஞ்சி முல்லை ஆகிய நிலங்களில் வழிபடு தெய்வங்களாக விளங்கின.

## அணங்கு - தாய்த்தெய்வம்

தாய்த்தெய்வ வழிபாடு சிந்துவெளியிலிருந்து காணப்பெறும் வழிபாட்டு முறையாகும். சிந்து வெளி நாகரிகத்தில் கிடைத்த வழிபொருட்களில் தாய்த் தெய்வங்களே மிகுதியாக இருக்கின்றன. அதனால் சிந்துவெளி நாகரிகத்தில் தாய் வழிபாடு மேலோங்கி நின்றது எனலாம். இந்த வழிபாட்டுச் சிறப்பு பற்றி சர்.ஜான் மார்ஷல் கூறுவது எடுத்துக் காட்டத் தக்கது.

'அன்னை' அல்லது 'பேரன்னை' பிற்காலத்திலேயே தோன்றிய சக்தியைத் தோற்றுவித்த மூலப் பொருளின் பிரகிருதி முதலுருவாகும். அவளுடைய பிரதிநிதிகளே கிராம தேவதைகள் அல்லது கிராமச் சிறு பெண் தெய்வங்கள். அவற்றின் பெயர்களும் தல சரிதைகளும் கணக்கிலடங்கா. எனினும் அவை யாவும் ஒரே பொருளையே குறிக்கின்றன. அந்த மூல சக்தியே வளத்தின் தெய்வம்.

இப்பெண் தெய்வங்கள் யாவும் ஆரியர்க்கு முற்பட்ட ஆரியரல்லாத இனமக்களிடையே செல்வாக்குடையனவாயிருந்தன என்பதில் ஐயமில்லை. ஆரியருக்கு முற்பட வாழ்ந்த பூர்வீகக் குடிமக்கள் சிலர் இந்து சமயத்தை ஏற்கவில்லை. அத்தகைய மக்களிடையே பெண் தெய்வ வழிபாடு மறைந்து விடவில்லை என்பதை நினைவுறுத்து கின்றன.''

மார்ஷல் கண்டு காட்டிய சிந்துவெளி தெய்வத்தைப் பற்றிப் பின்னால் வந்த மாக்கி, தேவாங்கனஆத்ரே, செரீன்ரத்னாகர் ஆகியோர் உறுதிப் படுத்தியுள்ளனர். மேலும் ஏரன் பேன்ஸ் என்பார் இந்தியாவிலுள்ள ஆதிவாசிகளிடையே நிலவும் முக்கிய பெண் தெய்வங்களின் நீண்ட பட்டியல் ஒன்றினைத் தயாரித்துள்ளார். தாய் வழிபாடு, கன்னி வழிபாடு எனப் பலவாறாக வழிபடப்பெறும் பெண் தெய்வங்கள் இந்திய நாட்டுக் கிராமங்களில் பல வகையிலும் போற்றப் பெற்று வருகின்றது.

பண்டைத் தமிழரின் முதன்மைத் தெய்வம் தாய்த்தெய்வமே என்பதில் ஐயமில்லை. சங்க இலக்கியத்தில் கொற்றவை வழிபாட்டு முறை கூறப்பெறுகின்றது அச்சத்தைத் தரும் இயல்புடைய கொற்றவையை வெறியாட்டு முறையினால் பழந்தமிழர் வழிபட்டனர். பண்டைத் தமிழர் வாழ்க்கைக்கும் இலக்கியத்திற்கும் இலக்கணம் வகுத்த தொல் காப்பியமும் கொற்றவைநிலை என்னும் தலைப்பில் கொற்றவைக்குப் பலிகொடுத்து வணங்குவதாகக் கூறியுள்ளார்.

கொங்குநாட்டு மரபில் சங்க காலம் முதல் இன்று வரை தாய்த்தெய்வ வழிபாடு செல்வாக்குப் பெற்று விளங்குகின்றது. ஐவர்மலை அயிரை படாரி, ஆழியாற்று ஆதாழியம்மன் ஆகிய பெண் தெய்வங்கள் சமண மதத்துடன் இணைந்து விட்ட கொற்றவை உருவங்களே ஆகும். அயிரை சேரரின் குல தெய்வமாகவும் குறிக்கப் பெறுகின்றது. ஆதாழியம்மன் வழிபாடு குறிப்பிடத்தக்கது. தீர்த்தங்கரர் உருவத்தையே அம்மன் என்று உருமாற்றி வழிபாடு செய்து வருகின்றனர் இத்தெய்வத்திற்கு இன்றுவரை உயிர்ப்பலியிட்டு வருகின்றனர். உடுமலை - மூனாறு பெருவழியில் உள்ள மறையூர் கொற்றவை ஓவியம் 7000 ஆண்டுகளுக்கு முற்பட்டது.

இத்தெய்வம் தொல்பழங்காலம் முதல் அப்பகுதி மக்களால் வழிபடப்பெற்ற அணங்கு என்றே கொள்ளவேண்டும். அணங்கு வழிபாடு செய்யப்பெற்ற குகைகளில் சமண முனிவர்கள் தங்கித்தவம் இயற்றினர். அதற்குச்சான்றாக அங்கு சமணப்படுக்கைகள் இருப்பதைப் பார்க்கமுடியும். பண்டைக் காலம் தொடங்கி இன்று வரை நடைபெறும் இவ்வழிபாடு சமண சமயப் பெண் தெய்வமான இயக்கி அம்மனாக வழிபாடு செய்யப் பெற்றது. மலையாண்டிப் பட்டணத்தில் உள்ள பள்ளியம்மன் சமணப்பள்ளிகளில் இருந்த உருவங்களே சமணத்தின் பெண் தெய்வங்கள். சில இடங்களில் ஓவியமாகவும் சில இடங்களில் சுடுமண் பொம்மைகளாகவும், சில இடங்களில் கற்சிற்பமாகவும், செய்யப்பெற்று அவற்றிற்கு வழிபாடு செய்யப்பெற்றது.

## மாசானி அம்மன்

தொல் பழங்காலம் முதல் இன்று வரை நாட்டார் வழக்காற்றில் பெரும் செல்வாக்குப் பெற்று விளங்கும் தாய்த் தெய்வ வழிபாட்டின் எச்சமாக விளங்குவது மாசானி அம்மன் வழிபாடு. இவ்வழிபாடு கொங்கு நாடு முழுவதும் பரவலாக வழிபாடு செய்யப் பெற்றாலும் ஆனமலை மாசானி அம்மன் நாடு முழுவதும் புகழ் பெற்று விளங்குகிறது. மாசானியம்மன் என்பது மயானத்து தேவதை. மயானம் - மசானம் - மாசானம் என்று மருவியது. மசானி பண்டை நாளில் காடு கிழாள்காடு காள் என்றழைக்கப்பெற்ற கொற்றவையின் வடமொழி பெயர்ப்பாகும்.

கொற்றவையாகிய காடுகிழாள் வழிபாடே மாசானி என்ற பெயரில் வழிபடப்பெற்று வருகின்றது. இத்தெய்வத்திற்கும், நன்னனால் கொல்லப்பெற்ற பெண்ணிற்கும் நெருங்கிய தொடர்புண்டு என்று ஒரு சாரார் கூறுகின்றனர். அம்பரம்பாபாளையம் ஆற்றில் உள்ள பிங்கொனாம்பாறா என்ற பெயர் பெண் கொன்றான் பாறை என்பதன் திரிபாகலாம் என்று கருதுகின்றனர். ஆனைமலைக்கு நன்னனூர் என்று பெயர் வைக்கப் பெற்றதால் பெண்கொலை புரிந்த நன்னன் வாழ்ந்த ஊர் ஆனைமலை என்று கருதுகின்றனர். நன்னன் வடமலையாள நாட்டிலுள்ள எலிமலையினை தலைமையிடமாகக் கொண்டு ஆட்சி செய்தவன். இந்த எலிமைலையை சங்க இலக்கியம் ஏழில் குன்றம்

என்று அழைக்கிறது. இவனுடைய தலைநகர் பாழி என்று கூறப்பெறுகிறது. மேலும் மாமரம் அவன் தலைநகரத்தலிருந்த காவல் மரமாக இருந்திருக்க வேண்டும். அந்த மரத்தின் பழத்தைத் தின்றதால் பெண்ணைக் கொன்றிருக்க வேண்டும். காரணம் காவல் மரம் என்பது குலத்தின் சின்னமாக இருந்திருக்கவேண்டும். குலச்சின்னத்திற்கு ஊறு விளைவிப்பவர்கள் குலத்தில் உள்ள ஒவ்வொருவருக்கும் ஊறு விளைவித்தவர்கள் ஆவார்கள். அவர்களை கொலைத் தண்டனைக் குள்ளாக்கப்படவேண்டும். அந்த அடிப்படையில் தன் குலச்சின்னமான மாமரத்தின் பழத்தைத் தின்றதற்குக் கொலைத் தண்டனை அளிக்கிறான். அந்தப் பெண்ணின் பெற்றோர்கள் அவளைப் போலப் பொன் உருவத்தினையும் எண்பத்தொரு யானைகளையும் தண்டக் குற்றமாகத் தருவதாகவும் அவற்றைப் பெற்றுக் கொண்டு பெண்ணைக் கொலைத் தண்டனையிலிருந்துவிடுவிக்குமாறும் கேட்டும் விடாப்பிடியாக நின்று கொலைத் தண்டனையை நிறைவேற்றுகிறான். தன் உருவப் பொன்பொம்மையையும் எண்பத்தோர் யானைகளையும் கொடுப்பது இராஜதுரோகக் குற்றம் செய்தவர்கள் தண்டக் குற்றமாகத் தருவது. அதனால் மாங்கனியைத் தின்றது இராஜ துரோகக் குற்றம் என்று கருதப் பெற்றது. இந்த வரலாறு இன்றும் வடமலையாளப் பகுதியில் நாடகமாக நடத்தப் பெறுகின்றது. இந்த நாடகத்தில் பயின்று வரும் பெண் கொலை புரிந்த வரலாற்றினை ‘வட மலையாள நாட்டு நன்னன் நினைவுகள்’ என்ற கட்டுரையில் பி.எல்.சாமி அவர்கள் விளக்கியுள்ளார். அதனால் மாசானி அம்மன் வேறு என்பது உறுதிப்படுகின்றது. ஆனால் கொங்கானம் கிழான் நன்னனின் ஆட்சி ஆனைமலை வரை பரவியிருந்தது.

## பேறு - பெற்றம்

பெற்ற நாச்சியார் என்பதில் இரண்டு சொற்கள் உள்ளன. பெற்றம் - நாச்சியார் என்ற பிரித்துப் பொருள் கொள்ளும் போது எருதின் மீது அமர்ந்த தேவி என்று பொருள் கொள்ளலாம். பெற்றம் என்பது எருதைக் குறிக்கும் பல சொற்களில் ஒன்று. பெற்றம் என்பதனுடைய வேர்ச் சொல் பேறு என்பதாகும். கால் நடைவளர்ப்பில சிறப்புற்ற முல்லை நிலத்தில் எருது போன்ற மாடே செல்வமாகக்

கருதப்பெற்றது. அதனால் எருது பேறு (செல்வம்) என்று கருதப்பெற்றது. இன்றும் கால்நடை வளர்ப்பில் சிறப்புற்றிருக்கும் பல சமூகங்களில் கால்நடையே சிறந்த செல்வம். நிலத்தைக் கூட அவர்கள் பெருஞ் செல்வமாகக் கருதுவதில்லை. அதனால் மாடு செல்வமாகக் கருதப்பெற்றது. தன் ஹட்டி என்று கன்னடத்தில் கூறப்பெறுவதும் மாடு செல்வம் என்று குறிக்கவே ஆகும். தன் என்பது தனம் என்பதன் திரிபு. ஹாட்டி என்பது பட்டி என்பதன் கன்னட வடிவம். தனம் என்பதற்குச் செல்வம் என்பது பொருள். இந்த அடிப்படையில் பெற்றம் என்பதும் முல்லை நிலத்தில் உருவான சொல் என்றும் கொள்ளலாம். கொங்கு நாடு முல்லையும் குறிஞ்சியும் கலந்த பகுதியாக விளங்கியது. இங்குக் கால்நடை வளர்ப்பே முதன்மைத் தொழிலாக விளங்கியது. அதனால் பல இடப்பெயர்கள் கால்நடை வளர்ப்புடன் தொடர்புடையவையாக விளங்கின. அந்தியூர் பெரிய போது, பெருந்தொழு, போதுபட்டி, தேவம்பாடி போன்ற பெயர்களில் வரும் விகுதிகள் கால்நடை தங்குமிடத்தோடு தொடர்புடையவையாக விளங்குகின்றன. அந்தியூர் என்ற பெயரும் கூட அந்தியில் பட்டி போட்டு தங்குமிடத்தைக் குறிப்பதாகக் கொள்ளலாம். இவ்வாறு ஆனைமலையைச் சுற்றியுள்ள ஊர்கள் கால்நடையுடன் தொடர்புடைய பெயர்களைப் பெற்று விளங்குகின்றன. அதனால் பெற்ற நாச்சியார் என்று கூறுவது பொருள் பொதிந்ததாக அமைந்துள்ளது.

பெற்ற நாச்சியாரைச் செய்தளித்தவன் தன் தாயின் பெயரால் செய்தளித்ததாகக் கூறக் காண்கிறோம். சுந்தரபாண்டியன் 14வது ஆட்சி ஆண்டில் பொறிக்கப் பெற்ற கல்வெட்டு குறிப்பிடத்தக்கது.

*''ஸ்வஸ்தி ஸ்ரீ கோச்சடையபன்மரான திரி*
*புவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ சுந்தரபாண்*
*டிய தேவற்குயாண்டு 14 வது மகர*
*நாயற்று பூர்வபக்ஷத்து பஞ் மியும்*
*ஞாயிற்றுக் கிழமையும் பெற்ற பூசத்து*
*நாள் வெண்டையூர்க்கால் வீரகேரள வள*
*நாட்டு நன்னனூர் ஆளுடையார்*
*ஆனைக்கீஸ்வரமுடைய நாயனார் கோயிலில் பாண்டி*

*மண்டலத்து இருஞ்சோனாட்டு மண்ணை*
*யார் கோட்டையில் உடையார் சர்வேஸ்*
*வரமுடைய நாயனார் திருமடைவிளா*
*கத்து சுந்தர பெருமாள் வாழ்வித்தாரான*
*பல்லவ ராயர் மாதாக்கள் பேராலே*
*யேறி ருளப் பண்ணின திருக்காம*
*கோட்ட நாச்சியார் பெற்ற நாச்சியார்''*

என்று பொறிக்கப் பெற்றுள்ள வாசகம் எடுத்துக்காட்டத்தக்கது.

இக்கல்வெட்டு வாசகத்தில் பல செய்திகள் பொதிந்து கிடைக்கின்றன. பெற்ற நாச்சியார் சிலையைச் செய்தளித்தவள் சுந்தரபாண்டியனுடைய அதிகாரி. அவன் பாண்டிமண்டலத்து இருஞ்சோனாட்டு மண்ணையார் கோட்டையில் உள்ள சர்வேஸ்வரமுடையார் கோயில் மடவளாகத்தைச் சேர்ந்தவள். அங்கு மடவளாகத்தின் முக்கிய பொறுப்பில் இருந்துள்ளான். அவன் மாதாக்கள் பேராலே பெற்ற நாச்சியார் சிற்பத்தை எழுந்தருளச் செய்துள்ளான்.

அவனுடைய தாய் திடீர் மரணத்தைத் தழுவியமையால் இதுபோன்ற சிற்பங்களை வடித்துத் தந்திருக்க வேண்டும். இதுபோல இறந்தவர்களின் நினைவாகத் தெய்வ உருவங்களைச் செய்தளிப்பது கொங்கு நாட்டில் புதுமையானதல்ல. பிரமியம் அன்னூர் ஆகிய ஊர்களில் இறந்தவர்கள் நினைவாக தெய்வ உருவங்களைச் செய்தளித்துள்ளனர்.

பெற்ற நாச்சியார் சிற்பம் பெரும்பாலும் செப்புத் திருமேனியாகவே இருந்திக்கவேண்டும். கல் திருமேனியாக இருந்திருந்தால் கோயில் கருவறையில் இருந்திருக்கும். மேலும் ஏற்கெனவே வழிபாட்டிலிருந்த திருக்காமகோட்டத்தில் இத்திருமேனி எழுந்தருளப் பெற்றது. அக்கோயில் திருக்குட நீராட்டின்போதே அம்மனுடைய கல் திருமேனி செய்து வைக்கப் பெற்றிருக்கவேண்டும். அதனால் இவ்வுருவம் செப்புத் திருமேனியாகவே இருந்திருக்க வேண்டும். அது இப்போது கிடைக்கவில்லை.

தமிழ்நாட்டில் எருதுடன் நிற்கும் சிவன் அல்லது எருதின் மேல் அமர்ந்த சிவபெருமான் எனப் பல வகையில் திருவுருவங்கள் குறிக்கப் பெறுகின்றன. 'பட்டியேறுகந்தேறும் பெருமான்' என்ற தேவாரப் பாடல்களில் பேசப் பெறுவதைப் பார்க்க முடியும். இதனை படிமக்கலை வல்லுநர்கள் ரிஷபாந்திகர் என்று அழைக்கின்றனர். ரிஷபாந்திகரை மனதில் கொண்டு செய்யப் பெற்றதே பெற்ற நாச்சியார் என்ற உருவம். இத்தகைய உருவம் ஒன்று பொள்ளாச்சி அருகில் உள்ள பெரிய களந்தை என்ற ஊரில் உள்ள அம்மன் கோயில் கருவறையில் வைத்து வழிபடப் பெற்றுவருகின்றது. தமிழ்நாட்டிலேயே எருது மீதமர்ந்த தேவி இது ஒன்றே. அதனால் கொங்கு நாட்டில் தேவி வழிபாடு சிவ வழிபாட்டிற்குச் சமமாக அல்லதுமேல் நிலையில் வைத்து வழிபடப் பெற்ற தன்மை புலப்படாமல் போகாது.

இடைக்காலத் தமிழகத்தில் தாய்த்தெய்வம் சிவனை விட மும்மூர்த்திகளை விட உயர்ந்தவளாகக் காட்டப்பெற்றாள். தமிழகம் மட்டுமின்றி இந்தியா முழுவதிலும் தாய்வழிபாடு பெருமை பெற்ற காலமாக இடைகாலம் விளங்கியது. இடைக்கால இந்தியாவில் பல்வேறு பழங்குடிகள் சமூக நீரோட்டத்தில் இணைக்கப்பெற்றனர். அவ்வாறு இணைக்கப் பெற்ற பழங்குடிகள் பலர் தாய் வழிபாட்டினர். அதனால் இடைக்கால இந்தியாவின் சாக்தம் பெருஞ்செல்வாக்குப் பெறத்தொடங்கியது அந்த வழிபாட்டின் மகோன்னதநிலை சோழர் காலத்தில் காணப்பெற்றது. கி.பி.10ஆம் நூற்றாண்டு முதல் 13ஆம் நூற்றாண்டு வரையிலான காலகட்டத்தில் பழங்குடிகள் பல சமூக நீரோட்டத்தில் இணைக்கப்பெற்றன.

பழங்குடிகள் சமூக நீரோட்டத்தில் இணைக்கப் பெற்றவர்கள் தொடக்கத்தில் இடங்கைப் பிரிவில் வைக்கப் பெற்றனர். இவர்களை விட உயர்ந்தவர்களாகக் கருதப் பெற்றவர்கள் வலங்கைப் பிரிவில் வைத்துப் போற்றப்பெற்றனர். வலங்கை இடங்கைப் பிரிவுகள் ஏற்பட்டதே பழங்குடி இணைப்பினாலேயே ஆகும் என்பர். சோழர் காலத்தில் மலைகளிலும் காடுகளிலும் வாழ்ந்த பழங்குடிகள் வேளாண் மக்கள் நாகரிகக் குடிமக்களாக மாற்றம் செயப்பெற்றபோது உடனடியாக 'உயர்ந்த' குடிகளுடன் சேர்ந்து வாழ முடியாது. அதனால் அவர்களை

'உயர்ந்த' குடிகளிடமிருந்து ஒதுக்கியே வைத்தனர் சோழப்பேரரசர்கள். காரணம் அம்மக்களின் பண்பாட்டு நிலை வேறு பட்டிருந்தமையே ஆகும். அதனால் இடங்கைப் பிரிவில் வைத்துப் போற்றப் பெற்றனர். இடங்கை தமிழ்மரபில் கீழானது வலங்கை மேலானது உயர்ந்தது என்று கருதப்பெற்று வருகின்றது. அதனால் பழங்குடிகள் சமூக நீரோட்டத்தில் இணைத்தபோது இடங்கைப் பிரிவில் வைத்துப்போற்றப் பெற்றனர் பொருளாதாரத்தின் மேன்மையுற்ற சில இடங்கைச் சாதியார் வலங்கைக்கு மாறியதைப் பற்றிக் கல்வெட்டுக்கள் பேசியுள்ளன.

இடங்கைப் பிரிவினர் வழிபட்ட தாய்த்தெய்வ வழிபாடு 'வாமா சாரம் - தந்திரம்' என்று அழைக்கப் பெற்றது. இந்த மரபினை திருமூலர் கடுமையாகச் சாடுவார். ஆனால் கி.பி.12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒட்டக்கூத்தர் வாம மார்க்கத்தைப் போற்றியுள்ளார். இது பழங்குடித்தாய்த் தெய்வவழிபாட்டின் செல்வாக்கினை உறுதிப்படுத்துகின்றது. வாமமார்க்கத்தினரைச் சாடும் திருமூலர் கூட தனது நூலில் தாய்த் தெய்த்தினைப் பெருமையாகப் போற்றியுள்ளார். அதனால் பழங்குடித்தாய்த் தெய்வம் மேனிலையாக்கம் பெற்று வந்தது எனலாம்.

பழங்குடித்தாய்த் தெய்வம் கொலையும் செய்யும் மணமகளாக காமம் சான்றவளாகக் காட்டப் பெறுகின்றாள். தமிழகத்தில் பழங்குடித்தாய்த் தெய்வங்களைச் சிவ சமயத்தில் இணைப்பதற்குப் பெரும்பாடுபட்டனர். சிவனுடைய மனைவியாக்குவதில் பல இடர்ப்பாடுகளைச் சந்தித்தனர். பல்வேறு போட்டிகளால் சிவனுடன் சரிநிகர் சமானமாக வைத்து போற்றப் பெற்றாள். ஆனால் ஊர்த்துவ தாண்டவப் போட்டியில் தேவி சிவனிடம் தோற்றுப் போய்விடுகிறாள் என்று புராணம் கூறுகின்றது. சிவனுக்கு அடங்கியவளாகத் தேவி காட்டப் பெற வேண்டும் என்பதே ஊர்த்துவ தாண்டவப் போட்டியின் உளளடக்கமாகும்.

தேவியைச் சிவனின் அடியுறைபவளாகக் காட்டுவதில் முழு வெற்றிபெற்று விட்டார்கள் என்ற சொல்ல முடியாது. கொடூர தெய்வத்தை இரு கூறாக்கி ஒரு கூறு சாந்த சொரூபியாகச் சிவனின்

மனைவியாக்கப் பெற்று திருக்காமகோட்ட நாச்சியாராக மாற்றப் பெற்றாள். மற்றொரு கூறு கர்ணகொடூரமாகக் காட்சியளிக்கும் காளியாக அந்தந்த ஊர் எல்லையில் வைத்து வழிபடப் பெற்றாள். மயிலைக் காளி குறிப்பிடத்தக்கது. கி.பி.10ஆம் நூற்றாண்டினைச் சேர்ந்த நடனமாடும் காளியின் உருவம் மயிலை மாரியம்மன் கோயிலில் உளளது. ஆலங்காட்டுக்காளி, தில்லைக் காளி, தஞ்சைக்காளி, திருவண்ணாமலைக்காளி, கச்சிக்காளி, குடந்தைக் காளி, திருமுருகன் பூண்டிக் காளி (நீலகண்டி) எனப் பல ஊர்களில் காளியாகவே வழிபடப் பெறுகின்றாள்.

கொங்கு நாட்டில் காளி கோயில்கள் நீலகண்டிகோயில் என்றே கல்வெட்டுகள் கூறுகின்றன. இன்று மக்களும் இவ்வாறே அழைக்கின்றனர். அதனால் நீலகண்டன் என்ற சிவன் பெயரின் பெண்பால் பெயராக நீலகண்டி என்ற பெயர் உருவாயிற்றோ என்று கருத வேண்டியுள்ளது.

கொங்கு நாட்டு ஓலைப்பட்டயமான சோழன் பூர்வபட்டயம், சோழர்கள் வேளாண் வளர்ச்சியை ஊக்குவித்த வரலாற்றினைக் கூறும் நூலாகும். வேளாண்மை விரிவாக்கத்தில் 'காடு கொன்று நாடாக்கும் பணி' முடுக்கி விடப் பெற்றது. காட்டை அழித்து நாடாக்க முயன்ற போது அங்குக் காவல் தெய்வமாக, விளங்கிய காளி தடுப்பதாகவும், அதற்குச் சோழன் கரிகாலன் அத்தேவதை வழிபாட்டில் எந்தவித மாற்றமின்றி நடத்தப்பெறும் என்ற உறுதியளித்தான் என்றும் கூறும். பன்றிப் பலி, எருமைப்பலி, நரபலி எனப் பல்வேறு உயிர்ப்பலிகளைத் தருவதாக அந்நூல் குறிப்பதைக் காணலாம். இந்தச் சான்று கொங்கு நாட்டிலும் சோழர்கள் வருவதற்கு முன் தாய்த் தெய்வங்கள் தனிப் பெருங்கடவுளாக வழிபடப்பெற்றது என்பதை உறுதிப் படுத்துகின்றது. ஒவ்வொரு ஊரிலும் நிலை பெற்றிருந்த தேவி சோழ மன்னனிடம் முறையிட்ட செய்தி கூறப் பெறுகின்றது. அண்மையில் கண்டு பிடிக்கப் பெற்ற புதிய சோழன் பூர்வ பட்டயத்தில் அன்னூர் பற்றிக் கூறும்போது தேவதை சேரமான் பெருமாளிடம் முறையிட்ட செய்தி கூறப் பெறுகின்றது.

*''நகரமும் கட்டுவிக்க வேறாமெ வேடர்*
*கம்பழந்தாரை விட்டு அந்த வனத்தை*
*வெட்டுவிக்கும் அந்த வள்ளி வனத்தில்*
*காத்திருந்த துக்கை அழில் விஷ்ணு*
*துர்க்கையென்று ருத்திர துர்க்கை*
*யென்றும் அந்த ரண்டு துர்க்கையும்*
*சேருமாம் பெருமாளென்னும் சேரனிடத்துக்கு*
*வந்து என் வனத்தை எங்களை யென்*
*னாமல் வெட்டுவித்த பணிக்கு எங்களுக்கு*
*இராற் பன்னிரண்டு அவதார நரபலி*
*குடுக்க வேணும்மென்று சேரனைக்*
*கேட்டது அதுகள் கேட்டபடிக்கு*
*சேரனாகிறவர் சமய முதலிய அழைத்து*
*அந்தத் துர்க்கையளுக்கு ஒப்புச் சொல்லச்*
*சொன்னார். அவர் சொன்னபடிக்கு சமய*
*முதலிய் அப்படியே அந்தத் துர்க்கை*
*யருக்கு அந்நகரமும் இந்த ஆலய*
*மும் கட்டி முடிந்த பின்பு உங்க*
*ளுக்கு வானே ஈராறு பன்னிரண்டா*
*வராக நரபலியும் ஒப்பித்துப் பின்பு*
*உங்களுக்கு வருஷம் தோறும் திருநாள்*
*நடப்பவறிந்து இந்தக் கிராமத்தா*
*ரிடத்தில் வழக்குப் பொங்கலும் ஆடு*
*பண்ணி கோழி இரத்தமும் பலியும்*
*எருமைக் கிடாப் பலியும் குடுத்த*
*நடத்த முக்கட்டிச் செயிதுதாரள்*
*என்ற சமயமுதலி துர்க்கைகளுக்கு*
*ஒப்புச் சொன்னார்''*

இது போலவே ஒவ்வொரு ஊரிலும் தேவி வழிபாடு தொல் பழங்காலம் முதல் நடைபெற்றது என்பது சோழன் பூர்வ பட்டயம் கூறும் குறிப்புகளால் உறுதிப்படுத்திக் கொள்ள முடியும்.

காடுகளிலும், பெருவழி ஓரத்திலும் மலை உச்சிகளிலும் வழிபடப் பெற்ற பெண் தெய்வங்கள் பின்னாளில் சிவ வழிபாட்டுடனும், திருமால் வழிபாட்டுடனும் இணைக்கப் பெற்றது. அவ்வாறு இணைக்கும் அத்தெய்வங்களின் இயல்புகளை மாற்றி 'உயர்ந்தோர்' வழிபடும் தெய்வமாகவும், சிவனின் மனைவியாகவும் திருமாலின் மனைவியாகவும் மாற்றியமைத்துக் கொண்டனர். அவ்வாறு மாற்றியமைக்கும்போது பல தலபுராணங்களை உருவாக்கிக் கொண்டனர். அந்தக் கதைகளில் பெண் தெய்வங்கள் பழங்குடித்தன்மை மிகுந்திருப்பதைக் காணலாம். ஆனைமலை திருக்காமக்கோட்ட நாச்சியார் ஆனைமலையில் பழங்குடித் தெய்வத்திலிருந்து பிரித்து சாந்த சொரூபியாக மாற்றப் பெற்ற தெய்வம். மாசானியம்மன் ஊர் எல்லையில் வழிபடப்பட்டு வரும் பழங்குடித் தெய்வமாகும். சென்ற நூற்றாண்டின் முற்பகுதி வரை காடர்கள் என்ற பழங்குடியினர் மாசானி அம்மனை உணர்வு பூர்வமாக வ்ழிபட்டனர். மேலும் ஆழியாற்றங்கரையில் நரசிம்மசாமி கோயில் அருகில் உள்ள எட்டுக் கை அம்மன் கோயிலும் பழங்குடிகள் வழிபட்ட பெண் தெய்வமாகலாம்.

## துணை நூல்கள்


1. R. Nagasamy. *Tantric cult of Tamilndu.*
2. Devid Deen Shulman. *Tamil Temple myths.*
3. M.A. Durai Rangasami. Religion and Philosophy of Tevaram Vol. I.
4. க.அ. புவனேசுவரி, அன்னூர் வரலாறு
5. மா. கணேசன், இரா. ஜெகதீசன், *கொங்குநாட்டுக் கல்வெட்டுகள்* (கோவை மாவட்டம்).
6. ஆர். பூங்குன்றன், *தொல்குடிவேளிர் அரசியல்.*
7. க.அ. புவனேசுவரி, கொங்குச்சோழர்

# வரலாற்றுச் சிறப்புமிக்க ஊர்கள்

# அவிநாசி வட்டம்

## 1. அச்சம்பாளையம்

அச்சம்பாளையம், அவிநாசி வட்டத்தில் அன்னூர் செல்லும் சாலையில் உள்ளது. இவ்வூரில் கல்லாங்காடு பகுதியில் நாராயணசாமி என்பவர் தனது நிலத்தினை விவசாயபணி செய்யும் போது பெருங்கற்கால சின்னமான முதுமக்கள்தாழி வெளிவந்துள்ளது (urnburial). மேலும் இந்த ஊரில் கல்லாங்காட்டுப் பகுதியில் இன்றளவும் கி.மு.மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்த பெருங்கற்காலச் சின்னங்களான கல்திட்டைகள் (cairn circle) இன்றளவும் உள்ளன.

## 2. அவிநாசி

இவ்வூர் கோவை ஈரோடு சாலையில் கோவையிலிருந்து சுமார் 45கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் அவிநாசியப்பர் கோயில், கருணாம்பிகை கோயில், அம்மன் கோயில், விநாயகர் கோயில் ஆகிய கோயில்கள் உள்ளன. இவ்வூர் தேசிய பெருவழியில் உள்ளதால் ரோமானியர்களது ''செப்புஜாடி'' ஒன்றும் கிடைத்துள்ளது.

இவ்வூர் கருணாம்பிகை கோயில் மகா மண்டபம் வடக்குச் சுவரில் வீரபாண்டியனின் (யா-19) கி.பி.1284 ஆண்டில் ''மலை மண்டலத்து வாலிசேரி செவ்வை கோட்டூராமன் சங்கரன்'' அவிநாசி ஆளுடையாற்கு திரு நந்தா விளக்கெரிக்க நூறு பணம் கொடுத்த செய்தி சொல்லும் கல்வெட்டுள்ளது. அம்மன் கோயிலில் சிறு தொண்டர் கதை 13ஆம் நூற்றண்டுச் சிற்பங்களாக வடிக்கப்பெற்றுள்ளது.

இங்குள்ள மாணிக்கவாசகர் செப்புத்திருமேனியில் நந்தி நாகரியில் எழுத்துப் பொறிப்புள்ளது. அது கன்னடமொழியிலும் நாகரி எழுத்திலும் அமைந்துள்ளது. இது கி.பி.16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது.

பார்ப்பார் சான்றார்க்கு வரிசைகொடுத்தது பற்றி ஒரு கல்வெட்டு உள்ளது. பசுதானம் கொடுத்தது பற்றி ஒருகல்வெட்டு உள்ளது. கொங்கு நாட்டில் வேறெங்கும் பசு வழங்கிய சான்றில்லை.

மற்றொரு கல்வெட்டு அவிநாசி லிங்கேசவரர் கோயில் முக மண்டபத் தூணில் உள்ளது. கல்வெட்டு கி.பி.1648 ஆகும். பெரிய காளியப்ப கவுண்டரும், சின்னகாளியப்ப கவுண்டரும் இந்த ஓட்டுக்கால் மண்டபத்தைக் கட்டியுள்ளனர் என்று கூறுகின்றது. மற்றொரு கல்வெட்டு விநாயகர் கோயில் மண்டபத்தூணில் உள்ளது. சுந்திரபாண்டியன் (யா-27) காலத்தில் திருக்கானப்பேற்றில் (காளையர் கோயில்) ''அதளையூர் நாடாழ்வான்'' அவர்கள் சந்தியா விளக்கு அமைப்பதற்கு பணம் நன்கொடை அளித்துள்ளார் என்ற செய்தியை அறியமுடிகின்றது.

மற்றும் அம்மன் கோயில் வடக்குச் சுவரில் ''பார்ப்பார் சான்றார்க்கு உரிமை கொடுத்த கல்வெட்டு உள்ளது. இக்கோயிலில் முதலை வாய்பிள்ளை செப்பு சிலை'' உள்ளது என்பது மிகவும் குறிப்பிடத் தகுந்த செய்தியாகும். இது சுந்தரர் வரலாற்றுடன் தொடர்புடையது. மேலும் இவ்வூர் தேவாரப்பாடல் பெற்ற ஸ்தலம் ''புக்கொளியூர்'' என்றும் அழைக்கப் பெற்றது. இவ்வூரில் 300 ஆண்டுகளுக்கு முற்பட்ட பாலம் இருந்தது. 1979ஆம் ஆண்டு வெள்ளத்தில் அழிந்துவிட்டது.

## 3. அன்னூர்

அன்னூர், கோவையின் வடக்குப் பகுதியில் உள்ளது. அன்னூர் ஆயிரமாண்டு பழமையான, சிறப்புடைய ஊராகும். இவ்வூர் கல்வெட்டுக்களில் மன்னியூர் என்று அழைக்கப்பெற்றுப் பின்னாளில் அன்னியூர் எனத்திரிந்தது. இப்போது அன்னூர் என்று அழைக்கப் பெறுகின்றது. இவ்வூரில் 52 கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டுள்ளன. இவை கி.பி.11ஆம் நூற்றாண்டு முதல் 14ஆம் நூற்றாண்டு வரையிலான காலத்தைச் சார்ந்தவை ஆகும்.

இவ்வூரில் இறந்து போனவர்களுக்கு செப்புப் படிமங்கள் செய்து வைக்கும் பழக்கம் இருந்தமைக்கான கல்வெட்டுச் சான்றுகள்

கிடைக்கப்பெற்றுள்ளன. இவ்வூரில் திருஞான சம்பந்தர் பெயரில் ஒரு மடம் இருந்துள்ளது.

அன்னூர் கல்வெட்டுக்களில் ஆன்பதி (ஆம்போதி) சேவூர், கவையன்புத்தூர் சத்தியமங்கலம், வெள்ளைப்பாடி, ஆகிய ஊர்கள் குறிக்கப்பெறுகின்றன.

இவ்வூரில் மன்னீஸ்வரர் கோயில், பெருங்கதையில்வரும் அருந்தவச்செல்வி கோயில், பெருமாள் கோயில், ஆகிய கோயில்கள் வரலாற்றுச் சின்னங்களாக உள்ளன. மன்னீஸ்வரர் கோயிலில் ஏராளமான கல்வெட்டுக்கள் உள்ளன. மன்னீஸ்வரர் கோயிலின் தெற்குப் புறச் சுவரில் வீரராசேந்திரன், விக்கிரமசோழன், கோனேரின்மை கொண்டான் ஆட்சியாண்டு கல்வெட்டுக்கள் உள்ளன.

மேலும் இவ்வூரில் கோட்டை கொத்தளங்கள் இருந்ததற்கான மண்மேடுகளும் உள்ளன.

## 4. ஆலத்தூர்

ஆலத்தூர் புஞ்சை புளியம்பட்டி அவிநாசி சாலையில் புஞ்சை புளியம்பட்டிலிருந்து சுமார் 6கி.மீ. தொலைவில் தெற்கில் உள்ளது. இவ்வூர் வணிகர்கள் செல்லும் பெருவழியில் உள்ளதால் சமணர்கள் குடியேறி சமணர்கோயிலைக் கட்டியுள்ளனர். இவ்வூரில் வீரசங்காதப் பெரும்பள்ளி அணியாதழகியார் கோயில், அம்மன் கோயில் ஆகிய கோயில்கள் உள்ளன. வீரசங்காதப் பெரும்பள்ளி அணியாதழகியார் கோயில் கருவறையில், வட்டெழுத்து கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டில் அரசன் பெயர் இல்லை. நீலஞ்செல்லன் தன்மனைவி மகன் ஆகியோர் சார்பாகச் செய்த நிலைக்கல் பற்றி குறிப்பிடுகின்றது. மற்றொரு கல்வெட்டு திருக்களிற்றுப்படியில் உள்ள வட்டெழுத்து கல்வெட்டாகும். அரசன் கோனாட்டான் வீரசோழன் (யா.37) கி.பி.979-80 குறிக்கப்படுகின்றன.

மற்றொரு கல்வெட்டு சிந்தரையர் மகளார் வானவன் மாதேவியார் என்பவரைப்பற்றி கூறுகின்றது. இக்கல்வெட்டு கூறும்

சிந்தையர் சிந்தரப்பாடி என்ற குறுகிய பகுதியை ஆட்சி செய்தவர் ஆவார். இப்பகுதி கன்னட கல்வெட்டில் சிந்தே ராட்டிரம் என்று அழைக்கப்பெற்றது.

## 5. எல்லப்பாளையம்

இவ்வூரில் முதுமக்கள்தாழிகள் (Urnburial) எராளமாக கிடைத்துள்ளன. விவசாயப் பணிக்காக நிலங்கள் சீர்திருத்தம் செய்யும்போது அவைகள் அழிக்கப்பட்ட நிலையில் உள்ளன. இவை கி.மு.மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும்.

## 6. கஞ்சப்பள்ளி

அன்னூரிலிருந்து அவிநாசி செல்லும் சாலையில் உள்ளது. இவ்வூரில் தேனீஸ்வரம் கோயில், திருக்கபாலீஸ்வரமுடையார் கோயில், அம்மன்கோயில் ஆகிய கோயில்கள் உள்ளன. தேனீஸ்வரர் கோயில் மதிலுக்குத் தென்புறம் உள்ள குத்துக்கல்லில் கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டு ஸ்ரீமத்ராமப்ப அய்யர், கஞ்சப்பள்ளி தேனீஸ்வரர் சிவகாமி அம்மனுக்கு நெய்வேத்தியம், திருவிளக்கு மற்றும் திருப்பணிகளுக்காக, நன்செய், புன்செய் நிலங்களும், பணமும், உள்ளூர் வரிகளும் தானமாக வழங்கினார் என்ற செய்தியைக் குறிப்பிடுகிறது.

மேலும் இவ்வூரில் கி.மு.மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்த பெருங்கற்கால சின்னங்களான கல்பதுக்கைகள் (Cairn circle) உள்ளன. இப்பெருங்கற்காலச் சின்னங்கள் உள்ளூர் மக்களால் அழிக்கப்பட்ட நிலையில் உள்ளன.

## 7. கதவக்கரை

அன்னூர் - மேட்டுப்பாளையம் பெருவழியில் அன்னூரிலிருந்து 8 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது. இங்குப் பெருங்கற்சின்னங்களான கல்வட்டங்கள் 25 ஏக்கர் பரப்பில் பரவிக் கிடக்கின்றன. இரும்புக் கழிவுகள் மிகுதியும் கிடைக்கின்றன.

## 8. கரியாக்கவுண்டனூர்

இவ்வூரில் பெருங்கற்கால ''சாம்பல்மேட்டில் முதுமக்கள் தாழி கிடைத்துள்ளது. இவ்வூர் வயாலில், கல்லில் கல்வெட்டு உள்ளது.

சுந்தரப்பாண்டியன் (யா.4) கி.பி.1284 காலத்தில் மன்னியூர் நராயணருக்கு வீரபாண்டிய நன்னூர். தேவதானமாக வழங்கப்பட்டச் செய்தியைச் சொல்கிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ சுந்தரபாண்டிய தேவற்கு யாண்டு4
2. வது குழிமங்கல மா
3. [மாந] வீரபாண்டிய நல்
4. லூர் மன்னியூரா
5. ளுடைய நாயநார் தேவ
6. தானம் இது பந்மா
7. ஹேஸ்வரரட்சை

## 9. கருவலூர்

அன்னூரிலிருந்து திருப்பூர் செல்லும் சாலையில் உள்ளது. இவ்வூரில் வீரராசேந்திர விண்ணகரம் என்ற பெருமாள் கோயில் உள்ளது.

இந்தப் பெருமாள் கோயில் தொன்மையான கோயிலாகும். இக்கோயில் மகாமண்டபம், தென்குமுதப் பகுதியில் கோணேரின்மை கொண்டான். (யா.20 கி.பி.1227) என்று தொடங்கும் சாசனம் உள்ளது. பெருமாள் கோயில், நிர்வாகத்திற்கும் திருவிழா நடப்பதற்கும் புரோசகுளத்தைம், புரோசகுளம் நீர் பாயும் நிலங்களையும் தானமாக வழங்கியுள்ளார்கள்.

## 10. சேவூர்

இவ்வூர் அவிநாசியிலிருந்து நம்பியூர் செல்லும் சாலையில் உள்ளது. இவ்வூரில் கி.பி.16ஆம் நூற்றாண்டைச் சார்ந்த புலிக்குத்தி நடுகல் உள்ளது. இவ்வூரில் கபாலீஸ்வரமுடையார் கோயில், பெருமாள் கோயில், அம்மன் கோயில், விநாயகர் கோயில் ஆகிய கோயில்கள் உள்ளன.

திருக்கபாலீஸ்வரமுடையார் கோயில் மேற்கு சுவரில் வீரபாண்டியனின் பதினைந்தாம் ஆட்சியாண்டு (கி.பி.1263ஆண்டு) கல்வெட்டு உள்ளது. பாண்டியமண்டலத்து முட்டாறநாட்டு மாத்தூர்

வியாபாரி சொக்கன் பெருமன் மகன் பெருங்கருணையாளன் சேவூர் திருக்கபாலீஸ்வரமுடையார் கோயிலில் சுப்பிரமணியரை எழுந்தருளித்து கோயில் கட்டி, அமுது, தீபம் பூஜைப்பொருட்கள் பயன்பாட்டிற்காக வராகன் புள்ளி, குளிகை, பணம் முன்னூற்று இருபது தானமாக அளித்துள்ளார். மற்றொரு கல்வெட்டு அழகப்பெருமான் கோயிலில் அர்த்த மண்டபம் மேற்க்கு பக்க சுவரில் உள்ளது. இம்முடி ராகுத்தராயன் மாதப்ப தண்ட நாயக்கர் குமாரன் இராகுந்த தண்ட நாயக்கர் ஆட்சி காலத்தில் வியாபாரி குன்னத்தூருடையான் அருளாளப் பெருமாள் காழியப்பன் துண்ணத்தினாய்தாரன், அழகப்பெருமாளுக்கு ஒரு விளக்கு எரிக்க கோயில் பட்டரிடம் பணம் கொடுத்ததைப் பற்றிக் குறிக்கின்றது.

சேவூரில் காபாலிக சைவர் செல்வாக்கு பெற்றிருந்தமையால் கபாலீஸ்வரம் என்ற பெயரில் கோயில் கட்டினர். மேலும் அக்சாலை (mint) தங்களுக்கென ஏற்படுத்தி அக்சாலீஸ்வரம் என்ற கோயிலையும் கட்டினார்கள். சேவூரில் கி.பி.12-13 நூற்றாண்டுகளில் அக்கசாலைகள் இருந்துள்ளன. இங்கு கி.பி.10ஆம் நூற்றாண்டைச் சார்ந்த ஐயனார்ச் சிற்பங்கள் உள்ளன. ஊழலை எதிர்த்துப் போராடித் தற்கொலை செய்துகொண்ட முத்து குமாரசுவாமி முதலியார் சமாதி இங்குள்ளது. இது 150 ஆண்டுகளுக்குமுன் கட்டப்பட்டதாகும். இதற்கு ஒரு செப்பேடும் உள்ளது. இவ்வூரில் பெருங்கற்கால சின்னமும் உள்ளது.

## 11. திருமுருகன்பூண்டி

திருமுருகன்பூண்டி அவிநாசியிலிருந்து திருப்பூர் செல்லும் சாலையில் கோவையிலிருந்து சுமார் 48 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் நீலகண்டி அம்மன் கோயில், மாதவிவன ஈஸ்வரர் கோயில், திருமுருகநாதர் கோயில், அம்மன் கோயில் போன்ற கோயில்கள் வரலாற்றுச் சின்னங்களாக உள்ளன.

மேலும் இவ்வூருக்கு சுந்தரர் பதிகம் உள்ளது. சுந்தரர் இவ்வூரை ''மாநகர்'' என்று கூறுகின்றார். இவ்வூரில் வடுகவேட்டுவர்கள் இருந்துள்ளனர். சுந்தரரிடம் கொள்ளையிட்ட செய்தியை ''வேடுபறி'' என்று அழைக்கின்றனர். இந்த வேடுபறியினை விழாவாகக் கொண்டாட நிலக்கொடை அளிக்கப்பெற்றுள்ளமையைப் பற்றிய கல்வெட்டுக்கள்

உள்ளன. இவ்வூரில் 45 கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. அம்மனை ''முயங்குபூண் முலைஅம்மன்'' என்று கல்வெட்டு கூறுகின்றது. இந்தப் பெயர் தேவாரத்திலும் பயின்று வருகின்றது. இங்குள்ள ஒரு கல்வெட்டு அன்னூரை 'மேற்றலைத் தஞ்சாவூரான மன்னியூர் அடிக்கீழ்தளம்' என்று கூறுகின்றது. வேறொரு கல்வெட்டு 'மான்படுகாடும், தேன்படு வரையும், மீன்படுசுனையும், பொன்படுகுட்டமும்' என்று கூறுகின்றது. வேறெங்கும் குறிக்கப்பெறாத பொன்படு குட்டம், இங்குக் குறிக்கப்பெறுகின்றது.

## 12. திருவமுதலியூர்

இவ்வூர் திருப்பூர் குன்னத்தூர் பெருவழியில் திருப்பூரிலிருந்து 14 கி.மீ. தொலைவில் உள்ளது. இங்குப் பத்து ஏக்கர் பரப்பில் பெருங்கற்சின்னங்கள் உள்ளன.

## 13. நடுவச்சேரி

இவ்வூர் அவினாசிக்கு வடக்கில் 5கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூர் சிவன் கோயிலைக் கோதை பிராட்டியீஸ்வர முடையார் கோயில் என்று கல்வெட்டுகள் கூறுகின்றன. பதினைந்து கல்வெட்டுகள் உள்ளன. இவ்வூர் வடக்கிற்பள்ளி என்று அழைக்கப்பெற்றது. இவ்வூரில் பத்துக்கும் மேற்பட்ட நடுகற்கள் உள்ளன. இவை கி.பி.12ஆம் நூற்றாண்டினைச் சேர்ந்தவை. இவ்வூரில் செவளாபுரிஅம்மன் கோயில் உள்ளது. இக்கோயில் 200 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பெற்றிருக்க வேண்டும்.

## 14. பழங்கரை

இவ்வூர் ஈரோடு கோவை நெடுஞ்சாலையில் அவிநாசியிலிருந்து 4 கி.மீ. கிழக்குத் திசையில் உள்ளது. இவ்வூரில் தான்தோன்றீஸ்வரர் கோயில் அம்மன் கோயில் வரலாற்றுச் சின்னங்களாக உள்ளன. திருமுருகன்பூண்டி கல்வெட்டு 'கரையான அடிக்கீழ்தளம்' என்று கூறுவதும் இவ்வூரையே ஆகும். இங்கிருந்த காளிசிலை கோவை அகழ்வைப்பத்திற்குக் கொண்டுவந்து காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது. இவ்வூர் தான்தோன்றீஸ்வரமுடையார் கோயில் கருவறையில் வடக்குப்

பக்கச் சுவரில் கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டின் அரசன் வீரராஜேந்திரன் (யா.7. கி.பி.1214).

இக்கல்வெட்டு பழங்கரைநல்லூர் தான்தோன்றியீஸ்வரமுடையார்க்கு வாணிகமடிகையர் நாற்பத்தெட்டுக்கலம் நெல் அளித்தனர் என்ற செய்தியையும் கூறுகின்றது. மேலும் இக்கோயிலின் கருவரை மேற்குப் பக்க சுவரில் வீரராசேந்திரனின் (யா.25) கி.பி.1232ஆம் ஆண்டு கல்வெட்டும் கருவறை மேற்குக் குமுதத்தில் (கோனேரின்மை கொண்டான்) வீரராசேந்திரன் (யா.7) காலத்து கல்வெட்டும் இக்கோயிலில் முன் உள்ள குத்துக்கல்லில் அச்சுதராயர் கி.பி.1540 ஆண்டுக் கல்வெட்டும் உள்ளன.

## 15. பெரியகானூர்

இவ்வூரில் வீரராசேந்திரனின் கல்வெட்டு ஒன்று உள்ளது. இக்கல்வெட்டில் இவ்வூர்ப் பெயர் கானூர் என்றே அழைக்கப் பெறுகின்றது. கல்வெட்டில் சிவன் கோயிலுக்குக் கொடை அளிக்கப் பெற்ற செய்தி கூறப்பெறுகின்றது. இங்கு ஒரு பழைய குளமும் உள்ளது. இவ்வூர் வட பரிசாரநாட்டில் இருந்துள்ளது. கருவலூரிலிருந்து 10 கி.மீ. தொலைவில் உள்ளது.

## 16. முரியாண்டம்பாளையம்

அவிநாசி ஈரோடு பெருவழியில் அவிநாசியிலிருந்து 8 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது. இங்கு பெருங்கற்சின்னங்கள் உள்ளன. இவற்றைப் பாண்டியர் குழி என்று அழைக்கின்றனர். இப்பெருங்கற்சின்னங்கள் உள்ள இடத்திற்குத் துண்டுகாடு என்று பெயர்.

## 17. மொக்கனீசுரம்

இவ்வூர் குடகோட்டூர் என்றும் அழைக்கப்பெற்றுள்ளது. இங்குள்ள இறைவனை மொக்கனி என்று மாணிக்கவாசகர் குறிப்பிடுகின்றார். சேவூரிலிருந்து 10கி.மீ. தொலைவில் உள்ளது. இங்கு ஒரு கன்னட கல்வெட்டும் உள்ளது.

### 18. மொண்டிபாளையம்

இவ்வூர் சேவூரிலிருந்து அன்னூர் வரும் வழியில் உள்ளது. இவ்வூரில் பெருங்கற்காலச் சின்னங்கள் (Dolmen) உள்ளன. இந்தப் பெருங்கற்காலச் சின்னங்கள் கி.மு.மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும்.

### 19. ராக்கியாபாளையம்

இவ்வூர் அவிநாசி வட்டத்தில் திருப்பூர் செல்லும் பாதையில் உள்ளது. இவ்வூர் ஊராட்சியினர் சாக்கடைக் கால்வாய் தோண்டும்போது ஊரின் வடபுறம் பெருங்கற்காலத்தை சார்ந்த கருப்பு, சிவப்பு (Black and Red Ware) மட்பாண்டங்களைக் கண்டெடுத்தனர். மண்பாண்டங்கள் கிண்ணம், தட்டு, தாங்கி போன்ற பலவகைகள் கிடைக்கப்பெற்றுள்ளன. மட்பாண்டங்கள் கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும்.

### 20. வேலாயுதம் பாளையம் (ராமநாதபுரம்)

இவ்வூர் கருவலூர் அருகில் ஒரு கி.மீ.தொலைவில் உள்ளது. இவ்வூரில் நாயக்கர் காலத்துக் கோயில் ஒன்று சிதைந்த நிலையில் உள்ளது. இக்கோயிலில் உள்ள கல்தூண்களும் சிற்பங்களும் நாயக்கர் காலக் கலைக்குச் சிறந்த சான்றுகளாகும். இக்கோயில் மிகப்பெரிய அளவில் கட்டப்பட்டதாகும்.

## உடுமலை வட்டம்

### 1. கடத்தூர்

கடத்தூர் உடுமலை வட்டத்தில் உடுமலையிலிருந்து பழநி செல்லும் சாலையில் மடத்துக்குளத்திலிருந்து பிரிந்து செல்லும் வழியில் உள்ளது. இவ்வூர் ‘‘கரைவழிநாட்டுக் கடற்றூரான ராசராசநல்லூர்’’ என்று கல்வெட்டில் அழைக்கப்பெறுகின்றது.

இவ்வூரில் திருமருதுடையார் கோயில், அம்மன் கோயில் வரலாற்றுச் சின்னங்களாக உள்ளன. மேலும் இங்குப் படைப்பிரிவுகள்

நிறுத்திவைக்கப்பெற்றிருந்தன. கேரளத்திறகும் இவ்வூருக்குமிடையிலான தொடர்பு பற்றிய கல்வெட்டுகள் கிடைக்கின்றன

கொங்குவிடங்கீஸ்வரன் கோயில் கருவறை மேற்குப் பக்கச் சுவரில் கல்வெட்டு ஒன்று உள்ளது. வீரராசேந்திரனுடைய; கி.பி.1224ஆம் ஆண்டைச்சார்ந்ததாகும். வீரராஜேந்திரன் இருங்கோளன் சோழமண்டலத்து வரந்தருவான் அருளாளப்பெருமாளான அஞ்சாத கண்ட ராயன் கடற்னூரில் கொங்கவிடங்கீஸ்வரர் கோயிலில் எழுந்தருளுவித்த, சுப்பிரமணியன் பிள்ளையார்க்கு நான்கெல்லைக்குட் பட்ட வாளை நிலம் தானமாக வழங்கினான் என்ற செய்தி இதனில் உள்ளது.

இக்கோயிலில் கோனேரின்மை கொண்டான் என்று தொடங்கும் கல்வெட்டுக்கள் மிகுதியாக உள்ளன. திருமருதுடையார் கோயில் மகாமண்டப வடக்குச் சுவரில் வீரராசேந்திரனின் (யா.19) கி.பி.1217 ஆம் ஆண்டு கல்வெட்டு உள்ளது. கடற்றூரான இராசராச நல்லூர் கொடிக்ாகரைத் தொழு சோழன்வீரசோழஇருங்கோளன், திருமருதுடையார்க்குத் திருமாளிகை பிள்ளையார் நெய்வேத்திய அமுதுபடிக்கும் நான்கு எல்லைக்குட்பட்ட கலமான முக்குறுனி விதைநிலம் தானமாகக் கொடுத்தார் என்ற செய்தி இதளால் அறியப்படுகின்றது. மேலும் இவ்வூரில் உள்ள சர்க்கரைநோய்பற்றிய கல்வெட்டு (பிரமேகம்) குறிப்பிடத்தக்கது. இக்கல்வெட்டு 700 ஆண்டுகளுக்கு முறபட்டது.

## 2. கண்ணாடிப்புத்தூர்

இவ்வூர் கொழுமத்திலிருந்து மடத்துக்குளம் போகும் ஊரகப்பெருவழியில் அமைந்துள்ளது.இங்குள்ள பெருமாள் கோயிலில் பத்துக் கல்வெட்டுகள் உள்ளன. வீரசோழன், வீரராசேந்திரன், மூன்றாம் விக்கிரப சோழன், வீரவல்லாளன் ஆகிய மன்னர்கள் கல்வெட்டுகள் பொறிக்கப்பெற்றுள்ளன. பெரும்பாலான கல்வெட்டுகள் சிதைந்துள்ளன. இக்கல்வெட்டுகளில் மன்னறை, மன்றாட்டு, 'கோயில் காணியுடைய சிவப்பிராமணர்கள் போன்ற சொற்கள் ஆங்காங்கே

பயின்றுவரக் காணலாம். இவ்வூரில் கல்வெட்டின்றி அத்திகோசத்தார் கல் ஒன்று கிடைத்துள்ளது.

### 3. கல்லாபுரம்

இவ்வூர் அமராவதி ஆற்றின் தென்கரையில் அமராவதி அணையிலிருந்து 5 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூர் பற்றிக் கொழுமம் கல்வெட்டு ஒன்றும் கூறுகின்றது. இவ்வூரில் இடைக்காலத்திற்குரிய தொல்பொருட்கள் மிகுதியும் கிடைக்கின்றன. அவற்றில் குறிப்பிடத்தக்கவை அம்மிக்கல், உரல், இடைக்காலப் பானை ஓடுகள் போன்றவை ஆகும். இவ்வூர் அருகில் உள்ள மலைப்பகுதியில் திப்புசுல்தான் கோட்டை ஒன்று உள்ளது. கல்லாபுரம் இடைக்காலத்தில் சிறந்த வாணிகத் தலமாக விளங்கியது.

### 4. குடிமங்கலம்

இவ்வூரில் கம்மாளர் உரிமைப்பற்றிப் பேசும் கல்வெட்டு ஒன்று கிடைத்துள்ளது. குடிமங்கலம், கொழுமம் கல்வெட்டுகளில் குறிக்கப் பெறுகின்றது. நிலக் கொடை பற்றிக் கூறும் விஜயநகரர் காலத்துக் கல்வெட்டு ஒன்றும் இங்குள்ளது.

### 5. குமரலிங்கம்

அமராவதி ஆற்றின் மேல்கரையில் இவ்வூர் அமைந்துள்ளது. குமணலிங்கம் என்பதன் திரிபே குமரலிங்கம் என்பர். இம்முடிவு உண்மையின் அடிப்படையில் ஏற்பட்டது அன்று. கல்வெட்டில் இவ்வூர் குமரங்க பீம சதுர்வேதி மங்கலம் என்று அழைக்கப் பெறுகின்றது. இவ்வூரில் இரவிதத்தன் என்பவனுடைய செப்பேடு ஒன்று கிடைத்துள்ளது. மேலும் நாயக்கர் காலப் பட்டயங்களும் இவ்வூர் பிராமணர்களிடம் இருந்தன. இவ்வூர் கரியவரதராஜர் பெருமாள் கோயில் கல்வெட்டு ஒன்று வீரராசேந்திரனின் 25ஆம் ஆட்சியாண்டுடன் சக ஆண்டு 1153ம் குறிக்கும் தன்மையைக் காணலாம். மேலும் மூன்றாம் வீரசோழன் தான்பிறந்த நாளும், சூரியகிரஹணமும் ஒரே நாளில் சேர்ந்து வந்தமையால் ஏற்பட்ட பிரம்மஹத்தி தோஷத்தைப் போக்க இப்பெருமாள் கோயிலுக்கு

நிலக்கொடை அளித்துள்ளான். இக்கோயிலில் உள்ள இருபதுக்கும் மேற்பட்ட கல்வெட்டுகள் அந்நாளில் இவ்வூர் நன்செய்நிலம் சூழ்ந்த வளமிக்க ஊராக விளங்கியதைக் காட்டுகின்றன. கரியவரதராஜ பெருமாள் கோயிலுக்கு இரணியமுட்ட நாட்டிலிருந்து பொன்கொடை நிலக்கொடை அளிக்கப்பெற்ற செய்தி கூறும் கல்வெட்டு ஒன்று உள்ளது. ஆற்றோரத்தில் வெங்கடரமண சாமிகோயில், காசி விசுவநாதர் கோயில் ஆகிய கோயில்கள் உள்ளன. இவ்வூரில் கரிகால சோழதேவன் என்ற வீரகேரள மன்னன் கல்வெட்டுகள் உள்ளன.

## 6. கொழுமம்

இவ்வூர் உடுமலைப்பேட்டை பழனிப் பெருவழியில் உள்ளது. இவ்வூரில் வரலாற்றுச சின்னங்களாக வீரசோழீசுவரர் கோயில், கரிவரதராஜபெருமாள் கோயில், அம்மன் கோயில், மாரியம்மன் கோயில் ஆகியவை உள்ளன.

கொழுமம் வீரசோழீஸ்வரர் கோயில் கட்டியதற்கான காரணத்தை இக்கோயில் கல்வெட்டு குறிப்பிடுகிறது. மூன்றாம் வீரசோழனின் (1168-96) பிறந்தநாளும் சூரியகிரஹணமும் ஒரே நாளில் அமைந்துவிட்டமையால் ஏற்பட்ட பிரம்மஹத்தி தோசத்தைப் போக்க இக்கோயில் கட்டப்பெற்றுள்ளது.

இவ்வூரில் உள்ள வீரச்சோழீஸ்வரர் கோயில் மகாமண்டபத்தில் கல்வெட்டு உள்ளது. கல்வெட்டு கோனேரின்மை கொண்டான் (வீரராசேந்திரன்) காலத்தைச் சார்ந்ததாகும். கல்வெட்டு செய்தியானது கோனேரின்மை கொண்டான், சித்திரை திங்களில் பெற்ற மிகப்பெரிய வெற்றியைக் கொண்டாட தென்கொங்கின் உட்பிரிவு நாடுகளின் சாமந்தர்களும், கருமஞ்செய்வர்களும், ஊரார்களும், நெல்லும் காசும், கொழுமம் வீரசோழீஸ்வரமுடையார் கோயில் தானத்தாரிடம் வழங்க ஆணைபிறப்பித்தான் என்பதாகும்.

இவ்வூரில் நித்தம் நின்றாடுவார் கோயில் என்றொரு கோயில் உள்ளது. இக்கோயிலுக்கு வந்த வருவாய் பெரிய வடுகன் கலகத்தால் தப்பியது (தடைபட்டது). அந்த வருவாயினை வீரராசேந்திரன் தன்

45வது ஆட்சி ஆண்டில் திரும்பவும் கிடைக்கச் செய்கிறான். வீரராசேந்திரனின் மற்றொருகல்வெட்டு 'நாம் படையெற்றுகையில் கரைவழி நாடும் கொழுமமும் அழிவுபட்டமையில் நமக்குப் பிராயச் சித்தமாக வைகாவிநாட்டு இரட்டையம்பாடி' என்று குறிப்பிட்டு ஊரைத் தேவதானமாக அளித்தசெய்தியைச் சொல்கிறது. இவ்வூரில் பாரதம் படிக்கக் கொடை அளிக்கப்பெற்ற செய்தி மற்றொரு கல்வெட்டில் குறிக்கப்படுகிறது.

## 7. சோமவாரப்பட்டி

இவ்வூர் தாராபுரம், பொள்ளாச்சி சாலையில் பொள்ளாச்சியிலிருந்து சுமார் 20 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் பெருங்கற்காலச் சின்னங்கள் உள்ளன. இவ்வூர் சிவன் கோயிலின் கருவறையில் வடக்கு மற்றும் மேற்கு குமுகத்தில் கல்வெட்டு உள்ளது. கல்வெட்டு பரகேசரி வீரசோழன் (யா3) காலத்தைச் சார்ந்ததாகும். இவ்வூர் நல்லூர்க்கா நாட்டைச் சேர்ந்தது. இங்கு திசையாயிரத்தைந்நூற்றுவர் வாணிகத்தின் பொருட்டு நிலை பெற்றிருந்தனர்.

நல்லூர்க்கா நாடு, காவடிக்கா நாடு, வாயரைக்கா நாடு, போன்ற நாட்டுப் பிரிவுகளிலும், இடிகரை, கூடலூர், துடியலூர், சூரலூர் என்ற அரிய பிராட்டி நல்லூர் போன்ற ஊர்களிலும் கோயில் பூஜைகள் செய்ய ஆதிசைவர்களிடம் முன்பு, கொடைகள் கொடுக்கப்பட்டிருந்தன. ஆனால் அக்கொடைகள் இடையில் தடைப்பட்டுக் கோயில் பூஜைகள் நடைபெறவில்லை. எனவே அக்கொடைகளைச் சிவ பிராமணர்களிடம் கொடுத்து அக்கோயில்களில் மீண்டும் பூஜைகள் தடைப்படாமல் நடத்த மன்னன் ஆணை பிறப்பித்துள்ளான். இவ்வூரின் பழமையான பெயர்''அமரபுயங்கரபுரம்'' இவ்வூரிலுள்ள காளியம்மன் நாயக்கர் காலத்தைச் சார்ந்ததாகும்.

## 8. சோழமாதேவி

இவ்வூர் உடுமலை வட்டத்திற்குள் மடத்துக்குளத்திலிருந்து கடத்தூர் போகும் ஊரகப் பெருவழியில் மடத்துக்குளத்திலிருந்து 7 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் ஈஸ்வரன் கோயில் , அம்மன்

கோயில் ஆகிய கோயில்கள் உள்ளன. ஈஸ்வரன் கோயிலில் இருபது கல்வெட்டுகள் உள்ளன. இங்குக் கொங்குச் சோழர், பாண்டியர், போசனர் ஆகிய மரபினர் கல்வெட்டுகள் பொறிக்கப்பெற்றுள்ளன. இக்கல்வெட்டுகளில் வீர ராசேந்திரன் விக்கிரமசோழன், வீர பாண்டியன் ஆகிய மன்னர்கள் பெயர்கள் உள்ளன. இக்கல்வெட்டுகளில் மன்னறை, மன்றாட்டு, தேவதானம், கோயில்காணி ஆட்சி, ஆகியவை பற்றிக் கூறப்பெறுகின்றது. இவ்வூரில் அம்மன் கோயிலில் அமர்ந்த நிலையில் ஒரு பெண் தேவதை மாடத்தில் இருப்பது போல் வடிக்கப்பெற்றுள்ளது. இரண்டு கைகளிலும் அல்லி மலர் வடிக்கப்பெற்றுள்ளது. இது பூதேவியைக் குறிப்பதாகும். இதுபோன்ற உருவம் இரண்டு கடத்தூரிலும் உள்ளன. இவை கி.பி.12-13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவையாகும்.

## 9. தழிஞ்சி

அமராவதி அணையின் உள்புறத்தில் 5.கி.மீ. தொலைவில் உள்ளது. இங்குள்ள சிவன் கோயில் முழுதும் அழிந்துவிட்டது. சில கல்வெட்டுகள் உடைந்த நிலையில் கிடைக்கின்றன. இவ்வூர் தழிஞ்சி என்றே கல்வெட்டுகளில் குறிக்கப்பெறுகின்றது. அதிசெய சோழன் என்ற வீரகேரள மன்னனின் கல்வெட்டு ஒன்று முழுமையாகக் கிடைக்கின்றது. தழிஞ்சி மீமீசல் நாட்டுப்பிரிவுக்குக்குட்பட்ட ஊராக விளங்கியது.

## 10. திருமூர்த்தி மலை

இது உடுமலை பேட்டைக்கு மேற்கில் 15 கி.மீ. தொலைவில் உளளது. இங்கு அமணலிங்கேஸ்வரர் கோயில் என்ற சிவன் கோயில் உள்ளது. இதற்குத் திருமூர்த்தி என்றும் பெயர் உண்டு. இங்குள்ள பாறைத் தீர்த்தங்கரர் உருவம் படுக்கை நிலையில் உள்ளது. இவ்வுருவத்தில் தீர்த்தங்கரர் உருவம், இருபக்கமும் சாமரை வீசுவோர் என மூன்று உருவங்கள் இருப்பதால் இக்கோயில் திருமூர்த்தி கோயில் என்று பெயர் பெற்றது. இக்கோயில் சௌண்டசயோகினி கோயில் என்றும் கருதப்பெற்றது. வெல்ஹவுஸ் என்ற தொல்லியலாளர் கூறிய கருத்து தொடர்ந்து தொல்லியல் துறையில் செல்வாக்குப் பெற்று வருகின்றது. ஆனால் அங்கு யோகினி கோயில் ஏதும் இல்லை

என்பது குறிப்பிடத்தக்கது. திருமூர்த்தி மலை அருகில் கிடைக்கின்ற இருபதுக்கும் மேற்பட்ட நடுகற்கள் தொகுக்கப்பெற்று பொதுப்பணித்துறை சுற்றுலா மாளிகைக்கு முன் வைக்கப்பெற்றுள்ளன.

## 11. வஞ்சிப்புரம்

இவ்வூர் உடுமலைவட்டத்தில், உடுமலையிலிருந்து சுமார் 10 கி.மீ. தொலைவில் வடக்கில் அமைந்துள்ளது. இவ்வூரில் பிரசித்திப் பெற்ற திரௌபதியம்மன் கோயில் உள்ளது. இக்கோயிலில் மூலவர் சிலையோ அல்லது வேறு எந்த சிலைகளோ இல்லை. இக்கோயிலில் உள்ள் கற்சிற்பங்கள் இக்கோயிலின் தென்புறம் மாணிக்கக்கவுண்டரின் தென்னந்தோப்பில் உள்ளன. இங்கு திரௌபதையம்மன் கோயில், பஞ்சபாண்டவர் சிலைகளான 1) தருமர்கையில் கத்தியுடனும் 2) பீமன் கையில் கதாயுதத்துடனும் 3) அர்ச்சுணன் கையில் வில் அம்புடனும் 4) நகுலன், சகாதேவன் இருவரும் அமர்ந்த நிலையிலும் 5) திரௌபதை வலதுகையில் தாமரை மொட்டுடனும், இடது கை இடுப்பிலும் உள்ள நிலையில் கற்சிற்பங்களாக உள்ளன. இந்தக் கற்கிற்பங்களுடன் உதிரிச்சிற்பங்களாக நாகராசா சிற்பங்களும் உள்ளன. இந்தச் சிற்பங்கள் திரௌபதை அம்மன் கோயில் சிலைகளாகும். சிற்ப உருவ அமைப்பை நோக்கும்போது இவை கி.பி.17 அல்லது கி.பி.18ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாக இருக்கலாம்.

## 12. வடக்குப் பூதிநத்தம்

இவ்வூர் ஆனை மலையிலிருந்து உடுமலை பேட்டை செல்லும் வழியில் உடுமலைப்பேட்டையிலிருந்து 5கி.மீ. தொலைவில் வடமேற்கே உள்ளது. இவ்வூரில் பூமிக்கடியில் மண்கலையத்தில் ரோமானிய வெள்ளி நாணயங்கள் 1500 கிடைத்துள்ளன. இத்துடன் சில அணிகலன்களும் கிடைத்துள்ளன.

## 13. ருத்திரபாளையம்

இவ்வூர் உடுமலைவட்டத்தில் கொழுமத்திலிருந்து நான்கு கி.மீ. மேற்கில் உள்ளது.

இவ்வூரில் இடங்கை சாதியர்.கல்வெட்டு உள்ளது. இது விக்கிரமசோழன் (கொங்கு சோழன்) காலத்துக் கல்வெட்டாகும். கரைவழி நாட்டு இராசராச வளநாட்டில் பிரமதேயம் ஸ்ரீ உலகுடைய பிராட்டி சதுர் வேதிமங்கலம் என்ற புதிய ஊர் அமைத்து அவ்வூரை பாதுகாக்கும் பொறுப்பை இடங்கை தொண்ணூற்றெட்டுச் சாதியினரிடம் கொடுத்து இவ்வூரில் வரும் வரிகளை இவர்களே பெற்றுக்கொள்ளவும் அரசன் ஆணை பிறப்பித்தான் என்ற செய்தியை அறிய முடிகின்றது. மேலும் சில கொங்குச் சோழன் கல்வெட்டுகள் கிடைக்கின்றன. இக்கல்வெட்டு கோவை அகழ்வைப்பகத்தில் உள்ளது.

## 14. ஜோதிபுரம்

உடுமலையிலிருந்து தாராபுரம் செல்லும் வழியில் 10கி.மீ.யில் பிரிந்து வடக்கே வரும் பெருவழியில் 7 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது. இங்கு கி.பி.12ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த மந்திரக்கல் உள்ளது. இதில் முக்கோணமும் தாமரையும் வரையப்பெற்றுள்ளன. சமஸ்கிருத ஸ்லோகம் உள்ளது.

# கோவை வட்டம்

## 1. இக்கரை போளுவாம்பட்டி

இக்கரை போளுவாம்பட்டி கோவை வட்டத்தில், கோவையிலிருந்து சுமார் 20 கி.மீ. தொலைவில் மேற்கே நொய்யல் நதிக்கரையிலும் உள்ளது. இவ்வூரில் கோட்டைக்காடு என்ற பகுதியில் 1980ல் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையினரால் அகழாய்வு பணி மேற்கொள்ளப் பட்டது. இந்த அகழாய்வில் சுடுமண்ணால் செய்யப்பட்ட முத்திரை கிடைக்கப்பெற்றுள்ளது. சுடுமண் முத்திரையில், வில், அம்பு, புலி, மீன் உருவங்களுடன் ''வர்மனஹ'' என்ற பெயர் காணப்படுகின்றது. இது அரசனின் பெயராக இருக்கலாம் என்று கருதப்படுகின்றது. இவ்வகழ்வாய்வில், அரிய கல்மணிகளும், சுடுமண்ணலான மணிகள், தங்கத்தினாலான வளையல்கள், விலங்கின எலும்புகள் ஆகியவை கிடைக்கப்பெற்றுள்ளன. போளுவாம்பட்டி அகழாய்வில் கி.பி.5 அல்லது 6ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இயக்கன்

என்னும் சிறு தெய்வத்தின் சுடுமண் பொம்மைகள் பல கிடைக்கப்பெற்றுள்ளன. கி.பி. 3ஆம் நூற்றாண்டினைச் சார்ந்த முத்திரை காசுகள் கிடைத்தன.

இவ்வூர் திருநாகீஸ்வரமுடையார் கோயிலில், வீரராசேந்திரனின் (யா.20) கி.பி.1227ஆம் ஆண்டு கல்வெட்டு உள்ளது. அமரபுயங்கநல்லூர் மன்றாடி விழுமி பட்டியான் இவ்வூர் ஆளடையார் திருநாகீஸ்வமுடையார்க்குக் கொடை அளித்ததைப்பற்றி இக்கல்வெட்டுச் செய்தி கூறுகின்றது. இவ்வூரில் கி.பி.8ஆம் நூற்றாண்டு செங்கல் கட்டடங்கள் இருந்தன. இரண்டு பானை ஓடுகள் சிறப்பானவை. 1.'ரன் கொற்றி' என்ற எழுத்துப் பொறிப்புள்ளது. இது கி.பி.3ஆம் நூற்றாண்டு பிறகாலத்தமிழ் - பிராமி வகையைச் சேர்ந்தது. 2. 'ங்குப்பை விற்றி குழி' அல்லது 'ங்குசபைவிற்றி குழி' என்ற எழுத்துப் பொறிப்புள்ளது. இது கி.பி.5-6ஆம் நூற்றாண்டு வட்டெழுத்தாகும்.

## 2. இடிகரை

இவ்வூர் கோவையிலிருந்து சுமார் 25 கி.மீ. தொலைவில் வடபுறத்தில் உள்ளது. இவ்வூரில் வில்லீஸ்வரமுடையார் கோயில், பெருமாள் கோயில், மற்றும் விநாயகர் கோயில் போன்ற வரலாற்றுச் சின்னங்கள் உள்ளன. இவ்வூரில் வில்லீஸ்முடையார் கோயில் மேற்கு புறம் பழமையான குளம் ஒன்றும் சிற்ப வேலைப்பாடுகளுடன கூடிய படித்துறைகளை பெற்றுள்ளது.

இடிகரை கோயிலில் வீரபாண்டியனின் மெய்க்கீர்த்தி ஒன்று பொறிக்கப்பட்டுள்ளது. அது சமஸ்கிருதத்தில் அமைந்துள்ளது.

இவ்வூர் வில்லீஸ்வரர் கோவில் கருவறைச் சுவரில் உள்ள வீரபாண்டியன் 10ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு மூலம், வடபரிசாரநாட்டு இடிகரை வெள்ளாளன் கொற்றந்தைகூட்டத்து மிலசந்த பெருமாள் வில்லிஸ்வரமுடையார் கோயிலுக்கு விளக்கெரிக்க பத்து வராகன்பணத்தை இக்கோவில் சிவப்பிரமாணன் காசுவ கோத்திரத்து சித்திர மேழிபட்டனிடம் கொடுத்துள்ளான் என்ற செய்தி அறிய முடிகின்றது. மேலும் வில்லீஸ்வரரமுடையார் கோவிலில், வீரவல்லாளன் கல்வெட்டு, விக்கிரமசோழன் (கொங்கு சோழன்) (யா-3) கல்வெட்டு,

சுந்தரபாண்டியன் (யா-21) கல்வெட்டு பரகேசரி கோனேரின்மை கொண்டான் கல்வெட்டு ஆகிய கல்வெட்டுக்களும் உள்ளன.

## 3. ஒற்றைக்கால் மண்டபம்

இவ்வூர் கோவை பொள்ளாச்சி நெடுஞ்சாலையில் சமார் 10கி.மீ. தென்கிழக்கில் உள்ளது. இவ்வூரில் அம்மன் கோயில், நாராயணப் பெருமாள் கோயில் வரலாற்றுச் சின்னங்களாக உள்ளன.

நாராயணப்பெருமாள் கோவிலுக்கருகில் உள்ள தனிக்கல்லில் கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டில் அரசன், ஆண்டு இல்லை, நவகோடி நாராயணப்பெருமாள் கோவிலுக்கு வழிப்பட்டிற்க்காக பூஜை பொருள்களான சந்தனம், பாக்கு வெல்லம்போன்ற பொருள்கள் தானமாக வழங்கப்பட்டுள்ள செய்தியை அதில் காண்கிறோம். இங்குப் பெருங்கற்சின்னங்கள் உள்ளன.

## 4. கோயம்புத்தூர்

கோவை நகரத்தில் கோட்டை சங்கமேஸ்வரர் கோயில், மற்றும் கோணியம்மாள் கோயிலும் வரலாற்று சின்னங்களாக உள்ளன. விஷ்ணு கோபன் என்ற கங்கமன்னன் பெயராலும் இவ்வூர்ப் பெயர் ஏற்பட்டிருக்கலாம்.

சங்கமேஸ்வரர் கோயில் கருவறை வடக்கு ஜகதியில் விக்கிரமசோழன் (யா 12) காலத்து கல்வெட்டு உள்ளது. கல்வெட்டு செய்தி பேரூர் நாட்டுக் கோவன்புத்தூர் என்ற வீரகேரள நல்லூர் சங்கீஸ்வர முடையார் கோயில் சிவப்பிராமணன் வீரநாராயண சைவமாமுனி இவ்வூர் வெள்ளாளன் பயிரியர் கூட்டத்து வீரசோழகங்கனிடம் விளக்கு ஒன்று எரிக்க கொடை பெற்றுள்ளான். கோயம்புத்தூரில் இருந்த ஒரு நிலப்பிரபு தொல்லியல் துறைத்தலைவர் கன்னிங்காமிடம் பத்துக்கு மேற்பட்ட செப்புச் சிலைகளையும் உரோமாணியக் காசுகளையும் கொடுத்துள்ளார். செப்புச் சிலைகளில் கிராதன், திருமால், இராமன் இலக்குமணர், அனுமன் ஆகியவை குறிப்பிடத்தக்கவை. இவை அனைத்தும கேரளமரபில் செய்யப்பெற்றவை. கி.பி.10ஆம் நூற்றாண்டிற்குரியவை.

மேலும் இக்கோயிலில் அதிராராஜராஜ கண்டியதேவன், வீரநாராயணன் (வீரகேரளன்) (யா-6) வீரராசேந்திரன் (கொங்கு சோழர்) (யா-23) போன்ற அரசர்களின் கல்வெட்டுக்களும் உள்ளன.

## 5. கோயில் பாளையம்

கோவில்பாளையம் கோவையிலிருந்து வடக்கே 20 கி.மீ. தொலைவில் சத்தியமங்கலம் சாலையில் உள்ளது. இவ்வூர் கல்வெட்டுகளில், கவையன்புத்தூர் என்று அழைக்கப்பெறுகிறது. இவ்வூரில் வரலாற்றுச் சின்னங்களாக காலகாலேஸ்வரர் கோயில், கவை காளியம்மன் கோயில், மற்றும் சமணர்சிலை ஆகியன உள்ளன. இவ்வூர் பெருங்கற்சின்னத்தில் சோளம் கிடைத்துள்ளது.

காலகாலேஸ்வரர் கோயில் நடுமண்டபத்தின் நுழைவு வாயிலில் வலப்புறம் கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டின் செய்தியானது வடபரிசார நாட்டுக் கவையன்புத்தூர் ஊரும் ஊராளிகளும் அரசன் நன்மைக்காக வாணியக்குடிகளிடமிருந்து எண்ணெய் பெற்று கால கால தேவர்க்குச் சந்தியா தீபம் எரிக்க வேண்டும் என்பதாகும்.

கவையகாளியம்மன் கோவில் முன்புறமுள்ள கல்லில் கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டின் அரசன் விஜயநகரமன்னன் அச்சுதராயன் (கி.பி.1532) காலம் நாலூர்பற்று நாட்டு கவையன்புத்தூர் வெள்ளளார்பிள்ளந்தை கூட்டம் இராக்குத்த பெருமாள் பிள்ளைகளும் ஒன்றாகக் கூடி கவைகாளியம்மன் முகமண்டபத்தை கட்டியுள்ளனர் என்ற செய்தியை இதனால் அறியமுடிகிறது. இங்குள்ள வாதப்பிள்ளையார் கோயில் தொல் பழங்கால சந்தி வழிபாட்டின் எச்சம் எனலாம்.

## 6. சிங்கநல்லூர்

இவ்வூர் சோழன் பூர்வாட்டயத்தில் கூறப்பெறும் கரிகாலனுடன் தொடர்புபடுத்திக் கூறப்பெறுகின்றது. கரிகாலன் இங்கு வளர்ந்தான் என்றும், சோழர் மரபில் முடிசூட ஆளில்லாத போது பட்டத்து யானை இங்கு வந்து அவனுக்கு மாலையிட்டது என்றும் கூறப்பெறுகின்றது. சிங்கநல்லூர் சிங்கம்மாள் என்பவள் பெயரால்

உருவானது என்பர். இவ்வூரில் நடைபெறும் கூத்தாண்டை (அரவான்) விழாப் பலபண்பாட்டுக்கூறுகளை உள்ளடக்கி நின்கின்றது. இங்குள்ள உலகளந்த பெருமாள் கோயிலில் உள்ள ஓங்கி உலகளந்த உத்தமனின் செப்புத்திருமேனி உலகம் போற்றும் கலைப்படைப்பு; கி.பி.8ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது.

## 7. சுண்டக்காய்முத்தூர்

இவ்வூர் கோவை வட்டத்தில் கோவையிலிருந்து சுமார் 20 கி.மீ. தொலைவில் தென்புறம் உள்ளது. இவ்வூரில் உள்ள அய்யாசாமி மலையில் சோழர்காலத்து இராசகேசரி பெருவழியும், இராசகேசரி பெருவழியை குறிக்கும் கல்வெட்டுப் பாறையும் உள்ளன.

இது முதலாம் ஆதித்த சோழன் காலத்துக் கல்வெட்டாகும். இக்கல்வெட்டு கேரளத்திற்குச் செல்லும் பெருவழியையும் குறிப்பிடுகின்றது.

இக்கல்வெட்டு தமிழ் மற்றும் வட்டெழுத்தில் உள்ளது. வட்டெழுத்துப் பகுதியில் ''ஸ்வஸ்திஸ்ரீ கோ இராசகேசரிப் பெருவழி'' என்றும், அதனை அடுத்துக் கீழ்வரும் வெண்பாப் பாடலும் உள்ளன.

*திருநிழலு மன்னுயிருஞ் சிறந்த மைப்ப*
*ஒருநிழல் வெண்டிங்கள் போலோங்கி - ஒருநிழல்போல்*
*வாழியர் கோச்சோழன் வளங்கா விரிநாடன்*
*கோழியர் கோக்கண்டன் குலவு.*

தமிழ்ப் பகுதியில் ''ஸ்வஸ்திஸ்ரீ கோ இராசகேசரிப் பெருவழி'' என்று மட்டும் உள்ளது.

## 8. துடியலூர்

துடியலூர் கோவை மேட்டுபபாளையம் பெருவழியில் கோவையிலிருந்து சுமார் 10 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் வரலாற்றுச் சின்னமாக விருந்தீஸ்வரர் கோயில் உள்ளது. இக்கோயில் கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம் கருவறையின் மேல் திராவிடக் கட்டிடக் கலைப்பாணியில் விமானம் உள்ளது. விருந்தீஸ்வரர் கோவிலில் பல கல்வெட்டுகள் உள்ளன.

இக்கோயிலில் கருவறையின் வடக்குப் பட்டியில் வீரப்பாண்டியன் (யா-6) காலத்துக் கல்வெட்டு உள்ளது. கல்வெட்டு இக்கோயிலுக்கு நந்தா விளக்கு எரிக்க வராகன் பணம் கொடை அளித்ததைக் குறிக்கின்றது.

மேலும் இக்கோயிலில் பரகேசரி திரிபுவனச் சக்கரவர்த்தியின் (யா-3) காலத்துக் கல்வெட்டுக்கள், விக்கிரம சோழன் வீரசோழன் (யா-26) காலத்துக் கல்வெட்டுக்கள் உள்ளன. இவ்வூர்ப்பெயர்துடியன் என்ற இருளன் பெயரால் ஏற்பட்டது என்பர்.

## 9. தேவராயபுரம்

இவ்வூரில் 150ஆண்டுகளுக்கு முன் செய்யப்பெற்ற கல்தொட்டில் உள்ளது.

## 10. தொண்டாமுத்தூர்

இவ்வூர் கோவை வட்டத்தில் கோவையிலிருந்து சுமார் 20 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் கி.பி.17ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது நடுகல் உள்ளது. இதனில் புடைப்புச் சிற்பமாக ஏறு (எருது)தழுவுதல் காட்சி வடிக்கப்பெற்றுள்ளது. இவ்வூரில் 18ஆம் நூற்றாண்டு வஞ்சியம்மாள் கோயில் உள்ளது.

## 11. நீலாம்பூர்

நீலாம்பூர் கோவை வட்டத்தில் கோவை அவிநாசி நெடுஞ்சாலையில் சுமார் 10 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் வரலாற்றுச் சின்னங்களாக 1.பிளேக்மாரியம்மன்கோவில் 2. விளக்காத்தாள் கோவில் 3. பிச்சாண்டவர் கோவில் 4. கருப்புராயர் கோவில் 5. வேடச்சாமி கோவில் 6. பிள்ளையார் கோவில் ஆகிய கோயில்கள் உள்ளன. பிளேக்மமாரியம்மன் கோவில் இவ்வூரின் கிழக்கு பகுதியில் உள்ளது. இக்கோவிலின் கற்பகிரகத்தில் அம்மன் நின்றநிலையிலும், அம்மனின் இரண்டு வலதுபக்க கைகளில் சூலமும், அபயமுத்திரையும், இடதுபக்க கைகளில் வரதமுத்திரையும் உடுக்கையும் உள்ளன. தலையில் கரண்ட மகுடத்துடன் காட்சியளிக்கின்றார். கற்பகிரகத்தின் மேல் வேசர கட்டிட கலைப்பாணியில் விமானம்

உள்ளது. இவ்வூரில் பல இடங்களில் உதிரிச்சிற்பக்ளாக விநாயகர், நாகராசர்சிற்பம், கருப்புராயன் சிற்பம் ஆகிய கற்சிற்பங்கள் உள்ளன.

## 12. பெரியநாயக்கன்பாளையம்

பெரியநாயக்கன்பாளையம், கோவை மேட்டுப்பாளையம் சாலையில் உள்ள ஊராகும். இவ்வூரில் வரலாற்றுச சின்னங்களாக 1. மகாகாளியம்மன் கோயில் 2. பாலதண்டாயுதபாணிகோயில் 3. கரிவரதராசப்பெருமாள் கோயில் 4. சிவன்கோயில் உள்ளன. இக்கோயில்களில் கரிவரதராச பெருமாள்கோயில் மிகவும் பழமை வாய்ந்ததாக உள்ளது. இக்கோயிலின் மூலஸ்தானத்தில் விஷ்ணு, ஸ்ரீதேவி, பூதேவி கற்சிற்பங்களாக உள்ளன. கற்பகிரகத்தின் மேல் திராவிடக்கட்டட கலைப்பாணியில் விமானம் உள்ளது. மண்டபங்களில் உள்ள கல்தூண்களில் சிற்ப வேலைப்பாடுகளாக நான்கு பட்டை, எட்டுப்பட்டைகள் செதுக்கப்பட்டுள்ளன. மேலும் தூண்களில் சங்குசக்கரம், போதிகைகள், பூவேலைப்பாடுகள் நிறைந்து காணப்படுகின்றன. இக்கோவிலின் அமைப்பை நோக்கும் போது கி.பி. 16 அல்லது 17ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகத் தெரிகிறது.

மேலும் இவ்வூரின் வடக்குப்பகுதியில் பெரியமத்தம்பாளையம் மேட்டுப்பாளையம் நெடுஞ்சாலையில் பெருங்கற்கால சின்னங்களான கல்திட்டைகள் (Cairn Circle) மிகுதியாகக் காணப்படுகின்றன.

## 13. பேரூர்

பேரூர் கோயம்புத்தூர் வட்டத்தில் தென்மேற்கே 8 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூர் காவிரியின் சிற்றறாறு ஆன நொய்யல் ஆற்றின் தென்கரையில் அமைந்துள்ளது. இவ்வூரில் 1970-71 ஆண்டில் மத்திய அரசு தொல்லியல் துறையினர் அகழாய்வு பணி செய்து, பல்வேறு வகையான தொல்லியல் சான்றுகளையும், பேரூர் நாகரிகம், பண்பாடு கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்து 9ஆம் நூற்றாண்டு வரை தொடர்ச்சியாக இருந்துள்ளதையும் கண்டுபிடித்துள்ளனர். தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையினரால் 2002ஆம் ஆண்டு பேரூர் சாம்பல் மேட்டுப்பகுதியில் அகழாய்வு பணி மேற்கொள்ளப்பட்டது.

இவ்வகழாய்வில் வரலாற்றுக்காலக் கட்டடத்தின் அடிப்பகுதியும், வெவ்வேறு வகையான சுடுமன் பொம்மைகள் அரிய கல்மணிகள், காதணிகள் பானை ஓட்டில் வில்அம்பு பொறித்த சின்னமும் கிடைத்துள்ளன.

பேரூர்வழியாக இராசகேசரி பெருவழி செல்வதால் ரோமானியர்களும் யாத்ரிகர்களும் இவ்வூரில் தங்கினர். இவ்வூர் பட்டீஸ்வரர் கோவிலில் பல்வேறு காலகட்ட அரசர்களான கோனேரின்மை கொண்டான் விரராசேந்திரன் (யா-16) கி.பி.1222-23), விக்கிரமசோழன் (யா-7) 1280-81 விக்கிரம சோழன் கி.பி.1294-95 வீரவல்லாளன் கி.பி.1292-1341 கோ ராசராச கரிகாலன், வீரபாண்டியன் (யா.4)கி.பி.1209 போன்ற மன்னர்களின் காலத்துக் கல்வெட்டுக்கள் உள்ளன.

இவ்வூரில் பட்டிஸ்வரர் கோயில் பச்சைநாயகி அம்மன் கோயில், தண்டபாணி கோயில் ஆகிய கோயில்கள் உள்ளன. பட்டீஸ்வரர் கோயிலில் அரிய கல்வெட்டுகள் பல உள்ளன. இரண்டாம் விக்கிரமசோழனின் கோயம்புத்தூர் படையெடுப்பு, கல்லணைகள் (கி.பி.12ஆம் நூ) பற்றிய கல்வெட்டு, தாவளம் பற்றிய கல்வெட்டு போசள மன்னன் மூன்றாம் வீர வள்ளாளனின் நீண்ட மெய்க்கீர்த்த தாங்கியுள்ள கல்வெட்டு எனப் பலகல்வெட்டுகள் உள்ளன. பேரூர் கனகசபை சிற்பங்கள் நாயக்கர் கலைப்பணிக்குச் சிறந்த சான்றுகள். இங்குள்ள சாந்தலிங்க அடிகளார் மடம் 200 ஆண்டுகளுக்கு முன் நிறுவப்பெற்றது. சாந்தலிங்க அடிகளார் எழுதிய கொலை மறுத்தல், அவிரோத உந்தியார் வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம் முதலிய நூல்கள் குறிப்பிடத்தக்கவை. இங்குள்ள அழகிய திருச்சிற்றம்பலம், தென்கயிலாயம் ஆகிய கோயில்கள் கி.பி.12ஆம் நூற்றாண்டில் கட்டப்பெற்றவை. பேரூர் குறித்த திருப்பேரூர் புராணம் முதலான இலக்கியங்கள் பல உள்ளன.

## 14. மருதமலை

மருதமலை முருகன் கோயில் கொங்கு நாட்டு மக்களால் வழிப்படப்பெறும் குறிஞ்சிக் கடவுள். இக்கோயிலருகில் தொல்பழங்கால

ஓவியங்கள் உள்ளன. அவை முருகவழிபாட்டின் தொடக்கத்தைச் சுட்டுகின்றன. திருமுருகன் பூண்டி, அவினாசி ஆகிய ஊர்க் கல்வெட்டுகளில் மருதன் மலையன் என்பவன் குறிக்கப்பெறுகின்றான். அதனால் மருதமலை கி.பி.12 ஆம் நூற்றாண்டில் மக்கள் மனத்தில் இடம்பெற்ற மலையாக விளங்கியத எனலாம்.

## 15. வடவள்ளி

இவ்வூர் மதுக்கூரம்மன் கோயிலில் மூன்று மனைவியருடன் நின்ற கோலத்தில் வடிக்கப்பெற்ற அழகாத்திரிநாயக்கர் சிற்பம் உள்ளது.

## 16. விராலியூர்

இவ்வூர் கோயம்புத்தூருக்கு மேற்கில் 25கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் பழனிசாமி கவுண்டர் நிலத்தில் பெருங்கற் சின்னங்கள் உள்ளன. வேளாண்மைக்காக நிலத்தைச் சீர்திருத்திய போது பெருங்கற் சின்னத்தில் மாட்டின் சுடுமண் உருவம் கிடைத்தது என்று வேளாண்கூலிகள் கூறினார்கள். ஒருகாலின் பாதம் மட்டுமே கிடைத்தது.

## 17. வெள்ளலூர்

வெள்ளலூர் நொய்யல் ஆற்றின் தென் கரையில் அமைந்துள்ளது. இவ்வூரில் 1842, 1871, 1932 ஆம் ஆண்டுகளில் பூமிக்கடியில் மண் பானையில் சுமார் 1213 ரோமானியக் காசுகள் கிடைக்கப்பெற்றுள்ளன. இக்காசுகள், அகஸ்டஸ், திபிரியெஸ் காலத்தைச்சார்ந்தவையாகும். கி.மு.முதல் நூற்றாண்டு - கி.பி.மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்தவை. உரோமானிய அணிகலன்களும் கிடைத்துள்ளன. வெள்ளலூரில் தேனீஸ்வரர் கோயில், அம்மன் கோயில், அழகுநாச்சியம்மன் கோயில் உலகளந்த பெருமாள் கோயில்; எமதர்மராச கோயில் எனப் பலகோயில்கள் உள்ளன.

வெள்ளலூர் தேனீஸ்வரர் கோயில் நடுசன்னதி முன் மண்டப கிழக்கு நுழைவு வாயிலின் வலதுபக்கம் கொங்கு சோழன் விக்கிரமசோழன் (யா-17 +1=18) காலத்தைச் சார்ந்த கல்வெட்டு பேரூர் நாட்டு வெள்ளலூரில் வாழ்ந்த ஒருப்பிரிவினர் திருப்புக்கொளியூர்

அவிநாசி ஆளுடையவர்க்கு வழிப்பாட்டிற்கு நன்கொடை அளித்ததைக் குறிப்பிடுகின்றது. இவ்வூரிலுள்ள தனிக்கல்லில் ஒரு கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டு கோக்கண்டன் வீரநாராயணன் (சேரன்) காலத்தைச் சார்ந்ததாகும். இவன் சந்திராதித்தன் குலத்தைச் சார்ந்தனவாகவும் குறிப்பிடப்படுகின்றான், வென்புறை நாட்டைச் சார்ந்த சக்தி அரையன் வெளிலூர் தென்னூர் எம்பெருமான், கோயிலுக்கு ஒரு நந்தா விளக்கு எரிப்பதற்குப் பழங்காசுகளையும் பன்னிரு கழஞ்சரை செம்பொன்னையும் இவ்வூர் சபையாரிடம் கொடுத்துள்ளான்.

தேனீஸ்வரர் கோயில் மண்டபத்தூணில் சந்திராதித்த குலத்தைச் சார்ந்த கோக்கண்டன் வீரநாரயணன், கோக்கண்டன் ரவி, ஆகியோர் காலத்துக் கல்வெட்டுக்கள் உள்ளன. இம்மன்னர்களைச் சேரர், என்றும் களப்பிரர் என்றும் இருவகையாக வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர்.

## திருப்பூர் வட்டம்

### 1. அலகுமலை

இவ்வூர் திருப்பூர் வட்டத்தில் திருப்பூரிலிருந்து சுமார் 10 கி.மீ. தொலைவில் தெற்கில் உள்ளது. இவ்வூரில் சிவன்கோயில் வரலாற்றுச் சின்னமாக உள்ளது. மேலும் கைலாசநாதர்பெரியநாயகி கோயில் முன் குத்துக்கல்லில் ஒரு கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டு திருமலை நாயக்கர் (கி.பி.1640) காலத்தைச் சாரர்ந்ததாகும் அலகுமலை குமாரசுவாமி எழுந்தருளும்போது சீர்பாதம் தாங்கும் சமய முதலிகளுக்கும் சிலவுரிமையைச் சர்வமானியமாக வழங்கி திருமலை நாயக்கர் மரியாதை செய்துள்ளார்.

### 2. கொடுவாய்

இவ்வூர் திருப்பூர் தாராபுரம் சாலையில் திருப்பூரிலிருந்து 25 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் நாகீஸ்வரமுடையார் கோயில், விண்ணிறைந்த பெருமாள் கோயில், விநாயகர் கோயில், அம்மன் கோயில் ஆகிய கோயில்கள் உள்ளன. நாகேஸ்வர முடையார் கோயில் கருவறை தெற்கு ஜகதியில் கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டு வீரபாண்டியன் (யா.14) கி.பி.1274ஆம் ஆண்டைச்சார்ந்தது. சிறுக்காணி

சிறுப்பிள்ளையார் சன்னிதி நிறைந்தான் என்பவர் விளக்கெரிக்க காசுகளைச் சிவப்பிராமணர்களிடம் வழங்கினார் என்ற செய்தி அறிகின்றோம். மேலும் பெருமாள் கோயில் அர்த்த மண்டபத்தில் தென் சுவரில் வீரநஞ்சராயஉடையார் கல்வெட்டு உள்ளது. கொடுவாய் ஊரும் ஊராரும் பிராமண தேசாந்திரிகளுக்குச் சோறு உண்பிக்க இவர்கள் ஊரான வேலம்பூண்டியில் நான்கு எல்லைக்குட்பட்ட நிலத்தை விவசாயத்திற்காக பயன்படுத்தி அதனை நிருவாகிக்க தரணிகளையும் நியமித்து ஏற்பாடு செய்தனர்.

## 3. பெருந்தொழுவு

இவ்வூர் திருப்பூர் வட்டத்தில் திருப்பூரிலிருந்து அலகுமலை செல்லும் பாதையில் திருப்பூரிலிருந்து 10கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் சிவன்கோயில், அம்மன் கோயில் மற்றும் விநாயகர் கோயில் உள்ளன. இவ்வூர்ச் சிவன் கோயில் அர்த்தமண்டப வட சுவரில் சுந்தரபாண்டியன் (கி.பி.1280) காலத்துக் கல்வெட்டு உள்ளது. பூந்துறை நாட்டுப் பெருந்தொழுவு வெள்ளாளன் நல்லமங்கை பாகன் பிரம்மலிங்கேசுவரர் கோயில் அர்த்தமண்பத்தில் திருநிலைக்கால் இரண்டும், படியும், பலிபீடமும் செய்து கொடுத்தான் என்ற செய்தி அதில் உள்ளது.

மேலும் விநாயகர் கோயில் தென்புறம் சுந்தரபாண்டியனுடைய (ய.7) கிபி. 1292ஆம் ஆண்டுக் கல்வெட்டு உள்ளது. பெருந்தொழுவு ஊரும் ஊராளிகளும் வெள்ளாளர் ஐவரும் பிள்ளையார் கோயிலைக் கட்டியுள்ளனர்,. மேலும் கோயிலின் தினப்பூஜைகளுக்கு நிலத்தை தானமாகவும், நெல்லும், தினையும் கொடையாகவும் அளித்துள்ளனர்.

## 4. பெருமாநல்லூர்

இவ்வூர் கோவை ஈரோடு சாலையில் உள்ளது. இவ்வூரில் உத்தம சோழீஸ்வரர் கோயில் உள்ளது. இக்கோயில் கி.பி.14ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருக்கலாம். இக்கோயிலில் மகாமண்டபச் சுவரில் வீரபாண்டியன் கி.பி.1288 ஆம் ஆண்டு கல்வெட்டு உள்ளது. சிதைந்த குளத்தைச் சீர்படுத்தி அணைகட்டி அந்நீர் பாயும் நிலத்தில் நெல், கமுகு, தெங்கு ஆகியன பயிர்செய்து அரசுக்குச் செலுத்தவேண்டிய

மேல் வாரத்தில் பயிர் அறுவடைச் செய்ய தொடங்கிய நாள் முதல் நான்கு ஆண்டுளுக்கு நீக்கியும் பின் வரும் ஆண்டுகளில் சிறிது சிறிதாக வரிகளைக் கூட்டியும் விதித்திருக்கும் முறை கொங்கு பாண்டியர் காலத்து நீர்ப்பாசன அமைப்பை அறிய துணைபுரிகின்றது. மேலும் சுந்தரபாண்டியன் (யா.9) வீரவல்லாளன் போன்ற மன்னர் காலத்துக் கல்வெட்டுக்கள் இக்கோவிலில் உள்ளன.

## பல்லடம் வட்டம்

### 1. இருகூர்

இருகூர் கோவையிலிருந்து சுமார் 8கி.மீ. தொலைவில் கிழக்கு பக்கம் உள்ளது. இவ்வூரில் பெருங்கற்சின்னங்கள், அங்காளம்மன் கோயில், நஞ்சுகண்டேசுவரர் கோயில், அம்மன் கோயில் போன்றவை உள்ளன.

இவ்வூரில் இராமசாமி குருக்கள் மகன் திருநாகேஸ்வரசிவத்திடம், ஒரு செப்பேட்டுத் தொகுதி உள்ளது. மூன்று ஏடுகளில் இரண்டு ஏடுகள் மட்டும் உள்ளன. இரண்டாவது ஏடு இல்லை. அதன் வாசகம் பின்வருமாறு:

முதல் ஏடு பக்கம் 1

1. ஸ்வஸ்திஸ்ரீ கொநெரின்மை கொண்டான் பே
2. ரூர் நாட்டு வெள்ளலூர் ஆளுடையா
3. ர் தெந்நூர் ஆண்டார் கோயிலி
4. ல் காணியுடைய சிவப்பிர
5. ாமணந் பாரத்துவாச கோத்திரத்து

பக்கம் 2

1. ஸ்ரீ கயிலாஸம் உடையாந் பஞ்சநெதி வாணந்நான இரா
2. சஇராசப்பட்டனுக்கு நம்மோலை குடுத்த படியாவது இவந்
3. நமக்கு செய்த பணி பொங்கலுக்குக்கா நாட்டு அளுகைதொழா
4. ந கண்ட வீமநல்லூர் அணித்திர பல்லவரையன் உத்த

5. ம சோழரைக் கண்டு அவர் தாதையும் கொண்டு
6. புகுந்த கொட்டிக்காரரை தொழுவில் மூத்த அப்பாட்டர்
7. திருப்பள்ளிப் படைக்குத் தெற்காக உத்தமசோழர் இ
8. ட்ட கோட்டை யெறிய நாம் இட்ட கோட்டை வஞ்
9. கர் வஞ்சகன் கொட்டையிலேநிற்று சமக்க

மூன்றாம் ஏடு (முன்பக்கம்)

1. சீயற்கு அமரபயங்கர பெருமாளும் இவர்பாட்டந்மார்
2. செய்த பணி வெள்ளலூர் கொளுப் பசுங்காய்
3. இவை உள்படச் சோழ நாட்டுக்குப் போய் குடுத்தப
4. ணிக்கு அக்காலத்தில் குடுத்த பழங்காணி வெள்ள
5. லூர் சிவத்தாறங்களும் வாய்யறைக்கா நாட்டுச் சிவத்
6. தாறங்களும் கோளூர் சிவத்தாறங்களும் கோப்பாடி சி
7. வத் தாறங்களும் நாம் குடுத்த காணிக் குறிச்சியிற் சி
8. வத் தானங்களும் தெந்கரை சூரலூர் வடகரை சூரலூ
9. ர் இருகலூர் இவ்வூர்களில் சிவத்தாறங்கள் யெழுவந மு
10. ளைபந இவர்கள் மக்கள் மக்களுக்கு மாறகாணியாக

இரண்டாம் பக்கம்

1. விலைபொற்றி தந்மநாந ஸ்ரீதநத்துக்கும் உரித்தாகவும்
2. இவந்நுக்குக் குடுத்து வரிசை ஆண்வழிக்கு ஒற்றைச்சங்
3. கு ஊதி வருவதாகவும் பெண்வழிக்கு இரட்டைச்சங்
4. கு ஊதிவருவதாகவும் வளையம் வைப்பாநாகவும் காலு
5. க்குச் சந்தனம் பூசுவதாகவும் பச்சை பிடாம் போ
6. ர் பாநாகவும் இவந் அகம் இரண்டாம் நிலை எடுத்து
7. சாந்து இட்டு கொள்ளப் பெறுவாநாகவும் மற்றுந
8. ம் பிள்ளைகளுள்ள வரிசையெல்லாம் இவந்மக்க
9. ள் மருமக்கள் செய்து கொள்ள பெறுவதாகவும் நம்மோலை

10. ப்படி செம்பிலும் சிலையிலும் வெட்டிக்கொள்ளவும் நம் ஓலை குடுத்தோம்

இராசராசபட்டன் இம்மன்னனுக்கு செய்த பணிகளுக்காக, பல்வேறு கோயிற் காணிகளும்சிறப்பு உரிமைகளும் பெற்றான் என்பதை இச்செப்பேடு குறிப்பிடுகின்றது.

## 2. சாமளாபுரம்

இவ்வூர் சோமனூர் அருகில் உள்ளது. இங்குள்ள சிவன் கோயில் விஜயநகர நாயக்கர் காலத்தில் கட்டப்பெற்றது. இவ்வூர்ப்பெயர் சாமளா என்ற பெண்ணின் பெயரால் உருவானது என்பர். இந்தப் பெண்ணும் கரிகாலனை வளர்த்தவர்களில் ஒருவள்.

## 3. சூலூர்

சூலூர் கோவை திருச்சி நெடுஞ்சாலையில் உள்ளது. சூலூரில் பெருங்கற்காலச் சின்னங்கள் குறிப்பாக கல் பதுக்கைகள் கிடைக்கப்பெற்றுள்ளன. இவற்றின் காலம் கி.மு.மூன்றாம் நூற்றாண்டு ஆகும். இவ்வூரில் மண் குடுவையில்? ரோமானிய நாட்டு நாணயங்களும் கிடைத்துள்ளன. இக்காசுகள் அகஸ்டஸ், திபிரியெஸ் காலத்தைச் சர்ந்தவையாகும். இவ்வூரில் கி.மு. மூன்றாம் நூற்றண்டைச் சார்ந்த ஏரான் மரபினர் வெளியிட்ட காசுகள் கிடைத்துள்ளன. திருவேங்கடநாதர் கோயில், மற்றும் வீரநஞ்சன உடையார் கோயில்கள் இவ்வூரில் உள்ளன. திருவேங்கடநாதப்பெருமாள் கோயிலில் துண்டு கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டு கோக்கண்டன் வீரநாராயணன் காலத்தைச் சார்ந்ததாகும்.

சேந்தனப்பி தனது கணவன் கவாச்சியின் நன்மைக்காக அய்யனார் சிலையை செய்துள்ளார் என்ற செய்தி அறியப்படுகின்றது. சூலூர், கல்வெட்டுக்களில் சூரலூரான சுந்தரபாண்டியநல்லூர் என்று அழைக்கப்பெற்றது. இவ்வூரில் நொய்யல் ஆற்றின் குறுக்கே ஓர் அணை கட்டப்பட்டிருந்தது என்பது பற்றிய கல்வெட்டு ஒன்று சர்க்கார் பெரியபாளையத்தில் உள்ளது.

## 4. செஞ்சேரி

இவ்வூர் சூலூரிலிருந்து 20கி.மீ. தொலைவில் உள்ளது. இங்குள்ள முருகன் கோயில் குழந்தை வேலாயுத சாமி கோயில் என்று அழைக்கப்பெற்றது. கோயிலுக்குச்செல்லும் வழியிலும், சுனைக்கருகிலும் கி.பி.17ஆம் நூற்றாண்டைச்சேர்ந்த கல்வெட்டுகள் உள்ளன. மலைமேல் உள்ள கோயில் வாயிலில் போசளன் வீர வள்ளாளன் கல்வெட்டு உள்ளது.

## 5. செலக்கரிச்சல்

இவ்வூர் சூலூருக்கு தெற்கே 10கி.மீ. தொலைவில் உள்ளது. இங்கு சிவன் கோயில் மற்றும் அம்மன் கோயில், பெருமாள்கோயில், அங்காளம்மள் கோயில்கள் உள்ளன. இவ்வூரில் கி.பி.13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த எழுத்துடன் கூடிய நடுகல் கிடைத்துள்ளது. இரண்டு வீரர்கள் சண்டையிடும் காட்சி புடைப்புச் சிற்பமாக உள்ளது. சிவன் கோயில் பாலாம்பிகையம்மன் கோயில் கருவறை நிலைக்கல்லில் கல்வெட்டு உள்ளது. கல்வெட்டானது வீரவல்லானுடையது (கி.பி.1333) ஆகும். வாயறைக்கா நாட்டு சிரைக்கரைச்சலில் ஆளுடையநாயினார் நிலம்பெற்ற கூத்தன் கோயிலுக்கு காங்கய நாட்டு வெள்ளக்கல் என்ற ஊரைச்சார்ந்த வியாபாரி புஞ்சை நாதபடைவும் பெருமாள் என்ற அழகிய திருச்சிற்றம்பலமுடையான் என்பவனிடம் சந்திய தீபம் ஒன்றுக்கும் கோயில் வாசலில் தண்ணீர்பந்தலுக்கும், இவ்வூர் சிவப்பிராமணன் கற்பக நம்பிபட்டன் நூற்று ஐம்பது பணம் கொடைப்பெற்றுள்ளான் என்ற செய்தி அறியப்படுகின்றது.

## 6. நல்லூர்

இவ்வூர் திருப்பூரிலிருந்து காங்கயம் செல்லும் வழியில் திருப்பூரிலிருந்து 6 கி.மீ. தொலைவில் உள்ளது. இங்கு பாழடைந்த சிவன் கோயில் உள்ளது. இக்கோயில் போசளர் கல்வெட்டுகள் உள்ளன. இவ்வூர் சதுர்வேதிமங்கலத்திற்குத் தொல்லை கொடுத்தவர்களை ஒடுக்கி பாதுகாப்பு அளிக்க பெருமாநல்லூர் ஊரார் உறுதி அளித்துள்ளனர்.

## 7. பட்டனம்

இங்கு விஜயநகர நாயக்கர் கால கோயில்கள், சிற்பங்கள் ஆகியவை உள்ளன.

# பொள்ளாச்சி வட்டம்

## 1. ஆத்தூப் பொள்ளாச்சி

இவ்வூர் பொள்ளாச்சியிலிருந்து 8கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் குட்டுவன் கோதை காசு கிடைத்தது. இவ்வூரில் கிடைக்கும் வீரராசேந்திரனின் கல்வெட்டு பேரூர் மீது நிகழ்ந்த படையெடுப்புபற்றிக் கூறுகிறது. இவ்வூரில் கி.பி.12ஆம் நூற்றாண்டினைச் சேர்ந்த மந்திரக்கல் உள்ளது.

## 2. ஆதாளி அம்மன் கோயில்

இக்கோயில் ஆழியாற்றணையின் உட்புறத்தில் நவமலை செல்லும் பெருவழியில் அமைந்துள்ளது. இங்குள்ள தீர்த்தங்கரரின முகத்தைச் சிதைத்து அம்மனாக அலங்காரம் செய்து ஆதாழி அம்மன் என்ற பெயருடன் வழிபாடு செய்து வருகின்றனர். இக்கோயில் அருகில் சமணப் படுக்கைகள் உள்ளன. இக்குகையில் அம்மன் வழிபாடு தொல்பழங்காலம் முதல் நிலைபெற்றிருந்தது. இடையில் சமணர்கள் அக்குகையில் தங்கிதவம் செய்தனர். அம்மன் வழிபாடு செய்கின்ற பழங்குடியினரும், சமணத்தைப் போற்றும் சமணர்களும் ஒரேசமயத்தில் அவரவர் முறையில் வழிபாடு செய்து கொண்டிருந்தனர். பழங்குடிகள் தங்கள் அம்மன் தெய்வத்திற்குப் பலிகொடுத்து வழிபட்டனர். சமணர்கள் கொல்லாமை விரதம் பூண்டு வழிபாடு செய்து வந்தனர். இடையில் வந்த சமணம் செல்வாக்கிழந்துவிட்டது. ஆனால் அம்மன் வழிபாடு தொடர்ந்து நடந்து வருகிறது. இக்கோயிலுடன் தொடர்புடைய கோட்டூர் மலையாண்டிப்பட்டனத்திலும் பள்ளி அம்மன் கோயில் உள்ளது.

## 3. ஆனைமலை

இவ்வூர் பொள்ளாச்சி வட்டத்தில் உள்ளது. மானாம்பொழிப் பகுதியில் பரம்பிகுளம் ஆழியாறு திட்டத்திற்காகப் பொதுப்பணித்துறை

பணிமேற்கொண்டபொழுது பெருங்கற்காலச் சின்னமான கல்பதுக்கைகள் (Cairn Circle) இருப்பது தெரியவந்தது. இந்தப் பெருங்கற்கால சின்ன கி.மு.மூன்றாம் நூற்றாண்டைச்சார்ந்ததாகும். மேலும் சிங்காநல்லூர் என்ற இடத்தில் ரோமநாட்டு நாணயங்கள் (திப்பெயரியஸ்) கிடைக்கப்பெற்றுள்ளன. இவ்வூரில் வரலாற்றுக்காலச் சின்னங்களாகச் சோமஸ்வரர் கோயில், உஜ்ஜயனிகாளியம்மன் கோயில், விநாயகர் கோயில் ஆகிய கோயில்கள் உள்ளன.

கோமேஸ்வரர் கோயில் அர்த்த மண்டப வடக்கு ஜகதியில் ஒரு கல்வெட்டு உள்ளது. வெண்டையூர்க்கலா வீரகேரள வளநாட்டு நன்னனூர் ஆளுடையார் நக்காண்டார் கோயில், சத்திரிய புள்ளையார் தேவகன் மகன் என்ற வாசகம் உள்ளது. இது மடவளாகத்தில் பணிசெய்வதற்காக நிலத் தானம் வழங்கிய அரசன் ஆனையாகும்.

## 4. கரப்பாடி

இவ்வூர் பொள்ளாச்சி வட்டத்தில் பொள்ளாச்சியிலிருந்து நெகமம் செல்லும் சாலையில் உள்ளது. பெருவழியிலிருந்து மூன்று கி.மீ. தொலைவில் உள்ளே செல்ல வேண்டும். வரலாற்றுச் சின்னமாக ஈஸ்வரன் கோயில் உள்ளது. தென் கொங்கு நாட்டில் கம்மாளர்கள் சார்ந்த நண்மை, தீமை விழாக்களில் இரட்டைச் சங்குஊதிக் கொள்ளவும் பேரிகை கொட்டிக்கொள்ளவும் உரிமைகள் கொடுக்கப்பட்ட விவரம் கல்வெட்டில் உள்ளது..

## 5. கிணத்துக்கடவு

இவ்வூரில் பொன்மலைவேலாயுதசாமிகோயில் திருமலை நாயக்கர் காலத்தில் வெளியிடப்பெற்ற செப்பேட்டில் குறிக்கப் பெறுகின்றது. அதனால் இக்கோயில் நாயக்கர் காலத்தைச் சேர்ந்தது எனலாம்.

## 6. குள்ளிச் செட்டி பாளையம்

இவ்வூர் பொள்ளாச்சி வட்டத்தில் நடுப்புளிச்சாலையில் உள்ளது. இவ்வூரில் வரலாற்றுச் சின்னமாக சிவன் கோயில் உள்ளது.

மற்றும் சுப்பிரமணியசுவாமி கோயில் உள்ளது. இவ்வூரில் தனிக்கல்லில் கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டு வீரப்பாண்டியன் (யா.8) ஆட்சி காலத்தைச்சார்ந்ததாகும். காவடிக்கா நாட்டுத் தேவன்பாடி என்ற வீரசோழநான பூலுவன் வீரன் செய்யான் அபந்தியான் இரண்டு நிலை கால்கள் அமைத்தான்.

மற்றொரு கல்வெட்டு சுப்பிரமணிய சுவாமி கோயில் வடக்கு வாசல் சுவரில் உள்ளது கல்வெட்டு சுந்தரபாண்டியன் (யா15) காலத்தைச் சார்ந்ததாகும். காவடிக்கா நாட்டு எறிச்சிற்பொழில் வாய்ச்சியான முடித்தலை சோழ நல்லூர் தியான் காளிங்கராயன் இக்கோயிலுக்கு செய்த தானத்தை இக்கல்வெட்டு குறிப்பிடுகின்றது.

## 7. தேவனாம்பாளையம்

இவ்வூரில் அமணலிங்கேஸ்வரர் கோயில் என்றொரு கோயில் உள்ளது. இத சமணர் பள்ளியை சிவன் கோயிலாக மாற்றிய நிலையைக் குறிக்கிறது.

## 8. பட்டணம்

இவ்வூர் கோவை - பொள்ளாச்சிப் பெருவழியில் தாமரைக்குளம் என்ற ஊரிலிருந்து 7 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் கி.பி.10ம் நூற்றாண்டைச்சேர்ந்த குதிரை வீரன் நடுகல் ஒன்று கிடைக்கின்றது. நானா தேசிக் குழுவினர் உருவாக்கிய அஞ்சினான் புகலிடம் என்ற குடியிருப்புப் பகுதி பற்றிய கல்வெட்டுஒன்றும் கிடைத்துள்ளது.இது நஞ்சராய உடையார் காலத்தைச் சேர்ந்தது. இவை கோவை அருங்காட்சியகத்தில் உள்ளன.

## 9. பெரியகளந்தை

இவ்வூரில் வரலாற்றுச் சின்னங்களாக ஆதீஸ்வரர் கோயில், அம்மன் கோயில், சுப்பிரமணியர் சுவாமி கோயில் உள்ளன. அம்மன் கோயில் கருவரையின் நந்தி மீதமர்ந்த அம்மன் சிலை உள்ளது.

ஆதீஸ்வரர் கோயில் அம்மன் சன்னதியில் உள்ள நிலைக்காலில் கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டின் அரசன்

சுந்தரபாண்டியன் (யா-15) ஆகும். வாயறைக்கா நாட்டுக் களந்தை பூலுவன் வாணன் நிலையுடையான் இக்கோவிலில் இந்நிலையை அமைத்துள்ளான்.

மேலும் இக்கோயிலில் விக்கிரமசோழன் (கொங்கு சோழன்) வீரபாண்டியன் காலத்துக் கல்வெட்டுக்களும் உள்ளன.

## 10. பொள்ளாச்சி

இவ்வூர் கோவையிலிருந்து கிழக்கே 45 கி.மீ. தொலைவில் உள்ளது. பொள்ளாச்சி அருகில் பட்டளை என்ற கிராமத்தில் கி.பி.1800ல் பூமிக்கடியில் பானையில் உரோமன் நாட்டு நாணயங்கள் கிடைக்கப்பெற்றுள்ளன. அவை அகஸ்டஸ், திபெரியஸ் காலத்தைச் சார்ந்தவையாகும். இவ்வூரில் மகாலிங்கப்புரத்தில் அமணலிங்கேசுவரர் கோயில் (சமணர் கோவில்) மற்றும் சுப்பிரமணியர் சுவாமி கோயில் உள்ளன. சுப்பிரமணியசுவாமிகோயிலில் நான்கு கல்வெட்டுகள் உள்ளன. சில பூலுவர் பற்றிக் குறிப்பிடுகின்றன.

## 11. வாகம்பாளையம்

இவ்வூர் பொள்ளாச்சி வட்டத்தில் உள்ளது. இவ்வூரில் 48 முத்திரைக் காசுகள் ரோமானிய நாணயங்கள் பூமிக்கடியிலிருந்து கிடைக்கப்பெற்றுள்ளன.

## 12. ஜைன்கல்துர்க்கம்

இம்மலைக்கோட்டை ஆனைமலைக்கு வடக்கில் மூன்று கி.மீட்டர் தொலைவில் உள்ளது. இக்கோட்டைக்கும் சமணத்திற்கும் தொடர்பேதும் இல்லை

# மேட்டுப்பாளையம் வட்டம்

## 1. இரும்பொறை

இவ்வூர் அன்னூர் மேட்டுப்பாளையம் நெடுஞ்சாலையில் உள்ள ஊராகும். இவ்வூரின் வரலாற்று சின்னமாக நாகீஸ்வரர்கோயில் மற்றும் கைலாசநாதர் கோயில் உள்ளக. இவற்றில் கைலாச நாதர் கோயில்

கருவறை தெற்கு குமுதத்தில் கல்வெட்டு உள்ளது. கல்வெட்டு சுந்தரபாண்டியன் காலத்தைச் சார்ந்ததாகும். வடபரிசாரநாட்டு முடுகதுறை வெள்ளாளன் கருந்தொழி கூட்டம் கருஸயன் இவ்வூர் நாகீஸ்வரமுடையயார்க்கும் சிவகாம சுந்தரி நாச்சியார்க்கும் வெற்றிலை பாக்கு மூன்று சந்தி வழிப்பாட்டிற்காக இக்கோயில் சிவப்பிராமணன், நாற்பத்தென்னாயிரபட்டன், தில்லை மூவாயிர நம்பி, இடங்கை நாயகப்பட்டன் ஆகியோர் மூலம் கொடையளித்து ஏற்பாடு செய்த செய்தியை இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது.

## 2. இலுப்பநத்தம்

இவ்வூர் மேட்டுப்பாளையம் வட்டத்தில் காரமடையிலிருந்து சிறுமுகை அடுத்து 5 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் ஊருக்கு தெற்கில் ‘‘தீனப்பகவுண்டன் தோட்டத்துத் தனிக்கல்லில் கல்வெட்டு உள்ளது, இக்கல்வெட்டு வீரவல்லாளன், கி.பி.1338 ஆம் ஆண்டைச் சார்ந்ததாகும். வடபரிசார நாட்டு, இறுப்பை ஊரும் ஊராளிகளும் அழகிய சொக்கனுக்கு திருமடை விளாகத்தையும் அதற்குரிய உரிமைகளையும் வழங்கியுள்ளமை அறிகிறோம். இக்கல்வெட்டு கோவை அகழ் வைப்பகத்தில் உள்ளது.

## 3. காரமடை

இவ்வூர் அரங்கநாதர் கோயில் திருவிழாவில் தாசர்சேவை குறிப்பிடத்தக்கது. மதுரை கள்ளழகர் ஆற்றில் இறங்கும்போது தாசர்கள் தோல் பைகளிலிருந்து தண்ணீரைப் பீச்சி அடித்துக்கொள்வர். பந்தசேவை குறிப்பிடத்தக்கது. மலட்டுப்பெண்கள் தாசர்கள் வாயில் கவ்வித்தரும் உரித்த வாழைப்பழத்தைச்சாப்பிட்டால் மலட்டுத்தன்மை நீங்கும் என்று கருதுகின்றனர். கொங்கு தேசராஜாக்கள் கதையில் வரும் காரமூலவிருட்சம் என்ற ஊர் காரமடையாக இருக்கலாம். அதை உறுதிப்படுத்தும் வகையில் இவ்வூரிலிருந்து சென்னை இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகையில பணியாற்றிய ஒருவரிடம் கங்கமன்னன் கொங்கணிவர்மன் அளித்த செப்பேடு இருந்தது. அந்தச் செப்பேட்டினை அறிந்துகொள்ள வெளிப்படுத்தியவர் கல்வெட்டறிஞர் ஐ. மகாதேவன் அவர்கள் ஆவார்.

## 4. குமாரபாளையம்

இவ்வூர் புஞ்சை புளியம்பட்டியிலிருந்து மேட்டுப்பாளையம் செல்லும் வழியில் புளியம்பட்டியிலிருந்து 9 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் உள்ள நாகீஸ்வர முடையார் கோயில் கொங்குச் சோழர் காலத்தில் கட்டப் பெற்றது. இன்று வழிபாடின்றிப் பாழடைந்துள்ளது. மூன்றுகல்வெட்டுகள் உள்ளன.

## 5. குருந்தமலை

இவ்வூர் காரமடை - தோலாம் பாளையம் பெருவழியில் 7 வது கி.மீ. பிரிந்து செல்லும் வழியில் 2 கி.மீ. தொலைவில் உள்ளது. இங்குள்ள சுனையில் இராமப்பையன் கல்வெட்டு (கி.பி.1499) ஒன்று பொறிக்கப் பெற்றுள்ளது. குருந்தமலை வேலாயுதசாமி கோயில் தைப்பூசம், கார்த்திகை ஆகிய விழாக்கள் விரிவாகக் கொண்டாடப் பெறுகின்றன.

## 6. மருதூர்

இவ்வூர் காரமடையிலிருந்து சுமார் 6கி.மீ. தொலைவில் மேற்கில் உள்ளது. ஈஸ்வரன் கோயில் முற்றத்தில் வடக்கு ஜெகதியில் ஒரு கல்வெட்டு உள்ளன. கல்வெட்டுகள் சுந்தரபாண்டியன் காலத்தைச் சார்ந்தவையாகும். மேலும் கல்வெட்டு விக்கிரம சோழ வளநாடு நல்லூர் மருத வனப்பெருமாள் கோயிலுக்கு வேட்கோவன் செயபாலன் வயிரவதேவர் வழிபாட்டிற்காக செய்த கொடையைப் பற்றிக் கூறுகின்றது.

## 7. பெள்ளாதி

இவ்வூர் மேட்டுப்பாளையம் வட்டத்தில் காரமடைக்குக் கிழக்கில் 6 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரில் வரலாற்றுச் சின்னங்களாக சங்கமேஸ்வரர் கோயில், பெருமாள் கோயில், மாரியம்மன் கோயில், விநாயகர் கோயில் போன்றவை உள்ளன. மேலும் இவ்வூரில் உதிரிச் சிற்பம் நடுகல் உள்ளது. ஒரு வீரன் ஈட்டியினால் ஒரு பன்றியைக் குத்துவது போல் புடைப்புச் சிற்பமாக

உள்ளது. இவ்வூர் சங்கமேஸ்வரன் கோயில் முன் மண்டப அதிட்டானத்தில் கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டு வீரகிருஷ்ணராயர் (கி.பி.1517) காலத்தைச் சார்ந்ததாகும் வடபரிசாரநாட்டு வெள்ளாதி தம்பிரானார் வீர சங்காதீச்சுரமுடையார் கோயிலுக்கு இவ்வூர் திருமாடல கோத்திரத்து கணக்க மல்லியன் நந்தா விளக்கு ஒன்று எரிக்க நாற்பது பணம் வழங்கினான் என்ற செய்தி அதில் உள்ளது.

## 8. இலிங்காபுரம்

இவ்வூர் மேட்டுப்பாளையத்திலிருந்து சுமார் 12 கி.மீ. தொலைவில் பவானி ஆற்றின் வடகரையில் உள்ளது இவ்வூரின் தென்பகுதியில் விவசாய நிலங்கள், வாழைத்தோட்டங்கள் உள்ளன. மேலும் பவானிசாகர் அணையின் மேற்பகுதியில் திப்புசுல்தான் கோட்டைகள் இருந்துள்ளன. கோட்டைகள் இருந்த மேல்பகுதி கூத்தமுன்பு என்ற பகுதியாகும். இந்த கூத்தமுன்பு பகுதிஅழிந்து வாழைத்தோட்டங்களாகக் காட்சியளிக்கின்றன. இந்த வாழைத் தோட்டங்களுக்குச் செல்லும் பாதையில் சுமார் 1 கி.மீ. தூரத்துக்கு உடைந்த சிறிய, சிறிய துண்டுகளாக இரும்பு தாதுக்கள் (Iorn ore) பரவிக்கிடக்கின்றன. இப்பகுதியில் உள்ள மக்களிடம் இந்த இரும்புதாதுக்களைப் பற்றி விபரம் கேட்டப்பொழுது இப்பகுதி திப்புசுல்தான் காலத்தில் ஆயுதம் செய்யும் களம..க இருந்துள்ளது என்றும் இப்பகுதியில் இரும்பை உருக்கும் அடுப்புகள் (Furnace) பல பூமியில் இருப்பதும் விவசாயப் பணியின் போது தெரியவருகின்றன என்றும் கூறினர்.

இப்பகுதியில் திரு. கானராசு என்பவரது நிலத்தில் கி.பி.17ஆம் நூற்றாண்டைச் சார்ந்த புலிக்குத்திகல் புடைப்பு சிற்பம் உள்ளது. வீரனின் தலையின் வலதுப்பக்கம் சந்திரனும், சூரியனும், இடது பக்கம் லிங்கமும் உள்ளன.

## 9. வெள்ளியங்காடு

இவ்வூர் காரமடையிலிருந்து சுமார் 10கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூர் மேற்கு தொடர்ச்சி மலையில் அடிவாரத்தில் முத்துக்கால்புனர் அழிந்த பசவேசுரர் கோயில் உதிரிக்கல்லில்

கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டு வீரராசேந்திரன் (யா.30) காலத்தைச் சார்ந்ததாகும். இக்கல்வெட்டில் வடபரிசார நாட்டு மாவண்டூர் என்ற எறி வீர பட்டணத்து வெள்ளான் செம்பர் கூட்டத்து கொங்காழ்வான் இக்கோயிலுக்கு விளக்கு ஒன்று எரிக்க இக்கோயில் சிவப்பிராமணனிடம் கொடை கொடுத்துள்ளான் என்ற செய்தி அறியப்படுகின்றது.

# பிற்சேர்க்கை

## 1. கோவை மாவட்டத்தில் புதிய கற்கால கருவிகள்

கோவை மேற்குவட்டம், போளுவாம்பட்டி, மோளபாளையம், வெள்ளெருக்கம்பாளையம்.

## 2. பெருங்கற்காலச் சின்னங்கள் உள்ள இடங்கள்.

### கோவை வட்டம்

| | |
|---|---|
| அசிரிபாளையம் | அப்பாசிகவுண்டன்பதி |
| ஆலாந்துறை | இருகூர் |
| கள்ளுமடை | காளப்பட்டி |
| கள்ளிபாளையம் குறிச்சி | கொம்மாண்டாம்பட்டி |
| கோயில்பாளையம் | மாவுதம்பதி |
| நல்லூர்வயல் | நஞ்சுண்டாபுரம் |
| பட்டான்பாறைபனப்பட்டி | பேரூர் |
| போளுவாம்பட்டி | வெள்ளலூர் |
| சர்கார்சாமபாளையம் | இடையார்பாளையம் |
| சீரபாளையம் | ஒத்தக்கால் மண்டபம் |
| தாதபள்ளி | காளிமங்கலம் |
| தானிக்கண்டி | குமிட்டிபாதி |
| பூலுவபட்டி | குறிச்சி |
| வெள்ளெருக்கப்பாளையம் | கூடலூர் |
| கொங்கம்பாளையம் | கொங்கபலையூர் |

### மேட்டுப்பாளையம் வட்டம்

| | |
|---|---|
| பிளிச்சி | காரமடை |
| காளியப்பனூர் | மங்கலக்கரைபுதூர் |

முத்துக்கல்லூர்
சுள்ளிப்பாளையம்
தாயனூர்
அன்னதாசம்பாளையம்
மேட்டுப்பாளையம்
கனராபாளையம்
பட்டகாரனூர்
தட்டபள்ளம்
சிறுமுகை
முத்துக்கோவன்பாளையம்
பன்னபாளையம்
சுண்டகரை

## பல்லடம் வட்டம்

அய்யம்பாளையம்
கள்ளிபாளையம்
நாச்சிபாளையம்
பெரியகுயிலி
வண்ணாந்துறைபுதூர்
காட்டுப்புத்தூர்
சூலூர்
பேதாம்பட்டி
இடையர்பாளைம்
முத்துகவுண்டனூர்
நெருப்பெறிச்சில்
பூலுவபட்டி
கணியலம்பூண்டி
சாவடிபாளையம்
சாமாரப்பட்டி

## அவிநாசி வட்டம்

எல்லப்பாளையம்
கஞ்சப்பள்ளி
ராக்கியாபாளையம்
கதவமுதலியூர்
கள்ளபாளையம்
கதவகரைஅம்மன் கோயில்
கனியம்பூண்டி
மொண்டிபாளையம்
முரியாண்டான் பாளையம்
பெள்ளிபாளையம்
காமநாயக்கன்பாளையம்
ஓலகடம்சேவூர்

## திருப்பூர் வட்டம்

வீரபாண்டி
கொடுவாய்
திருப்பூர்
கண்டியன் கோயில்
முத்தாம்பாளையம்
பூலூவபட்டி

## பொள்ளாச்சி வட்டம்

ஆச்சிப்பட்டி
செட்டிப்பாளையம்
ஆனைமலை
காட்டாம்பட்டி

| | |
|---|---|
| நாட்டுக்கல் பாளையம் | பொள்ளாச்சி |
| சிங்காநல்லூர் | அம்பராம்பாளையம் |
| தாத்தூர் | காளியாபுரம் |
| கோடங்கி பாளையம் | குள்ளக்காபாளையம் |
| மெட்டுவாவி முத்தூர் | நெருப்பெறிச்சில் வகுத்தாம் பாளையம் |

உடுமலை வட்டம்

| | |
|---|---|
| கொங்கல் நகரம் | பூண்டி |
| அமராவதி அணை | சத்திகரடு |
| சின்னூத்து | கணியூர் |
| காரத் தொழு | மூங்கில்தொழு |
| படையாச்சிபுதூர் | ருத்தரம்பாளையம் |
| சோமவாரபட்டி | நானிபாளையம் |
| தெரிலிங்கை | வாகைத்தொழு |

## 3. கோவை மாவட்டத்தில் நடுகற்கள் உள்ள இடங்கள்

கோவைட்டம்

1. பேரூர் - இவ்வூரில் கி.பி.16ஆம் நூற்றாண்டைச் சார்ந்த நடுகல் உள்ளது. போர்வாளுடன் வீரன் உள்ளான்

2. தொண்டாமுத்தூர் - இவ்வூரில் கி.பி.17ஆம் நூற்றாண்டச் சார்ந்த நடுகல் உள்ளது. புலிக்குத்திகல்

அவிநாசி வட்டம்

1. அன்னூர் - நடுகல் வீரன் தன்னுடைய கையில் போர் வாளுடன், ஒரு குறுவாள் இடுப்பில் தொங்கிய நிலையிலும் காட்சியளிக்கின்றான். இந்த நடுகல் கி.பி.15ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும்.

2. சேவூர் - இவ்வூரில் கி.பி.16ஆம் நூற்றாண்டைச் சார்ந்த புலிக்குத்திக்கல் உள்ளது. ஒருவீரன் புலியைக் குத்துவது போன்ற அமைப்பில் உள்ளது.

மேட்டுப்பாளையம் வட்டம்

1. சிறுமுகை - சிறுமுகையில் கூத்தக்குடி என்ற இடத்தில் கி.பி.17ஆம் நூற்றாண்டைச் சார்ந்த ஐந்து நடுகற்கள் உள்ளன

2. பெள்ளாதி - இவ்வூரிலுள்ள நடுக்கல்லில் ஒருவீரன் பன்றியைக் குத்துவது போன்று உள்ளது. இக்கற்சிற்பத்தைப் பன்றிக்குத்திப்பட்டான் கல் என்றழைக்கின்றனர். இது கி.பி.17ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும்.

பல்லடம் வட்டம்

1. கொடுவாய் - இவ்வூரில் உள்ள நடுகல் கி.பி.16ஆம் நூற்றாண்டைச் சார்ந்த புலிக்குத்தி கல் ஆகும்.

2. மூப்பேரிபாளையம் - இவ்வூரில் உள்ள நடுகல் ஒருவீரன் புலியைக் குத்துவது போன்று உள்ளது. இடுப்பில் குறுவாள் தொங்குகின்றது. தலையில் தலைப்பாகை அணிந்துள்ளான். இந்த நடுகல் கி.பி.17ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது.

3. பெரியகுயிலி - இவ்வூரிலுள்ள நடுகல் வீரன் புலியை குத்துவது போன்று உள்ளது. இந்த நடுகல் கி.பி.16ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது.

## 4. கோவை மாவட்டத்தில் சமணத்திருத்தலங்கள்

| | |
|---|---|
| பொங்கலூர் | ஆழியாறு |
| தேவனாம்பாளையம் | களந்தை |
| திருமூர்த்திமலை | சர்க்கார் சாமக்குளம் |
| | ஆலத்தூர், பொள்ளாச்சி |

## 5. கோவை மாவட்டத்தில் ஆட்சி செய்த அரசுகள்

| | | |
|---|---|---|
| சேரமன்னர்கள் | - | சங்ககாலம் |
| கங்கர்கள் - பாண்டியர் | - | கி.பி.ஒன்பதாம் நூற்றாண்டுவரை |
| இடைக் கால சேரர்கள் | - | கி.பி. பத்தாம் நூற்றாண்டு வரை |
| சோழர்கள் | - | கி.பி.10, 11ஆம் நூற்றாண்டுகள் |
| கொங்குச் சோழர்கள் | - | கி.பி.14ஆம் நூற்றாண்டு வரை |

| | | |
|---|---|---|
| கொங்கு பாண்டியர்கள் | - | கி.பி.14ஆம் நூற்றாண்டு |
| ஹொய்சாளர்கள் | - | கி.பி.14ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி |
| விஜயநகரர் | - | கி.பி.14-16ஆம் நூற்றாண்டு |
| நாயக்கர்கள் | - | கி.பி.17 மற்றும் 18ஆம் நூற்றாண்டு |
| பிரித்தானியர் | - | கி.பி.18முதல் 19ஆம் நூற்றாண்டு |

## 6. கோவை மாவட்ட வரலாற்றுச் சிறப்புடைய கோயில்கள்

| சிவாலயங்கள் | வைணவத் தலங்கள் |
|---|---|
| பேரூர் | சிங்காநல்லூர் |
| திருமுருகன் பூண்டி | வெள்ளாலூர் |
| குமரலிங்கம் | பெருமாநல்லூர் |
| அன்னூர் | இடிகரை |
| அவிநாசி | சூலூர் |
| கொழுமம் | சேவூர் |
| ஆனைமலை | மொண்டிபாளையம் |
| கொடுவாய் | பொள்ளாச்சி |

## 7. கோவை மாவட்ட கிராம தெய்வங்கள்

1. மாசானியம்மன் - ஆனைமலை, 2 கோணியம்மன் கோவில் - கோவை, 3. வாழை தோட்டத்து அய்யன்கோவில், 4.வெள்ளியங்கிரி ஆண்டவர், 5. தென்கரை அப்பிச்சிமார் கோவில், 6. கூத்தாண்டவர் கோவில் - சிங்காநல்லூர் ஆகிய கோயில்கள் குறிப்பிடத்தக்கவை.

முனியப்பன், கருப்பண்ணன், ஐய்யனார், அண்ணன்மார், மாரியம்மன், காளியம்மன், பிடாரியம்மன், வீரமாத்தி, பொங்கியம்மன், துர்க்கையம்மன், கன்னிமார் ஆகிய கிராம தெய்வங்களின் கோயில்களும் உள்ளன.

### 8. கொங்கு இருபத்து நான்கு நாடுகள்

| | |
|---|---|
| 1. தென்கரை நாடு | 2. காங்கேய நாடு |
| 3. பூந்துறை நாடு | 4. அரையநாடு |

5. வெங்கலநாடு
6. தட்டையநாடு
7. கிழங்க நாடு
8. குறுப்பு நாடு
9. காவாடிக்கா நாடு
10. வடபரிசார நாடு
11. தணியநாடு
12. வடகரை நாடு
13. அண்டநாடு
14. வைகாவூர்நாடு
15. பொங்கலூர்க்காநாடு
16. பூவாணிய நாடு
17. வாயறைக்காநாடு
18. ஆரைக்கால் நாடு
19. நறையினூர் நாடு
20. மேல்கரைப்பூந்றை நாடு
21. கீழ்க்கரைப்பூந்துறை நாடு
22. காஞ்சிகோவில் நாடு
23. ஒடுவங்காநாடு
24. நல்லூர்க்காநாடு

## 9. கோட்டைகளும், கோட்டைமேடுகளும்

கோயம்புத்தூர் கோட்டை என்பது தற்போதைய கொட்டைமேடு பகுதியாகும். இக்கோட்டை சோழர்கள் காலத்தில் அமைந்ததாகும். கி.பி.14ஆம் நூற்றாண்டில் விஜயநகர மன்னர்களாலும், மதுரை சமஸ்தானங்களாலும் கோயம்புத்தூர் கோட்டை சிறப்படைந்தது. ராயர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்த காலத்தில் இக்கோட்டை கெடி என அழைக்கப்பட்டது. ராயர்களின் முப்பது கெடிகளுக்குக் கோயம்புத்தூர் கோட்டை முக்கிய இருப்பிடமாகவும், பாளையப்பட்டாகவும் இருந்துள்ளது. கோயம்புத்தூர் ''கெடி'' என்பது காவல்படை மிகுந்த ஊர், என்பதை குறிப்பதாகும். இன்றைய கோட்டைமேடு கி.பி.13ஆம் நூற்றாண்டில் உருவாக்கப்பட்டு கி.பி.17ஆம் நூற்றாண்டில் பிரித்தானியரால் அழிக்கப்பட்டுள்ளது. 400 ஆண்டுகள் நிலைத்துநின்ற கோட்டையானது திப்பு சுல்தானுக்கும் ஆங்கிலேயரும் ஏற்பட்ட போரில் தரைமட்டமானது.

பிற இடங்கள் - பெள்ளாதி, அன்னூர் ஜெயின்கல் துர்க்கம், கருடன்கோட்டை, மார்ச்சதாயக்கன் பாளையம், ஊத்துக்குழி, கொழுமம் முலியனவாகும்.

## 10. கோவை மாவட்டத்தில் கிடைக்கப்பெற்ற நாணயங்கள்

கோவை வாணிகத்தில் சிறப்புற்றிருந்தமையால் இங்கு பழங்காசுகள் மிகுதியாகக் கிடைக்கப்பெற்றுள்ளன. கல்வெட்டுகளில், ஆனைஅச்சு, பழஞ்சாலகை, இடைச்சாலகை, புதுச்சாலகை, ஸ்ரீயக்கி பணம், கழஞ்சு, வராகன் எனக் காசுகள் குறிப்பிடப்படுகின்றன. இக்காசுகள் இல்லாமல் கோவை மாவட்டத்தில் சோழர்காசு, சேரர் காசு, பாண்டியர் காசு, ரேமானியர் காசுகளும் கிடைக்கப் பெற்றுள்ளன.

### உரோமானியக் காசுகள்

வெள்ளலூரில் கி.பி.1842 ஆம் ஆண்டு முதல் பூமிக்கடியில் பானைகளில் 1213 காசுகள் கிடைத்தன. இக்காசுகள் அகஸ்டஸ், திபிரியெஸ் காலகனளத்தைச் சார்ந்தவையாகும்.

பொள்ளாச்சி வட்டத்தில் ''பட்டளை'' என்ற கிராமத்தில் கி.பி.1800-ல் பூமிக்கடியில் பானையில் ரோமன் நாட்டு நாணயங்கள் அகஸ்டஸ், திபெரியஸ் நாணயங்கள் கிடைக்கப்பெற்றுள்ளன.

பல்லடம் வட்டடத்தில் உள்ள சாவடிபாளையத்தில் பெருங்கற்காலசின்னத்தில் மண்குடுவையில் ''முத்திரை'' நாணயங்கள் கிடைக்கப்பெற்றுள்ளன. பொள்ளாச்சி வட்டத்தில் உள்ள அகிலாண்டபுரத்தில் கி.பி.1941ல் ''ரோமன் வெள்ளி'' நாணயங்கள் 30 கிடைக்கப்பெற்றுள்ளன.

உடுமலைப்பேட்டை வட்டத்தில் உள்ள வடக்கு பூதி நத்தத்தில் ரோமன் வெள்ளி நாணயங்கள் 1398 கிடைக்கப்பெற்றுள்ளன.

பொள்ளாச்சி வட்டத்தில் உள்ள வாசம்பாளையத்தில் 48 முத்திரை மற்றும் ரோமன் நாணயங்கள் கிடைக்கப்பெற்றுள்ளது.

ஆனைமலைக்கருகில் சிங்காநல்லூர் என்ற இடத்தில் திப்பிரிசியஸ் காலத்து ரோமன் நாட்டு நாணயங்கள் 40 பூமிக்கடியிலிருந்து கிடைக்கப்பெற்றுள்ளது

## 11. கோவை மாவட்டத்தில் தொல்பழங்கால ஓவியங்கள்

எழுத்து அறிவுதோன்றுவதற்குமுன் வாழ்ந்த மனிதன் தன்னுடைய எண்ணங்களையும் உணர்வுகளையும் மற்றவர்க்கு

உணர்ந்த சைகைகள்மூலம் வெளிப்படுத்தினான். பின்னர் ஓவியங்கள் மூலமாகத் தன்னுடைய எண்ணங்களை மற்றவர்களுடன் பகிர்ந்துகொண்டான். குறிப்பாகத் தமிழகத்தில் இவ்வோவியங்கள் பெரும்பாலும் பெருங்கற்காலத்துடன் தொடர்புடையவைகளாக இருக்கின்றன. இவ்வோவியங்கள் தமிழகத்தில் கிருஷ்ணகிரி, விழுப்புரம், மதுரை, நீலகிரி, தருமபுரி, போன்ற மாவட்டங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. கோவை மாவட்டத்திலும் தொல்பழங்கால ஓவியங்கள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன.

*குமிட்டிபதி* கோவையிலிருந்து சுமார் 20 கி.மீட்டர் தெற்கில் உள்ளது. இங்கு தொல்பழங்கால குகைஓவியம் பதிமலையின் குகையில் உள்ளது. பாறை ஓவியத்தில் குதிரையில் வீரர்கள் அமர்ந்து சவாரி செய்வது போன்றும், யானையின்மேல் அமர்ந்து சவாரி செய்வதுபோன்றும், சூரியன் உதிப்பது மற்றும் தேர் ஒன்று அலங்கரிக்கப்பட்ட நிலையிலும் வரையப்பட்டுள்ளன. இந்த ஓவியங்கள் யாவும் வெள்ளை நிறத்தில் (White ochre) வரையப்பட்டுள்ளன. கி.மு.மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்தவையாக இருக்கலாம்.

*வேட்டைக்காரன்மலை* தொண்டாமுத்தூர் பகுதியில் உள்ளது. இங்கும் தொல்பழங்காலப் பாறை ஓவியங்களில் பல்வேறுபட்ட விலங்குகள், விலங்குகளை வேட்டையாடுதல், குதிரைசவாரி, யானைசவாரி, பெண் உருவங்கள் மற்றும் ஆண் பெண் வட்டமாக நடனமாடுதல் போன்ற உருவங்கள் வெள்ளை வண்ணத்தில் (White ochre) தீட்டப்பட்டுள்ளன. இங்குள்ள தொல்பழங்கால ஓவியங்கள் கி.மு.ஐந்தாம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும். இவ்வோவியங்கள் 3000 அடி உயரத்தில் உள்ள குகையில் உள்ளன.

*கோவனூர்* கோவையிலிருந்து சுமார் 25 கி.மீட்டர் தொலைவில் உள்ளது. இவ்வூர் அருகில் உள்ள பாலமலையில் உள்ள அழகுநாச்சி அம்மன் கோயிலில் தொல்பழங்கால ஓவியம் உள்ளது. இந்தப் பழங்கால பாறை ஓவியத்தில் போர் காட்சிகள், விலங்கினங்களை வேட்டையாடுதல், சூரியனை வழிபடுதல் போன்ற காட்சிகள் வரையப்பட்டுள்ளன. இந்த ஓவியத்தின் காலம் கி.மு.4ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும்.

## 12. கோவை மாவட்டத்தில் நடைபெற்ற அகழாய்வுகள்

*பேரூர்* கோயம்புத்தூர் வட்டத்தில் தென்மேற்கே 8 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூர் காவிரியின் சிற்றாரான, நொய்யல் ஆற்றின் தென்கரையில் அமைந்துள்ளது. இவ்வூரில் 1970-71ஆம் ஆண்டில் மத்திய அரசு தொல்லியல் துறையினரால் அகழாய்வு. பணி மேற்கொள்ளப்பட்டது. இந்த அகழாய்வில் பேரூரில் மூன்று பண்பாட்டுகளின் பிரிவுகள் கண்டுபிடிக்கப்பட்டன. இவ்வகழ்வாய்வில் கி.பி.முதலாம் நூற்றாண்டைச்சார்ந்த கறுப்பு மட்கலன்களும் சிவப்பு மட்கலன்களும் கறுப்பு சிவப்பு மட்கலண்களும் கிடைக்கப்பெற்றுள்ளன. இரண்டாம் பண்பாட்டு பிரிவில் சங்கு வளையல்கள், கண்ணாடி, சுடுமண்பொம்மைகள், மணிகள், தங்கத்தினாலான மணிகள், சுடுமண் விலங்குகள், இரும்பு ஆணிகளும் கிடைத்துள்ளன. மூன்றாம் பண்பாட்டுபிரிவில் சுட்ட செங்கற்களால் கட்டப்பெற்ற சுவர்ப்பகுதிகளும், மண்ணில் புதைந்த சுடுமண் குழாய்களும், மண்ணால் பூசப்பட்ட தொட்டிகளும் கண்டுபிடிக்கப்பட்டன. இவ்வகழாய்வில் பேரூர் பண்பாடு முதல் நூற்றாண்டிலிருந்து ஒன்பதாம் நூற்றாண்டுவரை தொடர்ச்சியாக இருந்துள்ளதை அறிகிறோம்.

தமிழ்நாடு அரசு தொல்லியல்துறையினரால் 2002ஆம் ஆண்டு பேரூரில் சாம்பல்மேட்டுப் பகுதியில் அகழாய்வுப் பணி மேற்கொள்ளப்பட்டது. இவ்வகழாய்வில் வரலாற்றுகால கட்டிடடத்தின் அடிப்பகுதியும், வெவ்வேறுவகையான சுடுமண் பொம்மைகள், சுடுமண்ணால் செய்யப்பட்ட காதணிகள், பானைஓட்டில், வில், அம்பு பொறித்த சின்னங்களும், பல்வேறு கல்மணிகளும் சேகரிக்கப்பட்டுள்ளன.

*போளுவாம்பட்டி*

கோவைமாவட்டத்தில் உள்ள ஓர் சிற்றூர். இவ்வூரில் கோட்டைக் காடு என்ற பகுதியில் 1980ல் தமிழ்நாடு அரசு தொல்லியல்துறையினரால் அகழாய்வு மேற்கொள்ளப்பட்டது. இந்தக் கோட்டைக்காடு அகழாய்வில் சுடுமண்ணால் செய்யப்பட்ட முத்திரை கிடைக்கப்பெற்றுள்ளது. சுடுமண் முத்திரையில் வில், புலி, மீன்,

உருவங்களுடன் ''வர்மனஹ'' என்ற பெயர் காணப்படுகின்றது. இது அரசனின் பெயராக இருக்கலாம் என்று கருதப்படுகின்றது. சேர, சோழ, பாண்டியரின் இலச்சினை மேற்குறித்த முத்திரையில் உள்ளது. இவ்வகழாய்வில் அரியகல்மணிகள், சுடுமண்ணாலான மணிகள், தந்தத்திலான வளையல்கள், விலங்கின எலும்புகள் ஆகியவை கண்டுபிடிக்கப்பட்டன. போளுவாம்பட்டி அகழாய்வின்மூலம் கி.பி.5 அல்லது 6ஆம் நூற்றாண்டைச்சார்ந்த ''இயக்கன்'' என்னும் சிறுதெய்வத்தின் சுடுமண்பொம்மைகள்பல கிடைக்கப்பெற்றுள்ளன. இவ்வகழாய்வு மூலம் போளுவாம்பட்டி வரலாற்றுத் தொடக்கக் காலத்திலிருந்தே சிறந்த நாகரிகத்தினைக் கொண்டு விளங்கியமை வெளிப்படுகிறது. அகழ்வாய்வில் கிடைத்த இரண்டு பானை ஓடுகள் சிறப்பானவை. 1.'ரன் கொற்றி' என்ற எழுத்துப் பொறிப்புள்ளது. இது கி.பி.3ஆம் நூற்றாண்டு பிறகாலத்தமிழ் - பிராமி வகையைச் சேர்ந்தது. 2. 'ங்குப்பை விற்றி குழி' அல்லது 'ங்குசபைவிற்றி குழி' என்ற எழுத்துப் பொறிப்புள்ளது. இது கி.பி.5-6ஆம் நூற்றாண்டு வட்டெழுத்தாகும்.

*ஆனைமலை*

கோவைமாவட்டம் பொள்ளாச்சி வட்டத்தில் ஆனைமலை கிராமம் உள்ளது. ஆனைமலை பகுதியில் உள்ள மானாம்பொழி என்ற ஊரில் ஆழியாறு திட்டத்திற்காக பொதுப்பணித்துறை பணி மேற்கொண்டபொழுது பெருங்கற்காலத்தைச் சார்ந்த கற்பதுக்கை ஒன்றுவெளிப்பட்டது. இதனைத் தொடர்ந்து தமிழ்நாடு அரசு தொல்லியல்துறையினர் இந்தப் பெருங்கற்காலக் கல்பதுக்கை சின்னத்தை அகழாய்வு செய்த பொழுது இறந்தவர்களுக்கு வைத்துவணங்கும் சில தொல்லியல் சான்றுகள் (Antiquties) கிடைக்கப்பெற்றுள்ளன.

*சிறுமுகை*

*சிறுமுகை* மேட்டுப்பாளையம் வட்டத்திலுள்ள ஊராகும். இவ்வூரில் பெருங்கற்கால சின்னம் ஒன்றை அகழ்ந்ததில் மண்டை ஓடுகளும், கருப்பு, சிவப்பு, மற்றும் கருப்பு மட்பாண்டங்களும் நான்கு

கால்களுடன் கூடிய தாழிகளும் கிடைத்தன. ஈமச்சின்னத்தின் மேற்பரப்பில் கல்வட்டங்கள் காணப்படுகின்றன. கல்வட்டங்கள் அடிப்பரப்பில் தாழிகளும், ஈமப்பேழைகளும் காணப்படுகின்றன. மட்கலன்களில் குறிப்பிடத்தக்கவை கின்னஙகள், குடுவைகள் போன்றவைகளாகும். கால்களுடன் கூடிய ஜாடி ஒரு கல்வட்ட ஈமச்சின்னத்தில் வெளிப்பட்டுள்ளது.

*கன்னாறுபாளையம்*

இவ்வூர் மேட்டுப்பாளையம் வட்டத்தில் உள்ளது. இங்குள்ள பெருங்காலத்துக் கல்லறைகளில் இடுதுளை காணப்பட்டது. இதனுள் முதுமக்கள்தாழி, நான்குகால்களுடன் கூடிய ஜாடி கூம்பு வடிவ மட்கலன்கள், தாங்கிகள் போன்றவை கிடைத்துள்ளன. சுடுமண்ணாலான குடுவை ஒன்று குறுகிய மூக்குடன் காணப்பட்டது. இது ஓர் உடுக்கை போன்ற இசைக்கருவியாக இருக்கலாம் என்றுதொல்லியல் வல்லுநர்கள் கருதுகின்றனர்.

*கணியம்பூண்டி*

இவ்வூர் அகழாய்வு பணி மேற்கொண்டபொழுது அகழாய்வுக் குழியில் பெருங்கற்காலத்தைச்சார்ந்த உருளைகளும் அரைக்கோள வடிவ மட்பாண்டங்களும், கிண்ணங்களும், வட்டவடிவ தாங்கிகளும் கிடைக்கப்பெற்றுள்ளன.

*சூலூர்*

கோவை மாவட்டத்தில் உள்ள ஊர் சூலூர் ஆகும். இங்குப் பெருங்கற்கால ஈமச்சின்னமொன்றை அகழாய்வு பணி மேற்கொண்டபொழுது கற்பதுக்கையின் உள்ளே காவிகலவை பூசப்பட்ட மட் கலங்களுடன் செம்பு நாணயம் கிடைத்துள்ளது. இந் நாணயம் இரான் வகை நாணய அமைப்பை ஒத்திருந்தது. இவ்வகை நாணயம் மத்திய பிரதேசத்தில் ஏரான் என்ற இடத்தில் கிடைத்துள்ளமையால் இப் பெயர் பெற்றுள்ளது. பெருங்கற்கால சின்னத்தில் இந்நாணயம் கிடைப்பது கற்பதுக்கையின் காலத்தை அறிவதற்கு மிகவும் உதவியாக இருந்துள்ளது.

*செட்டிப்பாளையம்*

கோவை வட்டத்தில் உள்ள ஊராகும். இங்குள்ள பெருங்கற்கால சின்னத்தினை அகழாய்வு செய்யும்பொழுது வழவழப்பான கருப்பு மட்கலன்கள் பெருமளவில் கிடைத்துள்ளன. மற்றும் செப்புக்கிண்ணமொன்று மூடியுடன் கிடைத்துள்ளன. இம் மூடி அழகான முறையில் ஆட்டுருவம் கொண்டு செய்யப்பட்டுள்ளது. இதேபோன்று ஆதிச்சநல்லூரில் வெண்கலப்பாத்திரத்தில் உருவம் உள்ளது கண்டறியப்பட்டது.

## 13. கோவை மாவட்டத்தில் கல்வெட்டுள்ள ஊர்கள்

*அவினாசி வட்டம்*

| | |
|---|---|
| அவினாசி | அன்னூர் |
| ஆலத்தூர் | ஆனூர் |
| இரும்பரை | கஞ்சப்பள்ளி |
| கருவலூர் | கரியாக்கவுண்டனூர் |
| சேவூர் | திருமுருகன் பூண்டி |
| நடுவச்சேரி | பழங்கரை |
| பெருங்கருணைப்பாளையம் | மருதுறை |
| வேலாயுதம் பாளையம் | மொக்கனீஸ்வரர் |
| (இராமநாதபுரம்) | |

*உடுமலைப்பேட்டை வட்டம்*

| | |
|---|---|
| கடத்தூர் | கண்ணாடிபுத்தூர் |
| காரத்தொழு | குடிமங்கலம் |
| குமரலிங்கம் | சங்கராமநல்லூர் (கொழுமம்) |
| சோமவாரபட்டி | சோழமாதேவி |
| தழிஞ்சி | திருமூர்த்திமலை |
| ருத்திரம்பாளையம் | ஜோதிபுரம் |

*கோயம்புத்தூர் வட்டம்*

இக்கரைபோளுவாம்பட்டி
இடிகரை
ஒற்றைக்கால் மண்டபம்
கணபதி
கோயம்புத்தூர்
சிங்காநல்லூர்
சுண்டக்காமுத்தூர்
தேவராயபுரம்
துடியலூர்
பேரூர்
மருதமலை
விராலியூர்

*பல்லடம் வட்டம்*

அபிஷேகபுரம்
அழகுமலை
இருகூர்
கண்டியமங்கலம்
சாமனாபுரம்
சூலூர்
செலக்கரிச்சல்
நல்லூர்
பட்டணம்
பெருந்தொழுவு
பெருமாநல்லூர்
மலைப்பாளையம்
மேற்குப்பட்டி

*மேட்டுப்பாளையம் வட்டம்*

இரும்பறை
இலுப்பநத்தம்
குமார கவுண்டன்பாளையம்
பெள்ளாதி
மருதூர்
வெள்ளியங்காடு

*பொள்ளாச்சி வட்டம்*

ஆனைமலை
கரப்பாடி
குள்ளிச் செட்டிபாளையம்
சமத்தூர்
புத்தெரிச்செல்
பட்டணம்
பெரியகளந்தை
பொள்ளாச்சி

## 14. கோவை மாவட்டத்துக் கல்வெட்டுகள் சில

1. அவிநாசி பெருங்கருணாம்பிகை கோயில் அர்த்த மண்டப வடக்குச் சுவரில் உள்ளது கல்வெட்டு. கோனேரின்மை கொண்டான் (வீரராசேந்திரன்) கி.பி.1222 நாள் 322 அரசனின் கருவூலத்தில் முதலிட்டு (Deposit) வைத்த பாப்பார் சான்றார்க்குப் பல்வேறு சிறப்பு உரிமைகள் வழங்கப்பெற்றன. அவற்றுள் சீனக்குடை பிடித்துக்கொள்ளும் உரிமை குறிப்பிடத்தக்கது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவந சக்கரவர்த்தி கோநேரிந்மை கொண
2. டாந் வடபரிசார நாட்டிற் பாப்பார் சாந்றாற்கு நம்மோலைகுடு
3. த்தபடியாவது இவர்கள் நம் சரக்குக்குப் பொருள் வைத்தமை
4. யில் இவர்களுக்கு நாம் குடுத்த வரிசையாவது மேலே
5. ற்றமந்துலாகமுங் கிழேற்றங்குதிரையுந் தழையுஞ்
6. சீனக்குடையுஞ் சேகண்டியும் பெற்று வருவார்களாக
7. வும் மைச்சுக்கு சாந்திடப் பெறுவர்களாகவும் இரட்டை
8. த்தலைக்கடைக்குக் கோற் கட்டிக் கொள்ளப் பெறுவா(ர்)
9. களாகவும் படைக்கணிக்கு ஆரம் பூணப் பெறுவார்களாகவு
10. ம் பச்சைப்பிடாம் போர்க்கப் பெறுவார்களாகவுத் தங்
11. கள் மக்களுக்குப் பொந்நிந் காறை கட்டப்பெறுவார்கள
12. ாகவும் கல்லியாணத்துக்கு கட்டணங்கட்டிலேறி ஊர்
13. சூழப் பெறுவார்களாகவும் இவ்வரிசைகள் இவர்கள் மக்கள்
14. மக்களுக்கு சந்திராதித்தவரை செல்வதாகவும் இப்படி செ
15. சம்பிலுஞ் சிலையிலும் வெட்டிக் கொள்ளப் பெறுவார்கள
16. ாகவும் நம்மோலை குடுத்தோம் இவை எல்லாம் வல்ல சோ
17. ழமூவேந்த வேளாந் எழுத்துயாண்டு பதிநஞ்சாவது
18. நாள் முந்நூற்றிருபத் திரண்டிநால் இப்படிக்கு வாண
19. ராய தேவந் எழுத்து.

2. சேவூர் அழகப்பெருமாள் கோயில் கருவறை - தென்புறம் உள்ள கல்வெட்டு சுந்தரபாண்டியன் (யா.24) கி.பி.1276. சேவூர் திருமேற்கோயிலுக்கு உத்தரப்படை எழுத்தகப்படை ஆகிய கட்டடப் பகுதிகளை விடைப்பேரில் மலையாளரும், ஆரிவாரும் கன்னடியரும், தெலுங்கரும் சவளக்காரரும் தன்மமாகச் செய்து கொடுத்தனர்.

1. ஸ்வஸ்திஸ்ரீ கொற்சடபன்மரான திரிபுவனச்
2. சக்கரவத்திகள் சிரிசுந்தரபாண்டிய தே
3. வற்குத் திருவெழுத்திட்டுச் செல்லா நின்
4. ற திருநல்லியாண்டு 24 வது வடபரிசா
5. ர நாட்டுச் சேவூரான செம்பியன் கிழானடி
6. நல்லூர்த் திருமேற்கோயில் நாயினார் அழக
7. ப் பெருமா(ள்) கோயிலுக்கு உடையார் அ
8. திகைமானானார் நா(ளி)ல் விடை(ட)ப்பெரில் மலை
9. யாளரும் ஆரிவாரும் குன்(னா)டியரும் தெலுங்கரு
10. ம் சவளக்காறரும் செய்வித்த படை உத்தரமும்
11. எழுத்தகமும் இரண்டு படையும் இவர்கள் த
12. ன்மம்

3. சேவூர் அழகப்பெருமாள் கோயில் அர்த்தமண்டப தென்புற அதிட்டானத்தில் உள்ள கல்வெட்டு. இராசகேசரி வீரபாண்டியன் (யா.15) கி.பி.1280 சேவூர் வெள்ளாநாட்டாரும் பூலுவ நாட்டாரும் அழகப்பெருமாள் அமுதுபடி உள்ளிட்ட விஞ்சனங்களுக்கு திருவிடையாட்ட இறையிலியாக காரையப்பாடி என்ற ஊரை நீர் வார்த்துக் கோயில் நம்பிமார் ஸ்ரீவைஷ்ணவர்களிடம் கொடுத்தனர். நான்கெல்லைக்குட்பட்ட நன்செய், புன்செய் முதலியவற்றால் கிடைக்கும் வருவாயால் இக்காரியங்கள் நடைபெற ஏற்பாடாயிற்று.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோவிராச கேசரி பன்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ வீரபாண்டிய தே(வற்)கு யாண்டு 15ஆவது வடபரிசார நாட்டுச் சேவூரான செம்பியன் கிழாநடி நல்லூர் நாயனார் அழ

2. கம் பெருமாளான சுந்தரபாண்டிய விண்ணகர எம்பெருமாள் கோயில் நம்பிமாற்கு ஸ்ரீவைஷணவர்களுக்கும் இன்னாட்டு வேள்ாநாட் டோமும் பூலுவ நாட்டோமும் பிடிபாடு குடுத்த பரிசாவது இ

3. ன்னாயனாற்கு அமுதுபடி உள்ளிட்ட விஞ்சனங்களுக்குத் திருவிடையாட்ட இறையிலி ஆக15ஆவது முதல் குடிஏற்றிக் கொள்வதாக நாங்கள் நீர் வார்த்துக் குடுத்த காரையப்பாடி நான்கெல்லைக்குட்பட்

4. ட நிலமு நஞ்செய்புன்செய்கிணறு தோட்டம் எப்பேறபட்ட நிலமும் 15வது முதல் குடி ஏற்றிகொள்ள செம்பிலுஞ் சிலையிலும் வெட்டிக் கொள்வாராகவும் நாட்டவர் சொல்லிப் பணிக்

5. க இப்படிக்கு நாட்டுக் கணக்கு மன்னியூராண்டான் எழுத்து

4. சேவூர் அழகப்பெருமாள் கோயில் கருவறை மேற்குச்சுவரில் உள்ள கல்வெட்டு (வீரபாண்டியன் - கி.பி.1284). வடபரிசார நாட்டு வியாபாரிகள் சுந்தரபாண்டியன் விண்ணகர அழகப்பெருமாளையும் நாச்சியாரையும் தங்கள் தன்மமாக எழுந்தருளச் செய்தனர்.

1. ஸ்வஸ்தஸ்ரீ விரபாண்டிய தெவற்குத் திருவெழுத்திட்டுச் செல்லா நின்ற திருநல்லியாண்டு பத்தொன்பதாவது ஆவணி மூ30 ந்தியதி வடபரிசார நாட்டு வி

2. யாபாரிகளொம் மெற்படி நாட்டில் செவூரான செம்பியன் கிழானடி நல்லூர் திருமேற்கோயில் நாயினார் அழகப் பெருமாளான சுந்தரபாண்டிய விண்ணகர எ

3. ம் பெருமான் கொயிலில் மணவாள ஆழ்வாரையும் நாச்சி மாரையும் எங்கள் தந்மமாக எழுந்தருளி வித்தொம் வடபரிசார நாட்டு வியாபாரிகளொம் ஸ்ரீ வயிற்று வை

4. (ஷ்)ணவரக்ஷை

5. சேவூர் அழகப்பெருமான் கோயில் அர்த்தமண்டப வடக்கிலுள்ள இணைப்புக்கோயிற் சுவரின் மூன்று பக்கங்களிலுமுள்ள கல்வெட்டு. சுந்தரபாண்டியன் (யா.27) கி.பி.1304. இதுவும் முன்புள்ள கல்வெட்டுப்போல மன்றத்திலிருந்து புன்செய் தோப்புநிலம் விலைப்பிரமாணம் செய்தது பற்றியது. சிறுவன் ஆண்டான் மேற்படி கோயில் ஸ்ரீசேனாபதி ஆழ்வாற்கு மண்ணறுதியாக விற்ற நிலத்தின் நான்கு எல்லைகளும் கூறி, ஆழிக்கல் நட ஏற்பாடாயிற்று.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோற்சடபன் மரான திரிபுவனச் சகரவத்திகள் ஸ்ரீசுந்தரபாண்டிய தேவற்குத் திருவெழுத்திட்டுச்செல்லாநின்ற திரு நல்லியாண்டு 27 வது சித்திரை மாத முதல் மதினாள் பக்கம் பஞ்சமினாள் மூலங்கி

2. ழமை வெள்ளிப்பொழுது இந்நாளிது பருவமாக வடபரிசார நாட்டுச் சேவூரான செம்பியன் கிழானடி நல்லூரில் மன்றத்திருந்து மன்றறியிச் செய்த புன்செய் தோப்பு நிலப்பிரமாணமாவது இவ்வூர் வெள்ளாழன் கொம்....

3. மையரில் சிறுவன் ஆண்டான் இவ்வூர் திருமேற்கொயில் அழகப் பெருமாள் விண்ணகர எம்பெருமான் கோயில் ஸ்ரீசேனாபதி ஆழ்வாற்கு நான் மண்ணறுதியாக விற்ற புன்செய் தோட்டத்துக்கு எல்லையாவது மேல் பாற்கெல்லை

4. சங்காழ்வான் குளத்தில் வயலுக்கு கிழக்கும் வடபாற்கெல்லை சங்காழ்வான் குளத்தில் வயலுக்குத் தெற்கும் கீழ்பாற்கெல்லை தென்னவன் தட்டான் தோட்டத்துக்கு மேற்கும் தென்பாற்கெல்லை சிறுவன் ஆண்டானும் அவ

5. ல்லாளப்பெரும் தோட்டத்துக்கு வடக்கும் இந்நான் கெல்லைக்குள்பட்ட நிலமும் மேமேனாக்கிய மரமும் கீணோக்கிய கிணறும் மற்றும் எப்பெற்பட்டன (சகல)

6. பிராப்திகளும் உட்பட விற்று இதுக்கு எம்மிலி சைந்த விலைப்பொருள் அன்றாடு வராகன் பள்ளிக்குளிகை பணம் 300 இப்பணம் முன்னூறும் கொண்டு இத்தோப்பில் எப்பேற்பட்ட உரிமைகளுட்பட மண்(ண)றுதியாக விற்று பொருளறக் கைக்கொண்டு விற்று விலைப்பிரமாணம் ப(ண்)ணிக்குடுத்தோம் இப்படி

7. க்குச் செம்பிலுஞ் சிலையிலும் வெட்டி இத் தோட்டத்தில் வாழிக்கல்லும் நாட்டிக் கொள்ளக் கடவதாகவும் இப்படி சம்மதித்து புன்செய்த் தோட்டம் நிலவிலைப் பிரமாணம் பண்ணிக் குடுத்தேன் சிறுவ

8. ன் ஆண்டானேன் அழகப் பெரு மாள் விண்ணகர எம்பெருமான் கோயில் ஸ்ரீசேனாபதி ஆழ்வாற்கு. இப்படிக்கு சிறுவன் ஆண்டான் எழுத்து செவூர் வெள்ளாழன் வகையில் இவர் கேசன்

9. ஆண்டான் எழுத்து இ(ப்படிக்)கு வடபரி(சாரநாட்டு...ல்லூர் வெள்ளாழன் வெள்ளெலிகளில் சொக்கன் சொக்கன் எழுத்து இப்படி அறிவேன் சேவூர் வகையில் பிள்ளை சுகேசன் ஆண்டான் எழுத்து இப்படி அறிவேன்

10. சேலூர் .... கான் எழுத்து இப்படிக்கு முடிகொண்(ட) காமிண்டன் (எழுத்து) இப்படிக்கு....
இப்படிக்கு நடுவன் எழுத்து இப்படிக்கு....
(கடைசிவரிகள் சிதைந்துள்ளன)

6. கொழுமம் வீரசோழீச்சுரம் - மகாமண்டபத்தில் உள்ள கல்வெட்டு கோனேரின்மை கொண்டான் (வீரராசெந்திரன்?) சித்திரைத் திங்களில் பெற்ற மிகப் பெரிய வெற்றியைக் கொண்டாடத் தென்கொங்கின் உட்பிரிவு நாடுகளின் சாமந்ரகளும், கருமஞ்செய்வார்களும் ஊரார்களும் நெல்லும் காசும் கொழுமம் வீரசோழீச்சுரமுடையார் கோயில் தானத்தாரிடம் வழங்க ஆணை பிறப்பித்த செய்தி.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் கோனெரின்மை கொண்டான் ஆளுடையார் வீரசோளிஸ்வரமுடையார் கோயிற்தானத்தார்க்கு நம் ஓலைகுடுத்தபடியாவது பேரூர் செயங்கொண்ட சித்தி

2. ரைத் திருநாளைக்கு கீழாட்டிகள்(ளு)க்கு நெய்ப்பதின் கலம் நெல் முப்பதின்கலம் அச்சுநாலு சந்து விக்கிரஹம் இருபதின்கலம் அச்சு இரண்டு வைகாசி நாட்டுச் சாமந்து நெல் பந்நிருகலம்

3. அச்சு ஒன்றரையே யிரண்டுமா கரைவழி நாட்டு சாமந்து நெல் பதினெண்கலம் அச்சு ஒன்றரையே எட்டுமா கொழுமந்து சாமந்து நெல் இருபதின்கலம் அச்சுஇர

4. ண்டு பேரூர்நாட்டுச் சாமந்து நெல்பதின்கலமுமச்சு நாலு விரகேரள வளநாட்டுச் சாமந்து நெல்பதினெண்கலம் அச்சு ஒன்றரையே எட்டுமா நல்லூர்க்கால் நாட்டுச் சாமந்து

5. நெல்.....கலமும் அச்சு
6. நாலு ..... காவிடிக்கால் நாட்டு சா
7. மந்து நெல் இருபதின் கலம் அச்சு இரண்டு
8. வாயறைக் கால்நாட்டு நாட்டுக் கருமஞ்
9. செய்வார் நெல் இருபதின்கலம் ஏழூர் ஊ

10. ரார் நெல்ப் பதின்கலம் சோழமாதேவி
11. ஊரார் நெல் பதின்கலம் காரத்தொழு
12. வில் ஊராளி நெல் இருபதின்கலம் கடற்றூர்
13. ஊராளி நெல் இருபதின் கலம் ஆக நெல்மு
14. ன்னூற்றொருபத்தெண் கலமும் அச்சுஇரு
15. பத்தெட்டும்... அம வைகாவிநாடு கரைவழி
16. நாடு வீரகேளரளவநாடு பேரூர்நாடு நல்லூர்கா நாடு
17. காவிடிக்கா நாடு வாயறை
18. கால்நாடு ஆக நாட்டா
19. ....யாக முக்கலநெ.....கல.....இந்நாடு
20. களில் நாட்டுக்கருமஞ் செய்வார்களே தண்டி அழ
21. ப்பார்களாகவும் இந்நெல்லு மெண்ணையும் கெ
22. ாண்டு திருநாளெழுந் தருளுகையும்....
23. வ் வச்சுத் திருவாபரணத்துக்கு மொன்று
24. நாள்தெமானத்துக் கொண்டு.....

7. ருத்திராபாளையம் சிற்பக்கல்லில் உள்ள கல்வெட்டு விக்கிரமசோழன் (கொங்குச்சோழன்) கரை வழி நாட்டு இராஜராஜவளநாட்டில் பிரமதேயம் ஸ்ரீ உலகுடைய பிராட்டியச் சதுர்வேதி மங்கலம் என்ற புதிய ஊர் அமைத்து அவ்வூரைப் பாதுகாக்கும் பொறுப்பை இடங்கை தொண்ணூற்றெட்டுச் சமையத்தாரிடம் கொடுத்து, இவ்வூரில் வரும் வரிகளை இவர்களே பெற்றுக் கொள்ளவும் அரசன் ஆணை பிறப்பித்துள்ளான். இக்கல்வெட்டின் முன்பக்கத்தின் மேல் பகுதியில் திருவாட்சி, எருமைத்தலைமீது துர்க்கை, யாளி, அன்னம், இருபுறமும் குத்துவிளக்கு, குதிரை, சாமரம், கொம்பு ஊதும் கருவி, வளைதடி, அம்பு, கேடயம், மூன்று கலப்பைகள், செக்கு, குதிரை, கட்டில்மேல் புலி, நாகம் முதலியவைகள் உள்ளன.

**முன்பக்கம்**

1. ஸ்வஸ்திஸ்ரீ கோபரகேஸரி பன்மரான
2. திருபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ விக்கிரம
3. சோழ தேவற்குத் திருவெழுத்திட்டுச் செ
4. சல்லாநின்ற திருநல்லியாண்டு மூன்றாவ

5. தின் எதிர் கரை வழிநாட்டு இராஜராஜவ
6. ளநாட்டு பிரமதேயம் ஸ்ரீ உலகுடையபிரா
7. ட்டியச் சதுர்வேதிமங்கலமென்று...
8. ...ருமாள் பெரால் இடங்கை குளமாக
9. கட்டார்ரெ உங்கள் இடங்கை குளமாக

**பின்புறம்**

10. க்கைக் கொண்டு இகிராமம் நமக்கு இறுக்
11. குங் கடமையும் உங்களுக்கே கொற்றுக் கு
12. டுத்தூணாக தந்தோமென்று நாயனார் அருளிச்
13. செய்தருள நாங்களும் கிராமத்துகு நாயனார்
14. குடுத்தருளின ஸ்ரீ முகப்படி பெருநான்கெல்
15. லைக்குட்பட்ட அருவரை அத்தந் பேராலே
16. யும் விக்கிரசோழ தென்னாறுங்குளங்
17. களும் பிடாகைகளும் ஊர்களிலும் அழி
18. மை அந்நியாயம் புகுத்தின நாங்களு
19. ம் ஸபையும் கூட ஆராஞ்சு ஸபையா
20. ர்க்கு மேவத்திநது குடுப்போமாகவும்
21. இ கிராமத்திலும் பிடாகைகளிலும் கன்
22. று குண்டை கட்டிநார் உண்டாகில்
23. பன்றி ல் ஒன்றாக குத்தி தூக்குயிவாம
24. ாகவும் இகிராமத்துக்கு எங்கள் அத்தா...
25. குள்ள பரிசார முண்டாவுதாகவும் குத்தி
26. கிராமத்துக்குள்ளே புகந்தாற்க்கு ஏ
27. ழு நாளைக்கு பரிசார முண்டாவுதாகவும்
28. இப்பெருநான் கெலைக்குள்ப்பட்ட நில
29. ங்களு தோட்டங்களு அழிவு வாரா
30. மற் பரிசரிதுக் குடுப்போமாகவும் திருமுகப்படிக்
31. கு மேல்ப்பட்ட புகுந்தன நாயனார்க்கு விண்ணப்ப
32. ஞ் செய்து தீர்ந்துக் குடுப்போமாகவும் இப்படி இடங்
33. கை தொன்னூற்றெட்டுச் சமையமும் அமைஞ்சு
34. குடுத்தமைக்கு இவை சமைய கரணத்தாந்ட எழுத்
35. து இகிராமம் இடங்கை தொண்ணூற்றெட்டு ச
36. மையத்தார் ரகைக்ஷ
37. வாழ்க தந்திரத்தார்.

# கோயம்புத்தூர் வட்டாரத் தொல்லியல்ச் சின்னங்கள்





1. பொன்மோதிரம், கி.மு.முதல் நூற்றாண்டு, வெள்ளலூர்



2. பொன்மோதிரம், அணிகலன், கி.மு.முதல் நூற்றாண்டு, வெள்ளலூர்

3. பொன்தாயத்து, கி.மு.முதல் நூற்றாண்டு, வெள்ளலூர்









4. ரோமானியக் காசுகள்



5. குட்டுவன் கோதை காசு






6. ரோமானியக் குடியரசு வெள்ளிக் காசு, திருப்பூர்



7. ரோமானிய ஜாடி, அவிநாசி



8. வட்டடெழுத்துப் பொறித்த பானை ஓடு, கி.பி.5-6ஆம் நூற்றாண்டு, போளுவாம்பட்டி அகழாய்வு



9. மண்முத்திரை, கி.பி.6ஆம் நூற்றாண்டு, போளுவாம்பட்டி



10. சுடுமண் இயக்கன், கி.பி.7ஆம் நூற்றாண்டு போளுவாம்பட்டி



11. இடைக்காலச் சேரர் முத்திரை, கி.பி.10ஆம் நூற்றாண்டு, பேரூர்



12. முதுமக்கள் தாழி, ஐவர் மலை



14. தீர்த்தங்கரர், கி.பி.10ஆம் நூற்றாண்டு,
அகழ்வைப்பகம், கோயம்புத்தூர்



13. இலகுலீசா



15. உலகளந்த உத்தமர் செப்புத்திருமேனி, கி.பி. 8ஆம் நூற்றாண்டு, சிங்காநல்லூர்



16. கற்சிற்பங்கள் கி.பி.7 - 13 நூற்றாண்டுகள், அகழ்வைப்பகம், கோயம்புத்தூர்



17. காளி, கி.பி.12ஆம் நூற்றாண்டு, அகழ்வைப்பகம், கோயம்புத்தூர்



18. இராசகேசரிப் பெருவழிக்கல்வெட்டு, கி.பி.10ஆம் நூற்றாண்டு, சுண்டைக்காய்முத்தூர்



19. கோயில் படிக்கட்டுக் கைப்பிடியில் வட்டெழுத்துக் கல்வெட்டு, கி.பி.10ஆம் நூற்றாண்டு, ஆலத்தூர்



20. அத்திகோசத்தார் சின்னங்கள் (மைப்படி), கி.பி.10ஆம் நூற்றாண்டு, ஆனைமலை.



22. இடங்கைச் சாதியார் கல்வெட்டு, கி.பி.13ஆம் நூற்றாண்டு
அகழ்வைப்பகம், கோயம்புத்தூர்



23. வணிகர் கல்வெட்டுச் சின்னங்கள், கி.பி.14ஆம் நூற்றாண்டு,
எல்காம்வலசு, அகழ்வைப்பகம், கோயம்புத்தூர்



24. வாயில் மற்றும் தூண் கல்வெட்டுகள் (மைப்படி), கி.பி.13ஆம் நூற்றாண்டு, பேரூர்



25. எழுத்துடை நடுகல், கி.பி.16ஆம் நூற்றாண்டு, செலக்கெரிச்சல்



26. அடுக்குநிலை நடுகல், கி.பி.16ஆம் நூற்றாண்டு, ஆனைமலை



27. நடுகல் கி.பி.17ஆம் நூற்றாண்டு, அகழ்வைப்பகம், கோயம்புத்தூர்



28. பண்டைய செங்கற்கள் கி.பி. 3-12ஆம் நூற்றாண்டுகள், அகழ்வைப்பகம், கோயம்புத்தூர்



29. வீரசோழீசுவரம், கொழுமம்



30. அழகிய படிக்கட்டு மற்றும் சோபானத்துடன் உள்ள கோயில், கொழுமம்



31. கல்வெட்டுள்ள பூக்கட்டும் கற்பலகை, கொழுமம்



ரோமானிய மோதிரம், வெள்ளலூர்



கால்கள் உள்ள கலம், பெருங்கற்காலம், அகழ்வைப்பகம், கோயம்புத்தூர்

## துறையின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | Alagankulam - An ancient Roman port city of Tamil Nadu | 94.00 |
| 2. | Excavatioins of Archaeological Sites in Tamil Nadu | 66.00 |
| 3. | Rock Art of Tamil Nadu | 53.00 |
| 4. | கல்வெட்டு காலாண்டு இதழ் – 63 | 5.00 |
| 5. | கல்வெட்டு காலாண்டு இதழ் – 64 | 5.00 |
| 6. | கல்வெட்டு காலாண்டு இதழ் – 65 | 5.00 |
| 7. | கோவை மாவட்டத் தொல்லியல் கையேடு | 41.00 |
| 8. | தஞ்சாவூர் வட்டக் கல்வெட்டுகள் | 54.00 |
| 9. | தமிழ்நாட்டுக் கல்வெட்டுகள் 2004 | 136.00 |
| 10. | தமிழகச் செப்பேடுகள் – தொகுதி 1 | 52.00 |
| 11. | தரங்கம்பாடி ஓலை ஆவணங்கள் | 28.00 |
| 12. | ஜம்பை ஓர் ஆய்வு | 30.00 |
| 13. | பாபநாசம் கல்வெட்டுகள் – தொகுதி 1 | |